    

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் க்ருஷ்ணஸூரயே நம:

பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்திமாலா — மலர் 1
ரஹஸ்யவிபாகம் — முதல் பாகம்

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த
எட்டு ரஹஸ்ய க்ரந்தங்கள்:—

# பரந்த ரஹஸ்யம்
# மாணிக்கமாலை
# ஸகலப்ரமாணதாத்பர்யம்
# ரஹஸ்யத்ரயதீபிகை
# ரஹஸ்யத்ரய விவரணம்
# நிகமனப்படி
# வார்த்தாமாலை
# உபகார ஸ்ம்ருதி

பதிப்பாசிரியர்:—
(லேட்) ஸ்ரீ.உ.வே. K. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமி, அட்வகேட்

கிடைக்குமிடம்:—
ஸ்ரீ S. கிருஷ்ணஸ்வாமி அய்யங்கார், M. A., B. L.,
அட்வகேட்,
3 புத்தூர் அக்ரஹாரம், திருச்சி-17.

விலை ரூ. 1-50. ★ தபாற்கூலி 0-35.

## பதிப்பாசிரியரின் முகவுரை.

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத்க்ருஷ்ணஸூரயே நம:

'பெரியபெருமாள், பெரியாழ்வார், பெரியவாச்சான்பிள்ளை என்பர் அவரவர்தம் பெருமையினுல்' என்று பெரியோர் பணிப்பர். ஸ்ரீவைஷ்ணவ ஸித்தாந்த விசிஷ்டாத்வைத வேதாந்தப்ரவசனம் செய்த மஹாநுபாவர்களில் தலைமை வகித்தவர் பெரியவாச்சான்பிள்ளை. பேதை பாமரரும் உணரும்படி ஸுலபமான நடையில் ஸம்ஸ்க்ருதமும் தமிழும், மணியும் பவளமும்போல், கலந்த மணிப்ரவாள பாஷையில் ஸ்ரீஸூக்திகளை அருளிச்செய்தவர் இவர். வ்யாக்யான சக்ரவர்த்தி என்ற சிறப்புப்பெற்றவர் இப்பெரியார். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு 'திருப்பல்லாண்டு' முதலிய நாலாயிரதிவ்யப்ரபந்தங்களையொழிய பகவானை அறிவதற்கு வேறு வழியில்லை. திவ்யப்ரபந்தங்களும், கீர்வாண வேதமும் சேர்ந்து உபயவேதாந்தங்கள் என்று கீர்த்திபெற்றிருக்கின்றன. திவ்யப்ரபந்தங்களின் தாத்பர்யங்களை அறிவதற்கு பூர்வாசார்ய பரம்பரையாகவும், ஆசார்யநியமனப்படியும், பெரியவாச்சான்பிள்ளையால் அருளிச்செய்யப்பட்ட வியாக்யானங்களைத்தவிர வேறு புகலில்லை. மணவாளமாமுனிகளும் இவருடைய வியாக்யானங்களாலேயே அருளிச்செயல் நமக்கு அருளிச்செயலாயிற்று என்று உபதேசரத்னமாலையில் உபதேசித்திருக்கிறுர். பிள்ளைலோகாசாரியர், வேதாந்த தேசிகர் முதலியவர்கள் ரஹஸ்யங்கள் அருளிச்செய்வதற்கு வெகு காலத்திற்கு முன் பெரியவாச்சான்பிள்ளை இருபது ரஹஸ்யங்களுக்கு மேல் அருளிச்செய்திருக்கிறபடியால் ஸத்ஸம்ப்ரதாய மூலமாகக் கிடைத்த ரஹஸ்யங்களை அறிவதற்கும் பெரியவாச்சான்பிள்ளை ரஹஸ்யங்களை யொழிய வேறு கதி இல்லை. ஆகையால் ஸ்ரீவைஷ்ணவர்களெல்லாரும் இவருடைய ஸம்பந்தம் பெற்று இவருக்கு சிஷ்யஸந்தானமாயிருப்பார்கள்.

இவர், தஞ்சாவூர் ஜில்லாவில் திருவெள்ளியங்குடிக்கருகே சங்கநல்லூர் என்னும் கிராமத்தில் ஸர்வஜித் வருஷம் ஸிம்ஹ (ஆவணி) மாஸம் க்ருஷ்ணபக்ஷம் அஷ்டமியும், ரோஹிணி நக்ஷத்ரமும் கூடிய சுபதினத்தில் ஸ்ரீஜயந்தியன்று பூர்வசிக ஸ்ரீவைஷ்ணவ குலத்திலே, யாமுனதேசிகருக்கும், நாச்சியாரம்மாளுக்கும் திருக்குமாரராய் அவதரித்தருளினுர். கண்ணன் அவதரித்த தினத்தில் அவதரித்தருளினபடியால் 'க்ருஷ்ணர்' என்று திருநாமமிடப்பட்டார். இவருடைய திருநாமங்கள்:— அபயப்ரதராஜர், க்ருஷ்ணஸூரி, பெரியவாச்சான்பிள்ளை முதலியவை. நம்பிள்ளை இவருடைய ஆசார்யர். திருவாராதனம்:— க்ருஷ்ணவிக்ரஹம். இவருடைய திருக்குமாரர் நயினராச்சான்பிள்ளை. இவருடைய சரித்ரம் விரிவாகப் பின்பு வெளியிடப்படும்.

இப்போது நமக்குக் கிடைத்திருக்கும் எட்டு ரஹஸ்யங்கள் மட்டும் இங்கு வெளியிடப்பட்டிருக்கின்றன. பரந்த ரஹஸ்ய விவரணம், நவரத்னமாலை, சரமரஹஸ்யம், அநுஸந்தான ரஹஸ்யம், தத்வத்ரயவிவரணம், உபகாரரத்னம் என்று இவர் அருளிச்செய்த ஆறு ரஹஸ்ய க்ரந்தங்கள் இருப்பதாக ஸ்ரீவைஷ்ணவ க்ரந்தமுத்ராபக ஸபையாரால் வெளியிடப்பட்ட, இவருடைய தனிச்லோகக்ரந்தத்தின் முகவுரையில் காணப்படுகிறது. பரந்த ரஹஸ்யம்

இதுவரையில் தமிழில் வெளிவரவில்லை. மாணிக்கமாலை, ஆச்சான்பிள்ளை எட்டு வார்த்தை, சரமரஹஸ்யம், ஆச்சான்பிள்ளை ரஹஸ்யம் என்னும் க்ரந்தங்கள் 1888-ம் வருஷத்தில் வெளியிடப்பட்ட நூற்றெட்டுத் திருப்பதிப்ரபாவம் என்னும் க்ரந்தத்தில் தமிழில் வெளியிடப்பட்டிருப்பதாகக் காணப்பட்டிருக்கிறது. நிகமனப்படி வியாக்யானத்துடன் வெளியிடப்பட்டிருப்பதாகவும் காணப்பட்டிருக்கிறது. இவைகள் நமக்கு இப்போது கிடைக்கவில்லை. கிடைக்கும் காலத்தில் வெளியிடுவோம். தெலுங்குலிபியில் அச்சிடப்பட்டிருந்த பரந்த ரஹஸ்யத்தையும், மாணிக்கமாலையையும் ஸ்ரீவைஷ்ணவர்களைக்கொண்டு எழுதுவித்து அனுப்பியும், இப்புத்தகத்திற்கு முகவுரை எழுதியும் ஸ்ரீ உ. வே. P. B. அண்ணங்கராசாரியார் ஸ்வாமி உதவியிருக்கிறார்.

மேலும், ராமசரமச்லோகத்துக்கு 'அபயப்ரதான ஸார'மும், பிராட்டியின் அபயப்ரதானச்லோகத்துக்கு வியாக்யானமும், வராஹசரமச்லோகவ்யாக்யானமும், த்ரௌபதி சரணாகதிச்லோகவ்யாக்யானமும் ரஹஸ்யங்களாயிருந்தபோதிலும், ராமாயண பாரத விஷ்ணுபுராண தனிச்லோகங்களுடன் சேர்த்துப் பிரசுரிக்கப்படும். அருளிச்செயல் வ்யாக்யானங்களில் பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்திருக்கும் ரஹஸ்யங்கள் அநேகம். அவைகளைத்தொகுத்துப் பின்பு வெளியிடுவோம்- பெரியவாச்சான்பிள்ளையின் ரஹஸ்ய க்ரந்தங்களை வெளியிடவேண்டுமென்று அடியேன் இருபது வருஷமாகக்கொண்ட மநோரதம் அவர் பிறந்த வருஷமாகிய ஸர்வஜித் வருஷத்தில் ஆரம்பிக்கப்பட்டு இப்பொழுது பூர்த்தியடைந்தது. இம்மாதிரியே அவருடைய ஸகலக்ரந்தங்களையும் வெளியிடுவதற்கு ஸ்ரீமந் நாராயணன் அருள்புரிவானாக.

இப்படிக்கு,
தொண்டரடிப்பொடி,
**கி. ஸ்ரீநிவாஸ அய்யங்கார்,**
அட்வகேட்,
3, புத்தூர் அக்ரஹாரம், திருச்சி.

ஸர்வதாரி-ஹு
ஆனி-மீ 21-உ

# முகவுரை.

* ஆவாரார் துணையென்று அலைநீர்க் கடலுளழுந்தும் நாவாய் போல் பிறவிக்கடலுள் நின்று துளங்கும் நாம் நல்வீடு பெறுவதற்குப் பல பல விஷயங்கள் தெரிந்துகொள்ள வேண்டியவையுண்டு. அவற்றுள் மிக முக்கியமாகத் தெரிந்துகொள்ளவேண்டிய ஐந்து அர்த்தங்களே "அர்த்த பஞ்சகம்" எனப்படும். பரமாத்மஸ்வரூபம், ஜீவாத்ம ஸ்வரூபம், உபாயஸ்வரூபம், புருஷார்த்தஸ்வரூபம், விரோதிஸ்வரூபம் என்னும் ஐந்து அர்த்தங்களே அர்த்த பஞ்சகமாம். இவற்றை உள்ளபடி தெரிந்துகொள்வதே நல்வீடு பெறுதற்கு நல்ல ஸாதனமென்று மஹர்ஷிகள் நிர்ணயித்துள்ளார்கள்.

இவ்வர்த்தபஞ்சக ஜ்ஞானத்தை விரிவாக விளைவிப்பதற்காகவே உஜ்ஜீவநசாஸ்த்ரங்களான பலவும் தோன்றியிருக்கின்றன. வேதங்களும் அவற்றுக்கு உபப்ரும்ஹணங்களான இதிஹாஸ புராணங்களும் திவ்யப் பிரபந்தங்களுமாகிய ஸகலப்ரமாணங்களும் மேற்சொன்ன அர்த்தபஞ்சகத்தை விசதீகரிப்பதற்கென்றே அவதரித்தனவாம். "மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர் நிலையும், தக்க நெறியும் தடையாகித் தொக்கியலும் ஊழ்வினையும் வாழ்வினையு மோதுங் குருகையர் கோன் யாழினிசை வேதத்தியல்." என்ற திருவாய்மொழித் தனியனும் காண்க.

இவ்வர்த்தபஞ்சகம் இதரசாஸ்த்ரங்கள் பலவற்றிலிருந்தும் அறியக்கூடுமானாலும் திருமந்த்ரம், த்வயம், சரமச்லோகம் என்கிற ரஹஸ்யத்ரயத்திலிருந்து இதனையறிவதே மிகச் சிறந்ததென்று நம் பூருவாசாரியர்கள் திருவுள்ளம் பற்றினார்கள். இந்த ரஹஸ்யத்ரயமும் பேரருட்கடலான எம்பெருமானாலே இந்நிலவுலகில் பிரவர்த்திப்பிக்கப்பட்டது. இந்த ரஹஸ்யத்ரயம் சொல்வடிவில் சுருங்கியிருந்தாலும் ஆழ்ந்த அரிய பெரிய பொருள்களையுடையதாதலால் ஸகலசாஸ்த்ரக்கடல்களையும் கரைகண்டவர்களான நம் பூருவாசாரியர்கள் இதன் ஆழ்பொருள்களையறிந்து பரமகிருபையாலே தம் அடிபணிந்தார்க்கும் அருமருந்தாக உபதேசித்துவந்தார்கள். எம்பெருமானார்க்கு முன்னேயிருந்த ஆசிரியர்கள் இந்த ரஹஸ்யத்ரயத்தின் சீரிய பொருள்களை மிகவும் சேமித்துவைத்துக்கொண்டிருந்து ஏகாந்தமாகவே உபதேசித்துப் போந்தார்கள். எம்பெருமானார் தாம் தம்முடைய விசாலமான திருவுள்ளத்தினால் ஸகலஸம்ஸாரிகள் பக்கலிலும் கருணை கரைபுரண்டு வரம்பு கடந்து தாம் உபதேசித்தும் தம்முடைய சிஷ்யர்களைக்கொண்டு உபதேசிப்பித்தும் போந்தார். இவ்விஷயம் மணவாள மாமுனிகளால் "ஓராண் வழியாயுபதேசித்தார் முன்னோர், ஏராரெதிராசரின்னருளால்— பாருலகில், ஆசையுடையோர்க் கெல்லாமாரியர்காள்! கூறுமென்று, பேசி வரம்பறுத்தார் பின்." என்கிற உபதேசரத்தினமாலைப் பாசுரத்தினால் மூதலிக்கப்பட்டது.

அவ்வெம்பெருமானார் காலந்தொடக்கி ஸம்ப்ரதாயார்த்தவிசேஷங்கள் விரிவாகவே உபதேசிக்கப்பெற்றாலும் ரஹஸ்யத்ரயத்தின் அர்த்தவிசேஷங்களை அக்காலத்தில் க்ரந்தரூபமாக்கிப் பின்புள்ளார்க்கும் பயன்படுமாறு உபகரித்தார் யாருமில்லை. பிற்காலத்தில் அப்படி உபகரித்தவர்களில் தலைவர் பெரியவாச்சான்பிள்ளையாவர். அஷ்டாதச ரஹஸ்ய கர்த்தாவும் பெரியவாச்சான்பிள்ளைக்கு ஸப்ரஹ்மசாரியான வடக்குத் திருவீதிபிள்ளைக்குத் திருக்குமாருமான பிள்ளைலோகாசார்யர் ரஹஸ்யக்ரந்தங்களை விபுலமாக வெளியிட்டு

அருளினவரென்று ப்ரஸித்தியிருந்தாலும் அவருடைய திவ்யக்ரந்தங்களுக்கும் மூலமாக ரஹஸ்யக்ரந்தத்தை முதன்முதலாக அருளிச்செய்தவர் பெரியவாச்சான்பிள்ளையென்னத் தட்டில்லை.

இவர் நம்பிள்ளை திருவடிகளிலே ஸகலசாஸ்த்ரார்த்தங்களுமுணரப்பெற்று விளக்கில் கொளுத்தின தீவட்டிபோலே மிக விளங்கி ஆழ்வார்களருளிச்செயல்களெல்லாவற்றிற்கும் வியாக்யானமருளிச்செய்த பேராசிரியர் என்பது உலகமறிந்தது. இவருடைய ப்ரபாவம் வாசாமகோசரம். இவரருளிச்செய்த ரஹஸ்யங்களில் தலையானது பரந்தரஹஸ்யமென்பதாம். இதனை மணவாளமாமுனிகள் முமுக்ஷுப்படி வியாக்யானம் முதலியவற்றில் பலகால் எடுத்தாளக் காணாநின்றோம். மற்றுஞ்சில சிறு ரஹஸ்யங்களும் இவர் தாமருளிச்செய்தவை யுண்டு. இவை தெலுங்கு லிபியில் அச்சிடப்பட்டிருக்கின்றனவேயன்றி இதுகாறும் தமிழ் லிபியில் அச்சிடப்படவில்லை.

பெரியவாச்சான்பிள்ளையின் திவ்யக்ரந்தங்களையெல்லாம் ஒருங்கே அச்சிடவேணு மென்று பேரவாக்கொண்டு பெருமுயற்சி செய்துவரும் உலகம் நிறைந்த புகழாளர், நமது ஆருயிர் நண்பர், உபய வேதாந்த ரஹஸ்ய வேத்தா ஸ்ரீமான் உ. வே. (புத்தூர் அக்ரஹார திலகரான) கே. ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமிகள் முதன்முதலாக இந்த ரஹஸ்யக்ரந்தங்களை அச்சிடுவித்து ஸ்ரீவைஷ்ணவவுலகுக்குச் செய்யும் பெருநன்றி என்ஞான்றும் கைம்மாறிலாதது. இங்ஙனமே மேன்மேலும் இம்மஹநீயருடைய முயற்சிகள் யாவும் விரைவில் ஸபலமாகுக.

இங்ஙனம்,
ஸ்ரீவைஷ்ணவதாஸன்,
ஸ்ரீகாஞ்சி பிரதிவாதிபயங்கரம்,
அண்ணங்கராசாரியன்.
15—6—48.

## பெரியவாச்சான்பிள்ளையின் வாழித்திருநாமம்.

தண்மை சிங்கம் ரோகிணி நாள் தழைக்க வந்தோன் வாழியே.
தாரணியில் சங்கநல்லூர் தானுடையோன் வாழியே.
புன்மை தவிர் திருவரங்கர் புகழுரைப்போன் வாழியே.
பூதூர் எதிராசர்தாள் புகழுமவன் வாழியே.
மன்புகழ் சேர் சடகோபர் வளமுரைப்போன் வாழியே.
மறை நாலின் பொருள்தன்னைப் பகுத்துரைத்தான் வாழியே.
அன்புடன் உலகாரியர்தம் அடியிணையோன் வாழியே.
அபயப்ரதராஜர் தாள் அனவரதம் வாழியே.

## இவர் திருநக்ஷத்ர தனியன்.

ஸகலத்ராவிடாம்நாயஸாரவ்யாக்யாநகாரிணம்
ச்ராவணே ரோஹிணீஜாதம் க்ருஷ்ணஸம்ஜ்ஞமஹம் பஜே.



ஸ்ரீ:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# ஸ்ரீமத் பெரியவாச்சான்பிள்ளை

அருளிச்செய்த

# பரந்த ரஹஸ்யம்.

---

ஸ்ரீமத்-க்ருஷ்ண-ஸமாஹ்வாய நமோ யாமுந-ஸூநவே |
யத்-கடாக்ஷைக-லக்ஷ்யாணாம் ஸுலபச்-ச்ரீதரஸ்-ஸதா ||

## அவதாரிகை.

நிர்ஹேதுகபகவத்ப்ரஸாதமடியாக வேதபாஹ்யமான ஸாங்க்யாதிதர்சனங்களில் விமுகனாய், நிர்தோஷப்ரமாணமான வேதத்தில் புகுந்து, அதில் பந்தகமான ஸ்வர்காதி க்ஷுத்ரபுருஷார்த்தங்களையும் தத்ஸாதனங்களையும் ப்ரதிபாதிக்கிற பூர்வகாண்டத்தில் ப்ரயோஜனமில்லாமையாலே ஜ்ஞானபாகத்திலே புகுந்து, அதிலும் ஐச்வர்யத்திற்காட்டில் நித்யத்வாதிகளாலே சிறிது அதிகமான கைவல்யத்தையும் தத்ஸாதனத்தையும் விட்டு, அவ்வைச்வர்ய கைவல்யங்களைப் போலன்றியிலே ஸ்வரூபாநுரூபமான பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷத்திலே ருசியுடையனாய், தத்ஸாதனமான கர்மஜ்ஞானாதிகளுடைய துஷ்கரத்வாத்யநுஸந்தானத்தாலே க்லிஷ்டனாய், ஸ்வரூபாநுரூபமான உபாயத்திலே ருசியுடையனாயிருக்கும் அதிகாரிக்கு, அபிமதமாய் அநுரூபமாயிருந்துள்ள அந்த உபாயோபேயங்களைத் தனித்தனியே ஜ்ஞாபிக்கிற ரஹஸ்யத்ரயமும் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

தனித்தனியே உபாயோபேயங்களைச் சொல்லுகிறதாகில் அவற்றில் ஒன்று ஜ்ஞானகோசரமாக அமைந்திருக்க, மூன்றும் ஜ்ஞாதவ்யமாகவேண்டுகிறது என்னென்னில்: புபுத்ஸு, ஓர் அர்த்தத்திலே நிஷ்டனாகைக்கு அநுரூபமான ப்ரமாணங்கள் அநேகங்கள் அபேக்ஷிதங்களாகையாலே, அவ்வோப்ராமாண்யபேதத்தாலே மூன்றும் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

அதில் திருமந்த்ரம் " ருசோ யஜூம்ஷி ஸாமானி ததைவாதர்வணானி ச | ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம் || " என்று ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமாகையாலே சாஸ்த்ரமுகத்தாலே ப்ரமாணமாகக்கடவது. இம்மந்த்ரம் சாஸ்த்ரத்வாரா ப்ரமாணமாகிறதாகில், சாஸ்த்ரங்களிலே இந்த உபாயோபேயங்களை ப்ரதிபாதிக்கிற சில வாக்யங்கள் ப்ரமாணமாக அமைந்திருக்க, இம்மந்த்ரத்தையே நிர்பந்திக்கைக்கு ஹேது என்னென்னில்: அவ்வாக்யங்களைக்கொண்டு அர்த்தநிர்ணயம் பண்ணப்பார்க்கில் அவை பூர்வபாகத்திலேயாகில், ஸகலசாகாப்ரத்யய

ந்யாய ஸஞ்சாரத்தாலே ஸஞ்சரித்து அர்த்தநிர்ணயம் பண்ணவேண்டும். உத்தரபாகத்திலேயாகில், ஸகலவேதாந்தப்ரத்யயந்யாயம் ஸஞ்சரித்து அர்த்தநிர்ணயம் பண்ணவேண்டும்.

அதில் ஸகலசாகாப்ரத்யயந்யாயமாகிறது: ஒரு வாக்யத்திலே ஓரர்த்தத்தைச் சொன்னால், அதினுடைய அங்கோபாங்காதிகளை நேராக அறிகைக்காக, சாகாந்தரங்கள் எல்லாவற்றிலும் ஸஞ்சரித்து, அவற்றில் சொல்லுகிற அர்த்தங்களிலும் ஜ்ஞானம் பிறந்து, அவ்வர்த்தங்களுக்கு அந்யோந்யம் பிறக்கும் விரோதங்களையும் சமிப்பித்து, தனக்கபிமதமான அங்கியோடே சேருமவற்றைச் சேர்க்கையிறே. அது, எலியெலும்பனுயிருப்பானொருவனால் செய்து தலைக்கட்டுவதொன்றன்று. அப்படியே ஸகலவேதாந்தப்ரத்யயமாகிறதும்:— ஒரு வேதாந்தத்திலே ஒரு வாக்யம் ஓரர்த்தத்தைச் சொன்னால், அல்லாத வேதாந்தங்களிலும் ஸஞ்சரித்து, அவற்றில் சொல்லுகிற அர்த்தங்களுக்கு அந்யோந்யம் விரோதம் பிறவாதபடி விஷயவிபாகம் பண்ணி, தனக்கு அபிமதங்களான அர்த்தங்களோடே சேருமவற்றைச் சேர்க்கையிறே.

ஆக, இந்ந்யாயத்வயம் அபேக்ஷிதமாகையாலே, அது துஷ்கரமாய் ஒரு வாக்ய மாத்ரங்கொண்டு அர்த்தநிர்ணயம் பண்ணுகை அசக்யமாகையாலும், "ருசோ யஜூம்ஷி ஸாமாநி" இத்யாதியில் சொல்லுகிறபடியே ஸகலசாஸ்த்ரஸாரதயா ப்ரமாணஸித்தமாய், ஸர்வராலும் அவிகீதமாக ஸ்வீக்ருதமான இம்மந்த்ரத்திலே உக்தமான அர்த்தத்துக்கு அப்படி க்லேசஸாத்யதை இல்லாமையாலும், இம்மந்த்ரமே நிரபேக்ஷப்ரமாணமாகக் கடவது.

இப்படி ஸூத்ருடமாக ச்ருதிஸித்தமேயாகிலும், அது ஒருவனுக்கு உபாதேயமாம் போது சிஷ்டாசாரகோசரமாகவேணுமென்னுமிடம், "யதா தே தேஷு வர்த்தேரந்— ததா தேஷு வர்த்தேதா:. யதா தே தத்ர வர்த்தேரந்—ததா தத்ர வர்த்தேதா:." இத்யாதிகளிலே சிஷ்யனுக்குக் கர்த்தவ்யங்களை விதிக்கிற ப்ரதேசத்திலே "அவர்கள் யாதொருபடி அவற்றிலே வர்த்திப்பார்கள், நீயும் அப்படியே அவற்றிலே வர்த்தி" என்றும் "அவர்கள் யாதொருபடி அவற்றிலே வர்த்திப்பார்கள், அவ்விடத்திலே நீயும் அப்படி வர்த்தி" என்றும் உக்தமாகையாலும், அஷ்டகையில் பசுவிசஸநம் சிஷ்டபரிக்ரஹமில்லாமையாலே, அநுஷ்டிக்கில் ஸ்வரூபஹாநியாம்படியாகையாலும், "சிஷ்டாசாரம் ப்ரமாணம்" என்று சிஷ்டாசாரத்தையே ப்ரதான ப்ரமாணமாக மீமாம்ஸகர் சொல்லுகையாலும், ஸகலசாஸ்த்ர ஸங்க்ரஹமான திருமந்த்ரத்திலே உக்தமான அர்த்தத்துக்கு சிஷ்டாசாரம் அபேக்ஷித மாகையாலே, இவ்வர்த்தத்துக்கு சிஷ்டாசாரத்வாரா ப்ரமாணமாகிறது த்வயம்.

ஆசார்யருசிபரிக்ருஹீதமான அர்த்தத்துக்கு சரண்யாபிமதத்வ ப்ரகாசகமான சரமச்லோகம், சரண்யாநுமதித்வாரா ப்ரமாணமாகிறது. சாஸ்த்ரஸித்தமுமாய் சிஷ்டாசார ஸித்தமுமான அர்த்தம் சரண்யாபிமதமாயன்றே இருப்பது; ஆனால் ததபிமதமாகைக்குத் தனியே ஒரு ப்ரமாணபேக்ஷை உண்டோ? என்னில் "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" என்று விஹிதமுமாய், ஸ்வர்க்கார்த்தமாக ஜ்யோதிஷ்டோமாதிகளை அநுஷ்டிப் பாருமுண்டாய், தத்தத்கர்மஸமாராதிதனாய், அவ்வோருக்கு பலப்ரதனாய்ப் போராநிற்கச் செய்தேயும், "யாமிமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்தி விபச்சித: வேதவாதரதா: பார்த்த நாந்யதஸ்தீதி வாதிந:. காமாத்மாநஸ்ஸ்வர்கபரா:" என்று க்ஷேபிக்கக் காண்கையாலே, அப்படியே அநபிமதமாயிருப்பதொன்றன்று என்கைக்கு சரண்யாநுமதி அபேக்ஷிதமிறே.

ஆக, இப்படி அர்த்ததார்ட்யஹேதுபூதமான ப்ராமாண்யம் இவை மூன்றுக்கும் தனித்தனியே உண்டாகையாலே, இம்மூன்றும் ஜ்ஞாதவ்யமாகக்கடவது. கிஞ்ச, திருமந்த்ரம், ஸ்வரூபயாதாத்ம்ய ப்ரதிபாதகபரமாகையாலும், த்வயம் உபேயயாதாத்ம்ய ப்ரதிபாதகபரமாகையாலும், சரமச்லோகம் உபாயயாதாத்ம்யப்ரதிபாதகபரமாகையாலும், இம்மூன்றும் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

இவ்வர்த்தத்தை சாஸ்த்ரஸித்தமாக்குகிறது—திருமந்த்ரம்; உபப்ரும்ஹணஸித்தமாக்குகிறது—சரமச்லோகம்;ஸ்வாநுஷ்டானமாக்கித் தருகிறது—த்வயம். ப்ரணவத்துக்கு மந்த்ரசேஷம் விவரணமானாப்போலே, மந்த்ரசேஷத்தை த்வயம் விவரிக்கையாலும், த்வயார்த்தத்தை சரமச்லோகம் விவரிக்கையாலும் இம்மூன்றும் ஜ்ஞாதவ்யமாகக்கடவது.

இவற்றில் வைத்துக்கொண்டு ப்ரதமாநுஸந்தேயமான மந்த்ரரஹஸ்யம், "ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்ஸ்தம்" என்கிறபடியே ஸகலார்த்தப்ரதிபாதகமான சாஸ்த்ரங்களோடு, அவ்வோ சாஸ்த்ரப்ரதிபாத்யமான அர்த்தங்களோடு வாசியறத் தனக்குள்ளே உடைத்தாகையாலும், "ஸகலபலப்ரதோ ஹி விஷ்ணு:" என்கிற ப்ரமேயவஸ்துவைப்போலே, "ஐஹலௌகிகமைச்வர்யம் ஸ்வர்காத்யம் பாரலௌகிகம், கைவல்யம் பகவந்தஞ் ச மந்த்ரோயம் ஸாதயிஷ்யதி." என்கிறபடியே ஸகலபுருஷார்த்தங்களுக்கும் ஏகஸாதநமாகையாலும், "நாராயணாய வித்மஹே வாஸுதேவாய தீமஹி, தந்நோ விஷ்ணு: ப்ரசோதயாத்" என்று, முமுக்ஷுக்களுக்கு உபாதேயதமமாக விஷ்ணுகாயத்ரியிலே ஓதுகிற வ்யாபகமந்த்ரங்களிலே ப்ரதமோபாத்தமாகையாலும், ஈச்வரனுடைய ஓரோகுணங்களுக்கு ப்ரதிபாதகமாயும், பந்தகபலார்த்திகளுக்கு ஒதுக்கி உபதிஷ்டமாயும் போருகிற "அநந்தா வை பகவந்மந்த்ரா:" என்கிற பகவந்மந்த்ராந்தரங்களிற்காட்டில் நெடுவாசி உண்டு. அதுக்கு மேலே வ்யாபகாந்தரங்களிற்காட்டிலும் அர்த்தபௌஷ்கல்யத்தாலே நெடுவாசியுண்டு. அவற்றிற்காட்டில் இதுக்கு அர்த்தபூர்த்தியாலுண்டான வாசி ஏதென்னில்: ஷடக்ஷரி,வ்யாப்யபதார்த்தங்களையும்,வ்யாபகப்ரகாரத்தையும், வ்யாப்திபலத்தையும், வ்யாபகனுடைய குணங்களையும் சொல்லாதே, வ்யாப்திமாத்ரப்ரகாசகமாகையாலே அபூர்ணம். வ்யாபகப்ரகாரத்தைச் சொல்லாநிற்கச் செய்தேயும், வ்யாப்யபதார்த்தங்களுக்கு வாசகசப்தமில்லாமையாலும், "ஸர்வம் வஸதி" என்று, அர்த்தபலத்தாலே ஸர்வசப்தம் புகுந்தாலும், அதில் குணம் அந்வயியாமையாலும், இனி குணஸித்திக்காக பகவச்சப்தத்தைக் கூட்டிக்கொள்ளவேண்டுகையாலும், வ்யாப்திபலத்தைச் சொல்லாமையாலும், திருத்வாதசாக்ஷரியும் அபூர்ணம். இம்மந்த்ரம், அவைபோலன்றியே, வ்யாப்யபதார்த்தங்களோடு வ்யாபகப்ரகாரத்தோடு வ்யாப்திபலத்தோடு வ்யாபகனுடைய குணங்களோடு வாசியற சாப்தமாகக் காட்டுகையாலே, அல்லாத வ்யாபகமந்த்ரங்களைக் காட்டில் இதுக்கு அர்த்தபௌஷ்கல்யநிபந்தநமான ஆதிக்யமுண்டு.

இவ்வாதிக்யமில்லையானாலும் "ஆசார்யவாந் புருஷோவேத" "ஆசார்யாத்தைவ வித்யா விதிதா ஸாதிஷ்டம் ப்ராபத்" என்று, ஆசார்யோபதிஷ்டமாய்ப் போருமர்த்தமே ஒருவனுக்கு உஜ்ஜீவநஹேதுவாயறுவது. அதில் இவ்வாசார்யர்கள் இம்மந்த்ரத்திலே நிஷ்டராய் இத்தையே தஞ்சமாக உபதேசித்துப் போருகையாலே, கீழ்ச்சொன்ன ஆதிக்யமில்லையேயாகிலும், ஆதரிக்க வேண்டும்படியாயிருப்பதோர் ஏற்றமுண்டு.

ஸர்வஜ்ஞரான ஆசார்யர்கள் தாங்கள் இம்மந்த்ரத்திலே நிஷ்டராய்ப் போருகைக்கு ஹேது என்னென்னில்: கரதலாமலகம் போலே பகவத்ப்ரஸாதத்தாலே தத்வஸாக்ஷாத்காரம் பண்ணின ஆழ்வார்கள், ஒருமிடறாக இம்மந்த்ரத்தையே ஆதரித்துப் போருகையாலே, இவர்களும் தந்நிஷ்டராய்ப் போந்தார்கள்.

ஆழ்வார்கள் ஆதரித்துப் போந்தபடி என்னென்னில்: "வண்புகழ் நாரணன்" "செல்வ நாரணன்" என்று தொடங்கி, "வாழ்புகழ் நாரணன்" என்றும் முடிவாக, ஆதிமத்யாவஸாநமாக இம்மந்த்ரத்தையே நம்மாழ்வார் ஆதரித்து போந்தார். "நாடுநகரமும் நன்கறிய நமோ நாராயணாய" என்று தொடங்கி, "ஓவாதே நமோ நாரணா" என்று பெரியாழ்வாரும், "நாராயணனே நமக்கே பறை தருவான்" என்று தொடங்கி, "என்னை நலங்கொண்ட நாரணற்கு" என்று நாச்சியாரும், "நான் கண்டுகொண்டேன் நாராயணாவென்னும் நாமம்" என்று உபக்ரமதசையிலே ஒருகால் சொன்னப்போல் ஒன்பதின்கால் சொல்லி, "நாராயணா! ஓ! மணிவண்ணா! நாகணையாய்! வாராய்!" என்று திருமங்கையாழ்வாரும் "நாத்தழும்பேழ நாரணா" என்று தொடங்கி, "நலந்திகழ் நாரணன்" என்று பெருமாளும், "நான்முகனை நாராயணன் படைத்தான்" என்று தொடங்கி, "எட்டெழுத்தும்—ஓதுவார்கள் வல்லர் வானமாளவே" என்று திருமழிசைப்பிரானும், "நன்மாலை பல கொண்டு நமோ நாரணா" என்று தொடங்கி, "நாமம் பல சொல்லி நாராயணா" என்று முதலாழ்வார்களும், உபக்ரமத்தோடு உபஸம்ஹாரத்தோடு வாசியற ஆதரித்துப் போந்தார்கள்.

ஆழ்வார்கள் ஆதரிக்கைக்கடி தத்வப்ரதிபாதகமான வேதாந்தங்கள் ஆதரிக்கை. அவை ஆதரித்தபடி என்னென்னில்: "விச்வம் நாராயணம்" என்று தொடங்கி— "நாராயணபரம் ப்ரஹ்ம தத்வம் நாராயண: பர:, | நாராயணபரோ ஜ்யோதி: ஆத்மாநாராயண: பர: | யச்ச கிஞ்சி ஜ்ஜகத்யஸ்மிந் த்ருச்யதே ச்ரூயதேऽபி வா | அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:||" என்று ஸகலவேதாந்தநிகமநபூதமான நாராயணாநுவாகத்திலும், "ஏகோ ஹ வை நாராயண ஆஸீத் | ந ப்ரஹ்மா நேசாந: | நேமே த்யாவாப்ருதிவீ |" என்று மஹோபநிஷத்திலும், "சக்ஷுச்ச த்ரஷ்டவ்யஞ்ச நாராயண: | ச்ரோத்ரஞ்ச ச்ரோதவ்யஞ்ச நாராயண: |" என்று தொடங்கி, "திசச்ச ப்ரதிசச்ச ஸர்வம் நாராயண:" என்று முடிவாக நடுவுடைய ஸுபாலோபநிஷத்திலும், "யஸ்யாத்மா சரீரம் | யஸ்ய ப்ருதிவீ சரீரம் |" என்று தொடங்கி "யஸ்ய ம்ருத்யுச்சரீரம்" என்கிறதீறாக நடுவுள்ள பர்யாயங்கள் தோறும் "ஏஷ ஸர்வபூதாந்தராத்மா அபஹதபாப்மா திவ்யோ தேவ ஏகோ நாராயண: ||" என்று அந்தர்யாமிப்ராஹ்மணத்திலும் ஏககண்டமாக ஆதரித்துப் போந்தது.

"ஆசார்யவாந் புருஷோ வேத" "உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞாநிநஸ்தத்வ தர்சிந: |" என்று, ஸாக்ஷாத்க்ருததத்வராயிருக்கும் ஆழ்வார்களுடைய ஆதரவிஷயம் இம்மந்த்ரமென்று சொன்ன பின்பு, இவர்களுக்கு ஸம்வாதமாக வேதாந்தங்களை எடுக்கக் கடவதோ? ஆயிருக்க இவர்களுக்கு ஸம்வாதமாக வேதாந்தங்களை ப்ரமாணமாக எடுப்பானென்னென்னில்: "ஸ்ம்ருத்யநவகாசதோஷப்ரஸங்க இதி சேந்நாந்யஸ்ம்ருத்யநவகாசதோஷப்ரஸங்க: |" "இதரேஷாம் சாநுபலப்தே: |" என்கிற அதிகரணத்திலே ப்ரதாநகாரணவாத நிராகரணம் பண்ணில், "ருஷிம் ப்ரஸூதம் கபிலம்" இத்யாதிகளிலே ஆப்ததயா ச்ருதனாய்,

ஸ்வயோகபலத்தாலே ஸாக்ஷாத்க்ருததத்வனை கபிலனுடைய, வேதார்த்தோபப்ரும்ஹணார்த்தமாக ப்ரவ்ருத்தையான ஸ்ம்ருதியை அநாதரிக்க வேண்டும்; அத்தாலே ஸ்ம்ருத்யநவகாசதோஷம் வரும்; என்கிற ஸாங்க்யரைக் குறித்து, கபிலஸ்மிருதியை ஆதரிக்கில், "யத் வை கிஞ்சிந்மநுரவதத் தத் பேஷஜம்" என்று ஆப்தராக ச்ருதிஸித்தராய், ஸ்வயோகமஹிமஸாக்ஷாத்க்ருததத்வரான மந்வாதிகளுடைய ப்ரஹ்மகாரணத்வவாதிகளான ஸ்ம்ருதிகளை அநாதரிக்க வேண்டி வருமாகையாலே, வேதார்த்தாநுஸாரம் பண்ணிப்போருகிற மந்வாதி ஸ்ம்ருதிகள் உபாதேயமாகக்கடவது; ச்ருதிவிருத்தையான காபிலஸ்ம்ருதி, ப்ராந்திமூலையாகையாலே, கழியுண்ணக்கடவது என்று அங்கு நிர்ணயித்தபடியே, தத்வஸாக்ஷாத்காரம் பண்ணி, ஆப்ததமரான ஆழ்வார்களாலே ஆதரிக்கப்பட்டதேயாகிலும், இம்மந்த்ரம் வேதாந்தவிருத்தமாகில் அநாதரணீயமாகக்கடவது; அங்ஙனன்றிக்கே வேதாந்தங்களாலே ஏககண்டமாக ஆதரிக்கப்படுகையாலே, இவர்கள் ஆதரித்ததே அர்த்தம் என்னுமிடத்துக்கு ஸம்வாதமாக வேதாந்தங்களை எடுக்கவேண்டும்.

வேதாந்தத்திலே உத்தமேயாகிலும், "இதிஹாஸபுராணாப்யாம் வேதம் ஸமுபப்ரும்ஹயேத்,பிபேத்யல்பச்ருதாத் வேதோ மாமயம் ப்ரதரிஷ்யதி." என்று, இதிஹாஸபுராணத்வாரத்தாலே வேதோபப்ரும்ஹணம் பண்ணின ருஷிகளும் "கிம் தத்ர பஹுபிர் மந்த்ரை: கிம் தத்ர பஹுபிர் வ்ரதை:, நமோ நாராயணாயேதி மந்த்ரஸ் ஸர்வார்த்தஸாதக:." "ஆஸீநா வா சயாநா வா திஷ்டந்தோ யத்ர குத்ர வா, நமோ நாராயணாயேதி மந்த்ரைகசரணா வயம்." "நாராயணேதி சப்தோஸ்தி வாகஸ்தி வசவர்த்திநீ, ததாபி நரகே கோரே பதந்தீதி கிமத்புதம்." "ஆர்த்தா விஷண்ணாச்சிதிலாச்ச பீதா கோரேஷு ச வ்யாதிஷு வர்த்தமாநா:, ஸங்கீர்த்ய நாராயணசப்தமாத்ரம் விமுக்தது:காஸ்ஸுகிநோ பவந்தி." என்று, ஏவமாதிகளாலே ஆதரித்துப்போந்தார்கள்.

ஆக, ஸோபப்ரும்ஹணங்களான வேதாந்தங்கள் ஆதரிக்கையாலே, அந்த வேதாந்தஸாக்ஷாத்காரம் பண்ணின ஆழ்வார்கள் ஆதரித்தார்கள். ஆழ்வார்கள் ஆதரிக்கையாலே, ஆசார்யர்கள் ஆதரித்தார்கள். ஆசார்யர்கள் ஆதரித்தபடியாலே, நமக்கு இம்மந்த்ரவிசேஷமே ஆதரணீயமாகக்கடவது.

கிஞ்ச, "மந்த்ரஸ்ஸர்வார்த்தஸாதக:" என்கிறபடியே, க்ஷுத்ரபலத்தோடு அதிகபலத்தோடு வாசியறத் தானே ஸாதித்துக்கொடுக்கும் வைபவத்துக்கு மேலே, அவ்வோபலஸாதநகர்மங்களுக்கும் ஜபஹோமாதிமுகத்தாலே ஸஹகாரியாய்ப் போருமதுவும் ஓரேற்றமுண்டு.

அதில் க்ஷுத்ரபலஸாதநமான ஜ்யோதிஷ்டோமாதிகளுக்கு, "யதேவ வித்யயா கரோதி, ததேவ வீர்யவத்தரம்" என்கிற உத்கீதோபாஸநந்யாயத்தாலே, தத்தத்ஸாதநஸாத்யமான புண்யத்தினுடைய பலோத்பத்திப்ரதிபந்தகமான ப்ரபலகர்மங்களைத் தலைசாயப் பண்ணிக்கொடுத்தும் அப்புண்யாதிசயத்தைப் பண்ணிக்கொடுத்தும் ஸஹகாரியாகக் கடவது.

அப்படி விலக்ஷணப்ருஷார்த்தஸாதநமான கர்மஜ்ஞாநாதிகளுக்கும் ஸஹகரித்துப் போரும். அதில், கர்மயோகத்தில் இழியுமவனுக்கு கர்மயோகாரம்பவிரோதிபாபக்ஷயஹேதுவாயும், அந்தக் கர்மத்தினுடைய அவிச்சேதாபாதகமாய், கர்மஸாத்யமான ஜ்ஞாநத்தை

சடக்கென பலிப்பித்தும், ப்ரதமத்திலே ஜ்ஞாநயோகத்திலே இழிய நினைக்குமவனுக்கும், கர்மஸாத்யமான ஜ்ஞாநாரம்பவிரோதிபாபக்ஷயத்தைப் பண்ணிக்கொடுத்தும், அந்த ஜ்ஞாநத்துக்கு நாடோறும் அதிசயத்தைப் பண்ணிக்கொடுத்தும், ஜ்ஞாநபலமான பக்தியைச் சடக்கென பலிப்பித்தும், பக்தியோகத்திலே இழியுமவனுக்கு பக்தியோகாரம்பவிரோதி பாபக்ஷயத்தைப் பண்ணிக்கொடுத்தும், பக்திவ்ருத்திஹேதுவாயும், பக்திவிபாகமான பரஜ்ஞாநாதிகளைப் பண்ணிக்கொடுத்தும், மூன்றுக்கும் ஸஹகரிக்கும்.

இதுக்கு, இந்த வைபவங்களெல்லாம் உண்டாகைக்கடி சப்தவைலக்ஷண்யமோ? அர்த்தவைலக்ஷண்யமோ? என்னில்; ஸகலசப்தகாரணதயா வந்த சப்தவைலக்ஷண்யமடியான வைபவமுமுண்டு; ஸகலார்த்தப்ரதிபாதகதயா வந்த அர்த்தவைலக்ஷண்யமுமுண்டு. அங்ஙனன்றியிலே புழுகு சட்டம் போலே இம்மந்த்ரத்துக்கு வைபவம், உள்வாயிலே கிடக்கிற அர்த்தத்தினுடைய வைலக்ஷண்யமென்றுமாம்.

இப்படி ச்லாக்யமான இம்மந்த்ரத்தில் அர்த்தாம்சத்திலே நிஷ்டராய்ப்போருவர்கள் நம்மாசார்யர்கள். அதுக்கடியென்னென்னில்: அவர்கள், தங்கள் இஷ்டாநிஷ்டப்ராப்தி பரிஹாரங்களுக்கு ஸஹகாரி ஸஹமன்றியிலே இருப்பதொரு ஸாதநவிசேஷத்தைப் பரிக்ரஹிக்கையாலே, ஜ்ஞாதவ்யார்த்தமாத்ரஜ்ஞானமே அமைகையாலும், அதுக்கு மேலே ப்ரதமாசார்யபூதரான நம்மாழ்வார், "எண்பெருக்கன்னலத்தோண்பொருளீறில வண்புகழ் நாரணன்" என்றும், "நாரணன் முழுவேழுலகுக்கும் நாதன்" என்றும், இந்த நாராயணசப்தத்தைச் சொல்லும்போது, பூர்வோத்தரங்களிலே இதிலர்த்தத்தைச் சொல்லிப்போருவதொரு வ்யவஸ்தை உண்டாகையாலும், இதிலே அர்த்தாம்சத்திலே நிஷ்டராய்ப் போருவர்கள். இவ்வர்த்தத்தைப் பொதிந்துகொண்டு கிடக்கையாலே, கிழிச்சீரையோபாதி சப்தத்தையும் ஆதரித்துப்போருவர்கள்.

அவதாரிகை ஸம்பூர்ணம்.



## திருமந்த்ரப்ரகரணம்.

ஆக, ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமாய், ஜ்ஞாதவ்யார்த்தங்களடையத் தனக்கு உள்வாயிலே புஷ்கலமாக உடைத்தாய், அந்யநிரபேக்ஷமாக ஸகலார்த்தங்களையும் ஸாதித்துத்தரும் வைபவத்தையுடைத்தாய், ஸாதநாந்தரங்களுக்கும் ஸ்வஸம்பந்தத்தாலே உந்மேஷகரமாய், ஸர்வமந்த்ராந்தரங்களிற்காட்டிலும் அதிகமாய், ஆசார்யர்களோடு ஆழ்வார்களோடு வேதாந்தங்களோடு ருஷிகளோடு வாசியற எல்லாராலும் ஏககண்டமாக ஆதரிக்கப்படுகிற இம்மந்த்ரந்தான், "ஓமித்யேகாக்ஷரம், நம இதி த்வே அக்ஷரே, நாராயணயேதி பஞ்சாக்ஷராணி, இத்யஷ்டாக்ஷரம், சந்தஸா காயத்ரீ சேதி." என்று, எட்டுத் திருவக்ஷரமாய் மூன்று பதமாய் காயத்ரீ என்கிற சந்தஸ்ஸை உடைத்தாயிருக்கும். "ஓமித்யேகாக்ஷரம்" என்று ப்ரணவத்தை மந்த்ரசரீரத்துக்கு அவயவமாக்குகையாலே, இம்மந்த்ரசரீரம் ஸகல மந்த்ர ஸாதாரணமாயிருக்கிற ப்ரணவத்தையொழியவே, அஷ்டாக்ஷராத்மகமாய் இருக்கும் என்கிறவர்களை வ்யாவர்த்திக்கிறது. "நாராயணயேதி பஞ்சாக்ஷராணி" என்று, அஷ்டாக்ஷரமாகச்

சொல்லுகையாலே "நார" என்கிற இடத்தில் அகாரத்தை ஓரக்ஷரமாக்கி, இத்தை ஆறக்ஷரமாகச் சொல்லுமவர்களை வ்யாவர்த்திக்கிறது.

ப்ரணவம்:

ஆக, இப்படி அஷ்டாக்ஷராத்மகமாய், பதத்ரயாத்மகமான இத்திருமந்த்ரம், ஆத்மஸ்வரூபயாதாத்ம்யத்தை ப்ரகாசிப்பிக்கிறது. "ப்ரஹ்மண: ப்ரணவம் குர்யாதாதாவந்தே ச ஸர்வதா, ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம் பரஸ்தாச்ச விசீர்யதே." என்று வேதம் கீழ் ஒழுகிப் போகாமைக்காகவும், மேல் சிதறிப்போகாமைக்காகவும், கீழும் மேலும் செப்புப்போலே மூடிக்கொண்டுகிடக்கக்கடவதாய், ஸகலமந்த்ரங்களுக்கும் ஸ்வஸம்பந்தத்தாலே உத்கர்ஷகரமாயிருக்கும். இம்மந்த்ரத்திலே ப்ரதமபதமான ப்ரணவம், மந்த்ரசேஷத்துக்கு ஸங்க்ரஹமாய், ஏகாக்ஷரமுமாய், அக்ஷரத்ரயாத்மகமுமாய், பதத்ரயாத்மகமுமாய், வாக்யாத்மகமுமாய் இருக்கும். "ஓமித்யேகாக்ஷரம்" "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம" "மூலமாகியவொற்றையெழுத்தை" என்கையாலே ஏகாக்ஷரமாயிருக்கும். "அகார உகார மகார இதி, தானேகதா ஸமபரத், ததேததோமிதி." "அகாரஞ்சாப்யுகாரஞ்ச மகாரஞ்ச ப்ரஜாபதி:, வேதத்ரயாந்நிரப்ருஹத்" என்று அகார உகார மகார ரூபமாய் இருக்கையாலே, மூன்றக்ஷரமாயிருக்கும். இவை ஓரக்ஷரங்களே, ஓரோரர்த்தங்களுக்கு வாசகமாகையாலே, மூன்று பதமாயிருக்கும். இம்மூன்றுபதமும் கூடி ஓரர்த்தவிசேஷத்தோடே தலைக்கட்டிவிடுகையாலே, வாக்யாத்மகமாயிருக்கும். இப்ப்ரணவத்தில் ப்ரதமபதமான அகாரம், "நாமரூபஞ்ச பூதாநாம் க்ருத்யாநாஞ்ச ப்ரபஞ்சநம், வேதசப்தேப்ய ஏவாதௌ தேவாதீநாம் சகார ஸ:." என்று, வேதம் லௌகிக சப்தங்களுக்கெல்லாம் காரணமாயிருக்கிறாப்போலேயும், அவ்வேதங்கள் தனக்கு "ருசோ யஜூம்ஷி ஸாமாநி ததைவாதர்வணாநி ச, ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்தம் யச்சாந்யதபி வாங்மயம்." என்று இம்மந்த்ரவிசேஷம் காரணமாமாப்போலே, இம்மந்த்ரத்துக்கு ஸங்க்ரஹமான ப்ரணவம் காரணமாமாப்போலேயும், "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய" என்று, ப்ரக்ருதிசப்தத்தாலே சொல்லுகையாலே, ப்ரணவத்துக்கு, அகாரம் காரணமாயிருக்குமாகையாலே, "அகாரோ வை ஸர்வா வாக்" என்று, ஸர்வசப்தமும் அகாராந்தர்கதமாய் இருக்கும். அர்த்தாபிதாயியான ஸகலசப்தங்களையும் கர்பித்துக்கொண்டிருக்கையாலே, அவ்வோசப்தவாச்யமான அர்த்தங்களுக்கெல்லாம் வாசகமாயிருக்கும்.

இது, ஸர்வார்த்தங்களுக்கும் வாசகமாயிருக்கிறபடி எங்ஙனேயென்னில்: இந்த அகாரம் "அவ-ரக்ஷணே" என்கிற தாதுவிலே ரக்ஷணவாசியாய், அந்த ரக்ஷணமாகிற தர்மந்தான், நிராச்ரயமாகவும், நிர்விஷயமாகவும் நில்லாமையாலே ரக்ஷணகநிரூபணீயமான ரக்ஷகவஸ்துவையும் காட்டி, ரக்ஷணந்தனக்கு ரக்ஷ்யவஸ்து அபேக்ஷிதமாகையாலே ரக்ஷ்ய வஸ்துவையும் காட்டுகிறது. அதில், ஒரு ராஜ்யம், ஒரு லோகம், ஒரு த்ரைலோக்யம் என்றாப்போலே ரக்ஷ்யவிசேஷத்தை ஒதுக்கிச் சொல்லாமையாலே, சிதசிதாத்மகமான ஸர்வமும் ரக்ஷ்யமாயஅறும். ஸர்வமும் ரக்ஷ்யகோடியிலே புகுருகையாலே ஆச்ரயாபேக்ஷயா புகுந்த ரக்ஷகன் ஸர்வரக்ஷகனாயஅறும். ரக்ஷணந்தனக்கு ப்ரகாராபேக்ஷையுண்டாகையாலே, ஸர்வப்ரகாரரக்ஷகத்வமும் சொல்லிற்றாயிற்று. ஆக, ரக்ஷ்யரக்ஷகாத்மகமான ஸகலபதார்த்தங்களையும் வசிக்கையாலே, அவ்வோசப்தங்களுக்கு வாச்யமான அர்த்தங்களுக்கும் இந்த அகாரமே வாசகம் என்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம்.

"அ இதி ப்ரஹ்ம" "அகாரோ வை விஷ்ணு:" "அக்ஷராணாமகாரோஸ்மி" "யத்வேதாதௌ ஸ்வர:" "அ இதி பகவதோ நாராயணஸ்ய ப்ரதமாபிதாநமபிதததா கிம் நாம மங்களம் ந க்ருதம்" என்கிற ப்ரமாணங்களாலே ஸர்வரக்ஷகனைச் சொல்லுகிறதும் ஸர்வேச்வரனே என்னுமிடம் ஸம்ப்ரதிபந்நமாகிறது. "ந ஹி பாலநஸாமர்த்யம் ருதே ஸர்வேச்வரம் ஹரிம்" என்று, ரக்ஷணதர்மம் பகவத்வ்யதிரேகேண ஆச்ரயாந்தரத்தில் கிடவாது என்கையாலும், அகாரவாச்யனை ஸர்வேச்வரனை, ரக்ஷகனைச் சொல்லுகிறது. பத்தமுக்தநித்யாத்மகமான உபயவிபூதியையும் ரக்ஷ்யமாகச் சொல்லுகிறது. அதில் பத்தவர்க்கத்தில் அஜ்ஞகோடியைக் கர்மாநுகுணமாக ரக்ஷிக்கும். முமுக்ஷுக்களை ஸ்வரூபாநுகுணமாக ரக்ஷிக்கும். முக்தரையும் நித்யரையும், போகாநுகுணமாக ரக்ஷிக்கும். இனி, ஸர்வரக்ஷகனென்று சொல்லுகிறது—இன்னானை; ரக்ஷ்யவஸ்துக்கள்—இன்னவை; ரக்ஷண ப்ரகாரம்—இன்னது; என்னுமிடத்தை மேலே விவரணத்திலே விசதமாகக் கடவது. ஆக, அகாரத்தாலே ஸ்வேதரஸமஸ்தபதார்த்தங்களுக்கும் ஸர்வப்ரகாரரக்ஷகன் ஸர்வேச்வரன் என்றதாயிற்று.

"யதோ வா இமாநி பூதாநி ஜாயந்தே, யேந ஜாதாநி ஜீவந்தி," என்று, "யாவனொருவன் பக்கல் நின்றும் இந்த ஜகத்து உண்டாகாநின்றது; உண்டான ஜகத்து, யாவனொருவனாலே ரக்ஷிக்கப்படுகிறது" என்று, ஸர்வகாரணவஸ்துவுக்கே ஸர்வரக்ஷகத்வத்தைச் சொல்லுகையாலே, இந்தப் பதத்தில் சொன்ன ஸர்வரக்ஷகத்வம் ஸர்வகாரணத்வத்தையும் காட்டுகிறது. இந்த ரக்ஷணஸ்ருஷ்ட்யாதிகளுக்கு ஜ்ஞாநசக்த்யாதிகள் அபேக்ஷிதமாகையாலே, ஸமஸ்த கல்யாணகுணாத்மகத்வத்தையும் சொல்லுகிறது. இந்தக் காரணத்வத்தாலே உபாஸ்யத்வமும் சரண்யத்வமும் சொல்லிற்றாயிற்று. "காரணந்து த்யேய:" "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ஸ்ச ப்ரஹிணோதி தஸ்மை—முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே" என்று, காரணவஸ்துவையே முமுக்ஷுவுக்கு உபாஸ்யமாகவும் சரண்யமாகவும் சொல்லிற்றிறே.

தத்க்ரதுந்யாயத்தாலே உபாஸ்யமாயும் சரண்யமாயுமிருக்கிற வஸ்துவேயிறே முமுக்ஷுவுக்கு ப்ராப்யமாயறுவது. ஆகையாலே ப்ராப்யத்வமும் சொல்லிற்றாயிற்று. ப்ராப்யத்வப்ரயுக்தமான விலக்ஷணவிக்ரஹயோகாதிகளும் சொல்லிற்றாயிற்று. அநந்யஸாத்யமான அவ்வஸ்துவேயிறே ஆச்ரிதனுக்கு விரோதிநிவ்ருத்திபூர்வகமாக அபிமதத்தை ஸாதித்துக்கொடுப்பது. ஆகையாலே உபாயபாவமும் சொல்லிற்றாயிற்று.

"ச்ரிய: பதி:" என்கிறபடியே, பிராட்டி, பகவத்ஸ்வரூபநிரூபகையாகையாலே "யஸ்யாபி ஸச்சித்தோ ந நிர்புக்ணைநைவநம் குணகணம் மஹஸாநுதாவேத், ததாப்யந்தர்குணமேவ தேவநாம் பஜதே, தந்ராபி தைநீணேவ தேவதா ப்ராப்யதே" என்கிற ந்யாயத்தாலே லக்ஷ்மீஸம்பந்தமும் அர்த்தமாக இவ்விடத்திலே சொல்லிற்றாயிற்று. "அணுர்ஹ்யேஷ ஆத்மா" என்று, ஆத்மஸாமாந்யப்ரயுக்தமாய் இவனுக்கு வரும் அணுத்வமும், "யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே ஈச்வரனைப்போலே இவனுக்கு ஸர்வவ்யாபகத்வமும் தன்னில் தான் விருத்தமாய், ஏகாச்ரயஸ்தமாகக் கூடாமையாலே இரண்டும் கூடுகைக்காக, "அநுபபத்யமாநார்த்ததர்சனாத் உபபாத்யமாநார்த்தாந்தர-

கல்பநமர்த்தாபத்தி:" என்கிற அர்த்தாபத்தியின்படியே, அபரிச்சேத்யமான ஸ்வரூப வைபவத்தையுடையனான ஈச்வரன் அத்யந்தஸூக்ஷ்மமான பதார்த்தங்களிலே பண்ணும் ஸமாப்யவ்யாப்திக்கு ஒரு சக்திவிசேஷத்தைக் கொள்ளுமோபாதி, இவளும் ஒரு சக்தி விசேஷத்தாலே வ்யக்த்யாச்ரயமான ஜாதி போலே, ஈச்வரன் வ்யாபித்தவிடமெல்லாம் வ்யாபிக்கக் கடவளாகையாலே, ஈச்வரஸ்வரூபநிரூபகை என்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். வ்யக்திக்கும் ஜாதிக்குமுண்டான ஸம்பந்தம் போலேயிறே ஈச்வரனுக்கும் பிராட்டிக்குமுண்டான ஸம்பந்தம். அதில் ஜாதியாகிறது—வ்யக்திஸ்வரூபத்தைப் பற்றிக்கிடக்கக் கடவதாய், அதில்லாதவன்று தான் இல்லையென்னலாம்படியாய், வ்யக்தியுள்ளவிடமெங்கும் வ்யாபிக்கவும் கடவதாய், ஸ்வாச்ரயத்துக்கு இதரவ்யவச்சேதகமுமாய், சேஷமுமாயிருக்கும். வ்யக்தியாகிறது—ஜாதிக்கு ஆச்ரயமுமாய், ஜாதியோடே வ்யாப்தமுமாய், ஜாதிவ்யவச்சேத்யமுமாய், ஜாதிக்கு சேஷியுமாயிருக்கும். அதில் ஜாதி போலே பிராட்டியும், " அநந்யா ராகவேணாஹம் பாஸ்கரேண ப்ரபா யதா " " அநந்யா ஹி மயா ஸீதா பாஸ்கரேண ப்ரபா யதா " " நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோச் ச்ரீரநபாயிநீ " என்றும் சொல்லுகிறபடியே, ஆதித்யனுடைய ப்ரபை போல் பிரிவில் ஸ்திதியில்லாதபடி ஈச்வரஸ்வரூபத்தை ஆச்ரயமாகவுடையளாய், " யதா ஸர்வகதோ விஷ்ணுஸ் ததைவேயம் த்விஜோத்தம " " த்வயா ச விஷ்ணுநா சாம்ப ஜகத் வ்யாப்தம் சராசரம் " என்றும் ஈச்வரனுள்ளவிடமெங்கும் வ்யாப்தையுமாய், " ச்ரிய: பதி: " " நித்யச்ரீ: " என்கிறபடியே பகவத்ஸ்வரூபத்தினுடைய இதரவ்யவச்சேதபுத்திஹேதுபூதையுமாய், " விஷ்ணுபத்நீ " என்கிறபடியே பகவச்சேஷபூதையுமாயிருக்கும். அவனும், வ்யக்தி போலே இவளுக்கு ஆச்ரயமுமாய், இவளோடே வ்யாப்தனுமாய், இவளைக்கொண்டறியவேண்டும்படியுமாய், இவளுக்கு சேஷியுமாயிருக்கும்.

இனி, ஜாதிநிரூப்யமான கடவ்யக்தியைச் சொன்னபோதே, நிரூபகமான ஜாதியும் தன்னடையே அந்விதமாமாப்போலே, இப்பதமும் நிரூப்யனான ஈச்வரனைச் சொன்னபோதே, நிரூபகபூதையான பிராட்டியையும் சொல்லிற்றாயிற்று. ஆக, இப்பதத்திலே ஸர்வரக்ஷகத்வமும், ஸர்வகாரணத்வமும், ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வமும், உபயவிபூதிநாயகத்வமும், ஸர்வஸ்மாத்பரத்வமும், உபாஸ்யதையும், சரண்யதையும், உபாயத்வமும், உபேயத்வமும், விலக்ஷணவிக்ரஹயோகமும், ச்ரிய: பதித்வமும் சொல்லிற்றாயிற்று.

இந்த அகாரத்திலே சதுர்த்தி ஏறி " ஸுபாம்ஸுலுக் " என்று லுப்தமாய்க் கிடக்கிறது. இந்த அகாரத்தில் சதுர்த்தி ஏறுமென்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில்: இதினுடைய விவரணமான நாராயணபதம் சதுர்த்யந்தமாகையாலே, ஸங்க்ரஹமான இதுவும் சதுர்த்யந்தமாகவேண்டும். சதுர்த்யந்தமாகாதே ப்ரதமாந்தமாய் " தத்வமஸி " போலே, ஆத்மபரமாத்மாக்களுடைய ஐக்யபரமாகிறதென்னுமர்த்தம், விவரணத்தோடே விரோதிக்கும். அதுக்கு மேலே நாராயணபதத்திற்சொல்லுகிற சரீராத்மபாவத்தோடும் விரோதிக்கும். " அஹமபி ந மம, பகவத ஏவாஹமஸ்மி " என்று ஸ்வஸ்வாதந்த்ர்யநிவ்ருத்திபூர்வகமாக பகவதேகபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிற நமச்சப்தத்தோடு விரோதிக்கும். " பதிம் விச்வஸ்ய " " பதிம் பதீநாம் " " ப்ரதாநக்ஷேத்ரஜ்ஞபதிர் குணேச: " " ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ " " கரணாதிபாதிப: " " க்ஷராத்மாநாவீசதே தேவ ஏக: " " யஸ்யாஸ்மி " " பரவாநஸ்மி " " தாஸபூதாஸ்ஸ்வதஸ்ஸர்வே ஹ்யாத்மாந: பரமாத்மந: " " ஆத்மதாஸ்யம்

ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவஞ்ச ஸதா ஸ்மர" "தாஸோஹம் வாஸுதேவஸ்ய" "உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத:, யோ லோகத்ரயமாவிச்ய பிபர்த்யவ்யய ஈச்வர:" என்று, ஈச்வரனுடைய சேஷித்வத்தையும் சேதனனுடைய சேஷத்வத்தையும் சொல்லுகிற ச்ருதிஸ்ம்ருதிகளோடு விரோதிக்கும். ஆகையால், இது சதுர்த்யந்தமாகக்கடவது. இச்சதுர்த்தி தான் தாதர்த்யே சதுர்த்தியாய் ஈச்வரனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாம்படி சேஷமாயிருக்குமென்கிறது.

அநந்தரம் இச்சேஷத்வத்துக்குக்களையான அந்யார்ஹதையைக் கழிக்கிறது— அவதாரணார்த்தமான உகாரம். அதாவது—க்ஷேத்ரபுத்ரதாரதேஹகுணாதிகளுடைய சேஷத்வத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமாயிருக்கை; க்ஷேத்ராதிகள் க்ரயவிக்ரயார்ஹமாகையாலே அநந்யார்ஹசேஷமன்று; புத்ரன் அவைபோலே க்ரயவிக்ரயார்ஹனன்றேயாகிலும், மாத்ருபித்ருப்ரப்ருதிகளோடு அஸங்க்யாதரான தேவதைகளோடு வாசியற எல்லார்க்கும் ஒக்க ஏககாலத்திலே ஸாதாரண சேஷமாயிருக்கையாலே, அவனுக்கும் அநந்யார்ஹசேஷத்வமில்லை; அக்நிஸாக்ஷிகமாக பாணிக்ருஹீதையான ஸ்த்ரீயும், கர்மோபாதிகஸம்பந்தமாகையாலே தாராந்தரத்திலே அந்யார்ஹையாகைக்கு யோக்யதையுண்டு; ஆகையாலே இவளுக்கும் நிருபாதிகமான அநந்யார்ஹசேஷத்வமில்லை; அந்த க்ஷேத்ரபுத்ராதிகளைப் போலே, ப்ருதக்ஸித்தமாகையன்றியிலே அப்ருதக்ஸித்தமாய் சேஷமாயிருந்ததேயாகிலும், தேஹத்துக்கும் அநந்யார்ஹசேஷத்வமில்லை. பார்யாசரீரம் பர்த்தாவுக்கு சேஷமாயிருக்கும்; பர்த்ருசரீரம் தேவாதிகளுக்கு சேஷமாயிருக்கும்; அதுக்கு மேலே கூழாவணமாக எழுதிக் கொடுக்கும்; ஆகையாலே தேஹத்துக்கும் அநந்யார்ஹசேஷத்வமில்லை; குணம், "யஸ்யைதே தஸ்ய தத்தனம்" என்கிற ந்யாயத்தாலே, குணி சேஷமானவிடத்துக்குத் தான் சேஷமா யிருக்கையாலே, அநந்யார்ஹசேஷத்வமில்லை; அப்ருதக்ஸித்தியே உள்ளது.

ஈச்வரனுக்கு இவ்வாத்மவஸ்து, சேஷமாயிருக்குமிடத்தில் க்ஷேத்ராதிகளைப் போலன்றியிலே க்ரயவிக்ரயாநர்ஹமாயிருக்கும்; புத்ராதிகளைப்போலே ஸர்வஸாதாரண மன்றியிலே, அநந்யஸாதாரணமாயிருக்கும்; பார்யையைப்போலே ஔபாதிகஸம்பந்த மன்றியிலே ஸ்வாபாவிகஸம்பந்தத்தை உடைத்தாயிருக்கும்; தேஹத்தோபாதி பிறர்க்காக்கலா யிருக்கையன்றியிலே, ஒழிக்கவொழியாத ஸம்பந்தத்தையுடைத்தாயிருக்கும்; குணங்கள் போலன்றியிலே குணியாய், அநந்யார்ஹசேஷமாயிருக்கும்; "ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசரம்" "கோஹ்யேவாந்யாத், க: ப்ராண்யாத்; யதேஷ ஆகாச ஆனந்தோ ந ஸ்யாத்" என்று, பகவத்ஸம்பந்தம் அறில், ஆச்ரயவிதுரமான குணம்போலே, ஸத்தையே பிடிக்கு இல்லையென்கையாலே, க்ரயவிக்ரயாநர்ஹமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். "ஆத்மைவேதம் ஸர்வம்" "ப்ரஹ்மைவேதம் ஸர்வம்" "ஸர்வம் கல்விதம் ப்ரஹ்ம" "யஸ்யாத்மா சரீரம்" "யஸ்ய ப்ருதிவீ சரீரம்" "தத் ஸர்வம் வை ஹரேஸ்தநு." "தாநி ஸர்வாணி தத்வபு:" என்று, ஸ்வேதரஸகலபதார்த்தங்களுக்கும் ஈச்வரன் சரீரியாய், வ்யதிரிக்தங்களுடைய அவனுக்கு சரீரங்களாயிருக்கையாலே, ஓராத்மாவாலே அதிஷ்டிதமான சரீராவயவங்களில் அந்யோந்யசேஷசேஷிபாவமில்லாததோபாதி ஈச்வரசரீரமான இச்சேதநாசேதநங்களுக்கும் ஒன்றுக்கொன்று சேஷமாகை அயுக்தமாகையாலும், அந்த சேஷத்வமுண்டானாலும்

ஔபாதிகமாகையாலும், " தேவர்ஷிபூதாத்மந்ருணாம் பித்ருணாம் ந கிங்கரோ நாயம்ருணீ ச " என்று அந்யசேஷத்வத்தைக் கழிக்கையாலும் அநந்யஸாதாரணம் இந்த சேஷத்வமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். " தாஸபூதாஸ்ஸ்வத: " " ஆத்மதாஸ்யம் ஹரேஸ்ஸ்வாம்யம் ஸ்வபாவம் " என்று, ஆத்மபரமாத்மாக்களுடைய சேஷசேஷிபாவத்தை ஸ்வாபாவிகமாகச் சொல்லுகையாலும், சேஷசேஷிபாவத்துக்கு ஹேதுபூதமான சரீராத்மபாவம் நித்யமாகையாலும், " ஸோம: ப்ரதமோ விவிதே, கந்தர்வோ விவித உத்தர:, த்ருதீயோ அக்நிஷ்டே பதி:, துரீயாஸ்தே மநுஷ்யஜா: " என்று பாணிக்ரஹணாநந்தரம் ஸோமாதிகளுக்கு ஸாதாரணையாக ச்ருதையுமாய், பாணிக்ரஹணபூர்வகாலத்தில் மாதாபிதாக்களுக்கு சேஷபூதையுமாய், சரீராவதியான ஸம்பந்தத்தை உடையளுமாய், சரீரத்தோடேயிருக்கச்செய்தேயும் " ஸந்யஸ்தம் மயா " என்றபோது ஸம்பந்தம் குலையும்படியுமாயிருக்கையாலே, பார்யையைக்காட்டில் அத்யந்த வ்யாவ்ருத்தமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். " யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம் " என்று சரீரத்வம் உண்டாகாநிற்கச்செய்தேயும், க்ரயவிக்ரயாநர்ஹமாகவும், அநந்யஸாதாரணமாகவும், ஸ்வாபாவிகமாகவும், கீழ்ச்சொல்லுகையாலே கர்மோபாதிகமான தேஹத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம். இந்த ஹேதுக்களாலும் " ந த்ருஷ்டேர் த்ரஷ்டாரம் பச்யே:, ந மதேர் மந்தாரம் மந்வீதா: " என்று குணியாக ச்ருதமாகையாலும் குணத்திற்காட்டில் வ்யாவ்ருத்தமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம்.

ஆகையாலே க்ஷேத்ராதிகதமான உபாதிவிசேஷங்களின்றியிலே நித்யாநபாயிநியாயிருந்துள்ள பிராட்டியோபாதி, ஈச்வரனுக்கு இந்த ஆத்மவஸ்து அநந்யார்ஹசேஷம் என்றதாயிற்று. " உறவேல் நமக்கிங்கொழிக்க வொழியாது " என்று, " இஸ்ஸம்பந்தம், உன்னாலும் ஒழிக்கப்போகாது; என்னாலும் ஒழிக்கப்போகாது; இருவராயும் ஸங்கேதித்தாலும் ஒழிக்கப்போகாது; " என்று உகாரார்த்தமான அநந்யார்ஹசேஷத்வத்தை நாய்ச்சியாரும் அநுஸந்தித்தருளினர். " ததேவ பூதம் தது பவ்யமா இதம் " என்று ஏவகாரம் கிடக்கும் ஸ்தானத்திலே உகாரம் கிடக்கக்காண்கையாலே அந்த ப்ரமாணமடியாக இந்த உகாரமும் அவதாரணார்த்தமாகிறது.

ஆக, அகாரத்திலும், சதுர்த்தியிலும், உகாரத்திலும், ஈச்வரனுடைய ரக்ஷகத்வமும் சேதநனுடைய ரக்ஷ்யத்வமும், ஈச்வரனுடைய சேஷித்வமும், சேதநனுடைய சேஷத்வமும், சேஷத்வத்தினுடைய அநந்யார்ஹதையும் சொல்லிற்றாயிற்று.

அநந்தரம், ஸர்வரக்ஷகனாய், ஸர்வசேஷியாய், ஸமாதிகதரித்ரனான ஸர்வேச்வரனை ப்ரதிஸம்பந்தியாக வுடைத்தான அநந்யார்ஹசேஷத்வத்துக்கு ஆச்ரயம் இன்னதென்கிறது—மகாரம். ஒரு ஸம்பந்தமாகில், ஸம்பந்தித்வயாபேக்ஷிதமாயிறே யிருப்பது. அதில், ஸம்பந்தத்தையும் ப்ரதிஸம்பந்தியையுமிறே கீழ்ச் சொல்லி நின்றது. அதில் ப்ரதிஸம்பந்தியையொழிய இஸ்ஸம்பந்தத்துக்கு உதயமில்லாதவோபாதி, ஆச்ரயவிதுரமாகவும் ஸ்திதியில்லையிறே. ஆகையாலே ஆச்ரயவிசேஷத்தை மகாரம் சொல்லுகிறது. இம்மகாரம் " மநஜ்ஞாநே " என்கிற தாதுவிலே ஜ்ஞாநவாசியாய், " விஜ்ஞாநம் யஜ்ஞம் தநுதே " என்கிற இடத்தில் விஜ்ஞானசப்தம் போலே, " தத்குணஸாரத்வாத் தத்வ்யபதேச: ப்ராஜ்ஞவத் " என்கிற ந்யாயத்தாலே ஜ்ஞானகுணஸாரமான ஆத்மஸ்வரூபத்துக்கு வாசகமாகிறது.

ஆக, ஜ்ஞானகுணகனை ஆத்மாவைச் சொல்லிற்றாயிற்று. ஜ்ஞாத்ருத்வமாகிற குணம் குணாந்தரங்களுக்கும் உபலக்ஷணமாய், நித்யத்வம், ஏகரூபத்வம், அணுத்வம், வ்யாபகத்வம், உள்ளிட்ட ஆத்மதர்மங்களும் இப்பதத்திலே அநுஸந்தேயம். அதவா, ககாராதிமகாராந்தமான இருபத்தைந்தக்ஷரத்தையும் இருபத்தைந்து தத்வத்துக்கும் வாசகமாக்கின மாந்த்ரிகப்ரக்ரியையாலே, "பஞ்சவிம்சோயம் புருஷ:, பஞ்சவிம்ச ஆத்மா பவதி" என்கிறபடியே இருபத்தைந்தாம் தத்வமான ஆத்மாவுக்கு இருபத்தைந்தாமக்ஷரமான இம்மகாரம் வாசகமாகிறதென்னவுமாம்.

இப்பதத்தில் ஏகவசனம் ஜாத்யேகவசனமாய், பத்தமுக்தநித்யரூபமான த்ரிவிதாத்ம வர்க்கத்தையும் சொல்லுகிறது. ப்ரதானரான சேதநரைச் சொன்னபோதே, அவர்களுக்கு போக்யபோகோபகரண போகஸ்தானரூபேண சேஷமான அசித்வர்க்கமும் பகவச்சேஷதயா இப்பதத்திலே அநுஸந்தேயம்.

சிதசித்துக்களிரண்டும் சேஷமாயிருக்குமாகில், சிதசித்துக்களிரண்டையும் உபாதாநம் பண்ணாதே, சேதநத்வாரா அசித்தை உபலக்ஷிக்கவேண்டும்படி சேதநவாசியான பதத்தை எடுக்கைக்கு ஹேது, அந்த அசித்திற்காட்டில் சேதநனுடைய ப்ராதான்யம் தோற்றுகைக்காக. சேஷத்வஜ்ஞானம் பிறப்பது சேதநவஸ்துவுக்காகையாலும், இனி சேஷத்வஜ்ஞானநிவர்த்ய மான ஸ்வாதந்த்ர்யாநுவ்ருத்தியும், ஜ்ஞாநாச்ரயவஸ்துவுக்கேயாகையாலும், சேஷத்வஜ்ஞாந கார்யமான சேஷவ்ருத்தியில் ருசியுள்ளதும் அந்த வஸ்துவுக்காகையாலும், சேஷத்வ வ்ருத்திப்ரதிஸம்பந்தி பக்கல் விரோதிநிவ்ருத்திபூர்வகமாக அந்த வ்ருத்திலிந்திக்கும் உபாயஸ்வீகாரம் பண்ணுவானும் சேதநனாகையாலும், "அஹமந்நம்" என்கிறபடியே ஈச்வரனுக்கு கௌஸ்துபம்போலேயும், ஸ்ரீஸ்தனம் போலேயும் ஸ்ப்ருஹாவிஷயமாயிருப்பதும் நிரஸ்தஸமஸ்தஹேயமான இந்த சேதநவஸ்துவேயாகையாலும், அவனுக்குக் கர்மாநுபவோப கரணமாயும், கைங்கர்யோபகரணமாயுமிருக்கிற ஜடவஸ்துவிற்காட்டில் சித்வஸ்து, விலக்ஷணமாகையாலே, அந்த ப்ராதான்யம் தோற்ற அவனுக்கு வாசகமான பதத்தை இடுக்கிறது. ஆக, மகாரத்தாலே பகவதநந்யார்ஹசேஷத்வத்துக்கு ஆச்ரயம் சொல்லிற் றாயிற்று.

ப்ரதானமான ஆச்ரயத்தை ப்ரதமத்திலே சொல்லி ஆச்ரயியான ஸ்வபாவத்தை அனந்தரம் சொல்ல ப்ராப்தமாயிருக்க, ஆச்ரயியான சேஷத்வத்தை ப்ரதமத்திலே சொல்லி, ஆச்ரயமான ஜ்ஞாநானந்தவஸ்துவை அனந்தரம் சொல்லுகைக்கு ஹேதுவென்னென்னில்: "அஹமர்த்தோ ந சேதாத்மா ப்ரத்யக்த்வம் நாத்மநோ பவேத், அஹம்புத்யா பராகர்த்தாத் ப்ரத்யகர்த்தோ ஹி பித்யதே" என்கிறபடியே, பராகர்த்தவ்யாவ்ருத்தமான அஹமர்த்தத்துக்கு ஜ்ஞாநாநந்தாதிகளிற்காட்டில் ப்ரதானநிரூபகம் சேஷத்வமே என்னுமிடம் தோற்றுகைக்காக வும், நெருப்பிலே புக்கு வேவார் சிலருண்டானால் அவர்களை 'இன்னார்' என்று பாராதே பற்றியெரிகிற அக்நெருப்பை அவிக்கையிலே யத்னம் பண்ணுவாரோபாதி, அதாஶ்ரயமான ஆத்மவஸ்துவை அநாதிகாலம் பற்றி, தஹித்துப்போருகிற ஸ்வஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றுகையிலே தாத்பர்யமாகையாலும், புஷ்பத்துக்கு ச்லாக்யதை பரிமளத்தாலேயாகிற வோபாதி, ஸ்வரூபத்துக்கும் உபாதேயத்வம் இந்த ஸ்வபாவிசேஷத்தாலேயாகையாலும், இந்த ப்ராதான்யத்தாலே சேஷத்வத்தை ப்ரதமத்திலே உபாதானம் பண்ணுகிறது.

இனி, அந்த சேஷத்வந்தான் சிதசித்துக்களிரண்டுக்கும் பொதுவாகையாலே ஒரு ஆச்ரயவிஷயத்திலே ஒதுக்க வேண்டுகையாலும், அந்த ஆச்ரயந்தான், அசித்தோபாதி அன்னனும் தன்னனுமாயிராது வடிவுபட்டிருக்குமென்று, கீழிச்சீரையை ச்லாகிப்பாரோபாதியிறே மகாரத்திலே ஜ்ஞானானந்தவஸ்துவைச் சொல்லுகிறது. உத்கர்ஷாபகர்ஷஹேது, ஆச்ரயாச்ரயிபாவமல்லாமையிறே, "ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதேதி" என்கிற இடத்தில் ஆச்ரயிகளான குணங்களை போக்யதையாலே ப்ரதானமாகச் சொல்லி, ஸஹசப்தத்தாலே ஆச்ரயமான ஸ்வரூபத்தை அப்ரதானமாகச் சொல்லிற்று.

சேஷத்வத்தினுடைய ப்ராதான்யத்தைப் பற்றவிறே ஆளவந்தாரும், "வபுராதிஷு யோபி கோபி வா" "தவ சேஷத்வவிபவாத் பஹிர்பூதம்—ஆத்மாநமபி ந ஸஹே" என்று, "ஆத்மவஸ்து, தேஹேந்த்ரியமன:ப்ராணாதிகளிலே ஏதேனுமொன்றாகவுமமையும்; எனக்கு இதினுடைய ஸ்வரூபநிர்ணயமும் வேண்டா; ஸ்வபாவநிர்ணயமும் வேண்டா; ஏதேனுமாக தேவரீருக்கு சேஷமாமித்தனையே வேண்டுவது. சேஷமன்றாகில் விலக்ஷணமான இந்த ஆத்மவஸ்துதன்னையும் வேண்டேன்" என்றருளிச்செய்ததும்; ச்ருதிகளும் "யோஹமஸ்மி ஸ ஸந் யஜே" "யஸ்யாஸ்மி ந தமந்தரேமி" என்றதுவும்; ப்ரணவார்த்தம் சொல்ல இழிந்த திருமங்கையாழ்வாரும், "கண்ணபுரமொன்றுடையானுக்கு" என்று அகாரத்துக்கும் சதுர்த்திக்கும் பொருள் சொல்லி, "ஒருவர்க்குரியேனோ" என்று உகாரத்துக்குப் பொருள் சொல்லி, மகாரத்துக்குப் பொருளாக "அடியேன்" என்றதும். ஆக, பதத்ரயாத்மகமான ப்ரணவத்தில் ப்ரதமசரமபதங்கள் ஸம்பந்தித்வயவிசேஷத்தைச் சொல்லிற்று; மத்யமபதம் அவற்றினுடைய ஸம்பந்தவிசேஷத்தைச் சொல்லிற்று.

இப்ப்ரணவந்தான் "ஓமித்யாத்மாநம் யுஞ்ஜீத" என்கையாலே ஜீவவாசகமுமாய், "ஓமித்யேகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரந் மாமநுஸ்மரந்" என்று ஏவமாதிகளிற்சொல்லுகிறபடியே ஈச்வரவாசகமுமாய்க் கிடக்கிறது. இது உபயார்த்தத்துக்கும் வாசகமாகிறபடி என்னென்னில்: "ராஜபுருஷ:" என்கிற வாக்யம் சேஷசேஷிகளான ராஜாவையும் புருஷனையும் வசிக்கிறாப்போலே, வாசகமாகக்கடவது. அங்ஙனன்றியிலே ஜீவஸ்வரூபசோதநத்தையும், ஈச்வரஸ்வரூபசோதநத்தையும் பண்ணுகையாலே, உபயார்த்தத்துக்கும் வாசகமாகிறதென்னவுமாம். எங்ஙனேயென்னில்: மகாரத்தாலே, "தேஹேந்த்ரியமந:ப்ராணதீப்யோந்யோநந்யஸாதந:, நித்யோ வ்யாபீ ப்ரதிக்ஷேத்ரமாத்மா பிந்நஸ் ஸ்வதஸ் ஸுகீ" என்கிறபடியே, ப்ரக்ருதே:பரனாய், ஸ்வயம்ப்ரகாசனாய், நித்யனாய், வ்யாபகனாய், ப்ரதிசரீரம் பின்னனாய், ஸ்வாபாவிகஸுகத்தையுடையனாயிருக்குமென்று சொல்லி, அவன்தான் பரதந்த்ரனாயிருக்கும், அந்தப்பாரதந்த்ர்யந்தான் அநந்யார்ஹமாயிருக்கும் என்று, சதுர்த்தியாலும் உகாரத்தாலும் சொல்லி, அந்தப் பாரதந்த்ர்யத்துக்கு ப்ரதிஸம்பந்தியும் ஸர்வரக்ஷகனான ஸர்வேச்வரனென்று சொல்லி, ஆக இப்படி ஜீவஸ்வரூபசோதநம் பண்ணுகையாலே ஜீவவாசகம் என்னவுமாம்.

அங்ஙனன்றியிலே ஸவிபக்திகமான அகாரத்தில் ஈச்வரனுடைய ஸர்வசேஷித்வத்தைச் சொல்லி, அவற்றுக்கு சேஷியாமிடத்தில், அவை அநந்யார்ஹமாம்படி சேஷமாயிருக்கும் என்னுமிடத்தை உகாரத்திலே சொல்லி, அந்த சேஷித்வத்துக்கு ப்ரதிஸம்பந்தி அபேக்ஷிதமாகையாலே, சித்ப்ரகாரமான சேதநவர்க்கத்தை மகாரத்திலே சொல்லி, ஆக இப்படி

வ்யாவர்த்தகவிசேஷணமான ஈச்வரனுடைய சேஷித்வத்தை சோதிக்கையாலே ஈச்வரவாசகம் என்னவுமாம். சேஷித்வத்திலே ப்ரதானமானபோதைக்கும், "க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விச்வம் சராசரம்" என்றாப்போலே சதுர்த்பந்தமாகவும் தட்டில்லை.

சேதநனுடைய சேஷத்வசோதனத்திலே இப்ப்ரணவத்துக்குத் தாத்பர்யமானபோது, அகாரம், ஈச்வரனை ப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறதாய், மகாரம், ஆச்ரயத்தைச் சொல்லுகிறதாய், உகாரம் அந்த சேஷத்வத்தினுடைய அநந்யார்ஹதையைச் சொல்லுகிற தாகக்கடவது. ஈச்வரனுடைய சேஷித்வத்திலே தாத்பர்யமானபோது, மகாரம், ப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறதாய், அகாரம் ஆச்ரயத்தைச் சொல்லுகிறதாய், உகாரம் அந்த சேஷித்வத்தினுடைய அஸாதாரணதையைச் சொல்லுகிறதாகக்கடவது. அங்ஙனன்றியிலே "தஸ்ய ப்ரக்ருதிலீநஸ்ய ய: பரஸ் ஸ மஹேச்வர:" என்கிறபடியே ப்ராக்ருதாவஸ்தமான ப்ரணவம் ஈச்வரவாசியாய், விக்ருத்யவஸ்தமான ப்ரணவம் ஜீவவாசியாகிறதென்னவுமாம்.

ஆக, ப்ரணவத்திலே ஆர்த்தமாகவும் சாப்தமாகவும் சித்ஸ்வரூபத்தோடு, அசித்ஸ்வ ரூபத்தோடு, ஈச்வரஸ்வரூபத்தோடு, தத்ஸம்பந்தவிசேஷத்தோடு, ப்ராப்யத்தோடு, ப்ராபகத் தோடு, விரோதியோடு வாசியறச் சொல்லுகையாலே, ஸகலசாஸ்த்ரஸங்க்ரஹமான மந்த்ரசேஷத்துக்கு ஸங்க்ரஹமென்னுமிடம் ஸம்ப்ரதிபந்நம்.

ந ம: ப்ரணவத்திலே உக்தமான பகவதநந்யார்ஹசேஷத்வத்தையுடையனை இச்சேதநனுக்கு ஸ்வரூபாநுரூபமான உபாயவிசேஷத்தைச் சொல்லுகிறது: உகாரவிவரணமான நமச்சப்தம். பதக்ரமத்திலே விவரணம் பண்ணாதே இங்ஙனே வ்யுத்க்ரமமாகைக்கடி என்னென்னில்: சப்தக்ரமத்திற்காட்டில் அர்த்தக்ரமம் ப்ரபலமென்கிற மீமாம்ஸகருடைய ந்யாயத்தாலே, இப் ப்ரணவத்தில் உக்தமான அநந்யார்ஹசேஷத்வத்தில் வ்யாவ்ருத்தரான அந்யபரிலே அந்யதமனை தன்னை வ்யாவர்த்திக்கை, அனந்தரம் ப்ராப்தமாகையாலும் ஸ்வரூபாநு ரூபமான புருஷார்த்தஜ்ஞானம் பிறக்கும்போதைக்கு ஸ்வரூபயாதாத்ம்யரூபமான ததீயசேஷத்வஜ்ஞானம் பிறக்கவேண்டுகையாலும், கைங்கர்ய ப்ரதிஸம்பந்தியைச் சொல்லு மிடத்தே இரண்டொருகார்யமாக ப்ரதமபதமான அகாரவிவரணம் பண்ணவாயறுகையாலும், "அஹமபி ந மம, பகவத ஏவாஹமஸ்மி" என்று ப்ரணவோக்தமான ஸ்வரூபத்தில் கிடக்கிற மமதையையும் "யா: காச்சந க்ருதயோ மம பவந்தி, தாஸு மம மமதா நாஸ்தி, பகவத ஏவ தா:" என்று மேலே வக்ஷ்யமாணமான புருஷார்த்தத்தில் வரும் மமதையையும், காகாக்ஷிந்யாயத்தாலே கழிக்குமிது, நடுவே கிடக்கவேண்டுகையாலும், ப்ரணவாநந்தரம் உகாரவிவரணமான நமச்சப்தமாகக்கடவது.

இந்த நமச்சப்தம் "ந" என்றும், "ம:" என்றும், இரண்டுபதமாயிருக்கும். இதில் மகாரம், "மந-ஜ்ஞானே" என்கிற தாதுவிலே ஷஷ்ட்யந்தமாய், எனக்கு நான் உரியேனென் கிறது; நகாரம், இத்தை நிஷேதித்து "யானே நீ என்னுடைமையும் நீயே" என்கிறபடியே தன்னுடைய மமதாநிவ்ருத்தியையும், மமதைக்கடியான அஹங்காரநிவ்ருத்தியையும் அநுஸந்திக்கிறது. "த்வ்யக்ஷரஸ்து பவேந் ம்ருத்யுஸ் த்ர்யக்ஷரம் ப்ரஹ்மண: பதம், மமேதி த்வ்யக்ஷரோ ம்ருத்யுர் நமமேதி ச சாச்வதம்" என்கிறபடியே, அஹங்காரமமகாரங்களிறே

இவ்வாத்மாவுக்கு நாசகங்கள்; தந்நிவ்ருத்தியிறே உஜ்ஜீவனமும். ஆக, நடுநாழி போலே கிடக்கிற அஹங்காரமமகாரங்களினுடைய நிவ்ருத்தியைச் சொல்லிற்றாயிற்று.

கீழே சதுர்த்தியில் சொல்லுகிற பாரதந்த்ர்யத்தாலே ஸ்வாதந்த்ர்யம் கழியுண்டிருக்க, இங்கு நிவ்ருத்தமாகிற அஹங்காரமமகாரமாகிறது என்னென்னில்: அங்கு பகவத்பாரதந்த்ர்ய விரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைக் கழிக்கிறது; இங்கு, ஸ்வரக்ஷணத்திலே தான் இழிகையிறே அதுக்கு விரோதியாயறுவது; அதாகிறது: ஸ்வரக்ஷணமாக ஸாதநாநுஷ்டானம் பண்ணுகை; அது ஸ்வரூபஹாநியாயிறே இருப்பது. பர்த்தாவுக்கு சேஷமான சரீரத்தை அவகாதாதிவ்யாபாரங்களாலே பதிவ்ரதை ரக்ஷிக்கையாகிறது: பர்த்தாவுக்கு ஸ்வரூபஹாநியாய், தனக்கும் ஸ்வரூபஹாநியாயிறே இருப்பது. விசேஷணப்ரதானமான விசிஷ்டாம்சமாயிறே பர்த்தாவுக்கு சேஷமாயிருப்பது. அங்ஙனன்றியிலே ஸ்வரூபமும் சேஷமாயிருக்குமாகில், நாம் இங்கு சொல்லுகிற பகவதநந்யார்ஹசேஷத்வத்துக்கு அவகாசமின்றிக்கேயொழியும். ஆகையாலே ஆத்மரக்ஷணத்துக்கு உறுப்பாகப் பண்ணுகிற பாதிவ்ரத்யதர்மாநுஷ்டானத்தாலே பர்த்தாவுக்கு அநந்யார்ஹசேஷபூதையாயிருக்கும் இருப்புக்கு வைகல்யம் வாராநிறே. ஆகையாலே நவத்வாரபுரமான லங்காபுரத்திலே நிருத்தையான பிராட்டி, "தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்" என்று, சக்ரவர்த்தித்திருமகன் பக்கலிலே ந்யஸ்தபரையாயிருந்தாப்போலே இருக்கை, இவனுக்கு ஸ்வரூபம். ஆக, இத்தால் ஸ்வரக்ஷணத்திலே இழிகை ஸ்வரூபஹாநியாம்படி ஈச்வரனுக்கு அத்யந்தபரதந்த்ரம் இந்த ஆத்மவஸ்து என்றதாயிற்று. ஸ்வரக்ஷணக்ஷமனான பர்த்தாவிருக்க, ஸ்வரக்ஷணத்தில் நின்றும் பதிவ்ரதை கைவாங்கினால் பர்த்தாவே ரக்ஷகனுமாபோலே, இவனும் அத்யந்தபாரதந்த்ரனாயற்றால் ஈச்வரனேயிறே ரக்ஷகனுமாவான். ஆகையாலே ஈச்வரனுடைய உபாயபாவமும் ஆர்த்தமாகச் சொல்லிற்றாயிற்று.

ஈச்வரனே ரக்ஷகனும்படி இவன் அத்யந்தபரதந்த்ரனானால், இந்தப்பாரதந்த்ர்யபூர்த்தி பிறந்ததாவது, அவனுக்கு இஷ்டவிநியோகார்ஹமாகிலிறே. அவனுக்கு இஷ்டராகிறார்: "ஜ்ஞாநீ த்வாத்மைவ" என்கிற ஸ்ரீவைஷ்ணவர்களிறே. "அடியார்க்கென்னை ஆட்படுத்த விமலன்" என்கிறபடியே தனக்கபிமதரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷமாக்கினால், அவர்களுக்கு சேஷமாயிருக்கிலிறே இவனுக்கு பகவதநந்யார்ஹசேஷத்வபூர்த்தி பிறந்ததாவது; ஆகையாலே "நின் திருவெட்டெழுத்தும் கற்று நானுற்றதுமுன்னடியார்க் கடிமை" என்று திருமங்கையாழ்வார் அநுஸந்தித்தருளினாப்போலே, இப்பதத்திலே பாரதந்த்ர்யகாஷ்டையான ததீயசேஷத்வமும் அநுஸந்திக்கும்படி சொல்லிற்றாயிற்று. பகவச்சேஷத்வம் பூர்ணமாவது ததீயசேஷத்வம் உண்டானாலாகில்; ததீயசேஷத்வம் ப்ரணவத்தில் சொன்ன அநந்யார்ஹசேஷத்வத்தோடு விரோதியாதோ? என்னில்: ஸ்ரீவைஷ்ணவர்களாகிறார், "ஜங்கமா ஸ்ரீவிமாநாநி" என்கிறபடியே ஈச்வரனுக்கு திவ்யமங்களவிக்ரஹத்தோபாதி சரீரபூதராயறுகையாலே, பர்த்ருசரீரத்திலே மேல்விழுகிற ஸ்த்ரீக்கு பாதிவ்ரத்யபங்கம் இல்லாதவோபாதி, அநந்யார்ஹசேஷத்வத்துக்கு பங்கம் வாராது.

அநந்யார்ஹசேஷத்வத்திலுடைய அப்ரச்யுதிக்கு சரீரத்வம் ப்ரயோஜகமாகில், "யஸ்யாத்மா சரீரம், யஸ்ய ப்ருதிவீ சரீரம்" என்று சேதநாசேதநவிபாகமற ஸர்வமும்

சரீரமாயன்றே இருப்பது; ஆனால் ஸர்வருக்கும் சேஷபூதனாகவேண்டி வந்ததீ என்னில்: ஸர்வருக்கும் சரீரத்வநிபந்தனமான ஸம்பந்தமுண்டேயாகிலும், 'நாம் சரீரத்வேந சேஷபூதர்; சரீரியான ஈச்வரன் சேஷி' என்கிற ஜ்ஞானமின்றியிலே அஹங்காரமமகாரதூஷிதராய், நிருபாதிகபந்துவான ஈச்வரனையும் 'நாஸ்தி' என்னப்பண்ணுமளவன்றியிலே "க்ஷிபாமி" "ந க்ஷமாமி" என்று கடல் கொதித்தாப்போல் கொதிக்கும்படி பண்ணும் தன்மையுடையராகையாலே, இந்த தோஷங்களொன்றுமின்றியிலே "ஜ்ஞாநீ த்வாத்மைவ" "பத்தராவியை" என்று ஸர்வாதாரபூதனை ஈச்வரன்தான் தனக்கு தாரகமாக நினைத்திருக்கும்படி, அவனுக்கு ப்ரஸாதபாத்ரரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு சேஷமாயிருக்கும் இருப்பு சரீரத்வ ஸாமான்யத்தாலே வ்யபிசரியாது. பர்த்தாவோடு பார்யைக்கு அவ்யவதாநேந ஸம்பந்தமுண்டாகாநிற்கச் செய்தேயும், ஆர்த்தவாதிதோஷதூஷிதையானவன்று பர்த்தாவோடு ப்ரஜைகளோடு வாசியற எல்லாருக்கும் அஸ்ப்ருச்யையாய், குளித்தவாறே ஸம்ச்லேஷிக்கலாம்படி இருக்கிறப்போலே, அஹங்காரமமகாராதிகளுண்டானவன்று த்யாஜ்யமாய், அவைபோனவன்று, இவைதானே உபாதேயமாகக்கடவது. ஆக, ப்ரயோஜனமாயற்றது: ஈச்வரனுக்கு ப்ரஸாதபாத்ரமான சரீரம் உத்தேச்யமாகக்கடவது; நிக்ரஹபாத்ரமான சரீரம் த்யாஜ்யமாகக்கடவது.

இப்பதத்தில் நாலர்த்தம்சொல்லாநிற்க அநந்யசரணத்வத்திலே இத்தை ஒதுக்குகிறபடியென்னென்னில்: "கச்சத்வமேநம் சரணம் சரண்யம் புருஷர்ஷபா:" என்று, சரணம் புகுருங்கோளென்று உபதேசிக்க, "த்ரௌபத்யா ஸஹிதாஸ் ஸர்வே நமச்சக்ருர் ஜநார்தநம்" என்று அநுஷ்டானவேளையிலே நமஸ்காரத்தைப் பண்ணினார்களென்கிற ஸ்தானப்ரமாணத்தாலே நமச்சப்தம் சாப்தமாகவே உபாயவாசகமாகக்கடவது. ஆக, பூர்வோக்தக்ரமத்தாலே ஆர்த்தமாகவும், ஸ்தானப்ரமாணத்தாலே சாப்தமாகவும் உபாயவாசகமாயறுகையாலே அநந்யசரணத்வத்திலே நோக்காய்க்கிடக்கிறது. ஆக, ப்ரணவத்தாலும் நமச்சப்தத்தாலும், ஸ்வரூபமும், ஸ்வரூபாநுரூபமான உபாயமும் சொல்லிற்றாயிற்று.

நாராயண அனந்தரம், உபாயபலமான கைங்கர்யத்தைச் சொல்லக்கடவதாகக்கொண்டு, தத்ப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறது—அகாரவிவரணமான நாராயணபதம். ரக்ஷ்யாம்சமும் ரக்ஷணப்ரகாரமுமிறே அகாரத்தில் விவரணீயமான அம்சம்; அதில் நாரசப்தத்தாலே ரக்ஷ்யாம்சத்தை விவரிக்கிறது. நாராயணனென்கிற ஸமஸ்தபதத்தாலே ரக்ஷணப்ரகாரத்தை விவரிக்கிறது. அதில் ரக்ஷ்யவிவரணம் பண்ணுகிற நாரபதம்:— "நர:" என்றும், "நார:" என்றும், "நாரா:" என்றுமாய், ஸ்வரூபேணவும் ப்ரவாஹரூபேணவும் நித்யமான பதார்த்தங்களைச் சொல்லுகிறது. ஸ்வரூபேண நித்யதையாவது:—ஸத்தான பதார்த்தத்தினுடைய உத்பத்திவிநாசாத்யந்தாபாவம். ப்ரவாஹரூபேண நித்யதையாவது:— உத்பத்திவிநாசயோகியாகாநிற்கச்செய்தேயும், பூர்வகாலத்திலுண்டான நாமரூபலிங்காதிகளுடைய அநந்யதாபாவம். "ஸூர்யாசந்த்ரமஸௌ தாதா யதாபூர்வமகல்பயத்" "யதர்த்துஷ்வ்ருதுலிங்காநி நாநாரூபாணி பர்யயே, த்ருச்யந்தே தாநி தாந்யேவ ததா பாவா யுகாதிஷு" என்கிறபடியே, அவ்வோருதுக்களில் முன்பு கழிந்த ருதுக்களிலுண்டாம் புஷ்பபலாதிகளையும் சேஷ்டாதிகளையும் நாமத்தையும் உடைத்தாய்க்கொண்டு ததாகாரமாய் வந்து

தோற்றுமாப்போலே ஸ்ருஷ்டமாம்போது முன்பு ஸ்வஸம்ஹ்ருதமான ஸம்ஸ்தானத்தையும் நாமாதிகளேயும் உடைத்தாய்க்கொண்டு பிறந்துபோருகை.

அதிலே ரேபம், "ரிங்-க்ஷயே" என்கிற தாதுவிலே க்ஷயிஷ்ணுபதார்த்தவாசகமாய்க் கிடக்கிறது. நகாரம், அத்தை நிஷேதித்து "நர:" என்று நித்யபதார்த்தத்தைச் சொல்லுகிறது. இங்ஙனே க்ஷயத்தை ப்ரஸங்கித்து ப்ரதிஷேதிக்கிறது—க்ஷயிஷ்ணுக்களான மஹதாதிகளேயும், ஒருமுகத்தாலே நித்யபதார்த்தங்களிலே முதலிடுகைக்காகச் சொல்லுகிறது; "நார:" என்கிற இடத்தில் 'அண் ப்ரத்யயம்', ஸமூஹார்த்தத்திலேயாய், நித்யபதார்த்தஸமூஹத்தைச் சொல்லுகிறது. "நாரா:" என்கிற பஹுவசனம் அந்த ஸமூஹத்தினுடைய பாஹுள்யத்தைச் சொல்லுகிறது. ஆக, "நாரா:" என்று, நித்யபதார்த்தங்களினுடைய ஸமூஹங்களேச் சொல்லிற்றாயிற்று.

அவையாவன:— ஜ்ஞானசக்த்யாதிதிவ்யாத்மகுணங்களும், குணப்ரகாசகமான திவ்யமங்களவிக்ரஹங்களும், விக்ரஹகுணமான ஸௌந்தர்யாதிகளும், அந்த ஸௌந்தர்யாதிகளோபாதி பூத்தாப்போலே சாத்தின கிரீடமகுடாதிதிவ்யாபரணங்களும், அவ்வாபரணங்களோடு விகல்பிக்கலாம்படியான சங்கசக்ராதிதிவ்யாயுதங்களும், இத்தனையும் காட்டிலெரித்த நிலாவாகாதபடி, அருகேயிருந்து அநுபவிக்கிற லக்ஷ்மீப்ரப்ருதிமஹிஷீவர்கங்களும், அச்சேர்த்தியிலே அடிமை செய்கிற அநந்தகருடவிஷ்வக்ஸேநப்ரமுகரான ஸூரிஸங்கமும், அவர்களோபாதி போய் அடிமைசெய்கிற முக்தரும், அவர்களுக்கடிமை செய்கைக்குப் பரிகரமான சத்ரசாமராதிபரிச்சதங்களும், அவ்வடிமைக்கு வர்த்தகமாய் பஞ்சோபநிஷண்மயமான பரமபதமும், குணத்ரயாத்மிகையான மூலப்ரக்ருதியும், புருஷஸமஷ்டியும், அஹோராத்ராதிவிபாகயுக்தமான காலதத்வமும், ப்ரவாஹரூபேண நித்யமான மஹதாதிகளும், தத்கார்யமான அண்டங்களும், அண்டாந்தர்வர்த்திகளான சதுர்விதபூதங்களும். பஞ்சோபநிஷண்மயமாகையாலே பரமபதமும், ஸமூஹாத்மகமாயிருக்கும்; குணத்ரயாத்மிகையாகையாலே மூலப்ரக்ருதியும் ஸமூஹாத்மிகையாயிருக்கும்; அஹோராத்ராதிவிபாகங்கள் அனேகமாகையாலே காலமும் ஸமூஹாத்மகமாயிருக்கும்.

ஆக, நாரசப்தத்தாலே வ்யாப்யபதார்த்தத்தைச் சொல்லி அனந்தரம் வ்யாப்தியையும் வ்யாப்திப்ரகாரத்தையும் சொல்லுகிறது. 'அயன'சப்தம், ஆவாஸவாசியாய், "நாராணும் அயநம் ய:, ஸ:—நாராயண:" "நாரா: அய்நம் யஸ்ய ஸ:—நாராயண:" என்கிற தத்புருஷ பஹுவ்ரீஹிரூபமான ஸமாஸத்வயத்தாலே, "அந்தர் பஹிச்ச தத் ஸர்வம் வ்யாப்ய நாராயணஸ் ஸ்தித:" என்கிறபடியே உக்தமான நித்யபதார்த்தங்களுக்குத் தான் ஆவாஸபூமியாய் இருக்குமென்றும், அவற்றைத் தனக்கு ஆவாஸமுடையனாய் இருக்குமென்றும் சொல்லுகிறது. அவற்றுக்குத் தான் ஆவாஸமாயிருக்கையாவது: ஸ்வேதரஸகலபதார்த்தங்களேயும் "மேரோரிவாணு:" "யஸ்யாயுதாயுதாம்சாம்சே விச்வசக்திரியம் ஸ்திதா" என்கிறபடியே தன் ஸ்வரூபைகதேசத்திலே தரிக்கை. அவற்றைத்தான் ஆவாஸமாக உடையனாயிருக்கையாவது: ஸ்வேதரஸகலபதார்த்தங்களேயும் சிதசித்விபாகமற தனித்தனியே உள்வாயிலே புக்கு, ஆகாசம் கடாதிகளிலே வ்யாபிக்குமாப்போலே தன் ஸ்வரூபைகதேசங்களாலே வ்யாபிக்கை

யன்றியிலே, ஜாதி, வ்யக்திதோறும் வ்யாபிக்குமோபாதி ஸமாப்ய ஆத்மதயா வ்யாபித்து தரிக்கை. இந்த அந்தர்வ்யாப்தியையும் பஹிர்வ்யாப்தியையும் நினைத்திறே ச்ருதி "அணோரணீயாந் மஹதோ மஹீயாந்" என்றது.

ஸ்வவ்யதிரிக்தங்களுக்கு ஆவாஸமாயிருக்குமென்னுமிடத்தில் நாரசப்தத்தில் ப்ரதமோபாத்தமான குணங்களும் ஸ்வரூபாச்ரயமாகையாலே அநுஸந்திக்கக்கடவோம். ஸ்வவ்யதிரிக்தங்களை ஆவாஸமாக உடையனாயிருக்குமென்னுமிடத்திலே குணங்களுக்கு வ்யாப்யத்வம் அநுபபந்நமாகையாலே அவற்றையொழிந்தவை, வ்யாப்திக்குக் கர்மீபவிக்கக்கடவன. தன் குணங்களிலே ஈச்வரன் வ்யாபிக்கும்போது குணவிசிஷ்டனாயே வ்யாபிக்கவேணும்; நிர்குணமாய் வஸ்து இராமையாலே. அப்போது வ்யாப்யகுணங்களே வ்யாபகங்களாய், வ்யாபககுணங்களே வ்யாப்யங்களாய் அறுகையாலே ஆத்மாச்ரயதோஷமுண்டாம். அதுக்கு மேலே தன் குணங்களிலே குணி வ்யாபிக்கவேணுமென்று புக்கால் ததாச்ரயமான குணங்களையும் குணி வ்யாபிக்கவேண்டும்; அந்த வ்யாபகனுடைய குணங்களையும் குணி வ்யாபிக்கவேண்டும்; ஆகையாலே அநவஸ்தா துஸ்தமாம். ஆக, ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வம், உபயவிபூதிநாதத்வம், ஸர்வஸ்மாத்பரத்வம், ஸர்வசரீரத்வமுள்ளிட்டவை உக்தமாய் நின்றது.

"நராஜ்ஜாதாநி தத்வாநி நாராணீதி ததோ விது:, தாந்யேவ சாயநம் தஸ்ய தேந நாராயணஸ் ஸ்ம்ருத:" என்று, "நரனுண்டு: நித்யனான ஸர்வேச்வரன்; அவன் பக்கல் நின்றும் ஜாதமான பதார்த்தங்கள் நாரங்களாகின்றன; தன் பக்கலில் உத்பந்நமான அந்த நாரங்களையே தனக்கிருப்பிடமாக உடையன்" என்கையாலே ஸர்வகாரணத்வத்தையும் சொல்லிற்றாயிற்று. இனி, "நாரசப்தேந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே புதை:, கதிராலம்பநம் தஸ்ய தேந நாராயணஸ் ஸ்ம்ருத:" என்கிறபடியே நாரசப்தம் நித்யமான ஜீவஸமஷ்டிக்கு வாசகமாய், அயநசப்தம், "இண்-கதௌ" என்கிற தாதுவிலே ப்ராப்யவாசியாய், ஆக நாராயணன் என்று, சேதநவர்க்கத்துக்கு ப்ராப்யபூதன் என்றதாயிற்று. பந்துலாபமும் ப்ராப்யமாகையாலே "மாதா பிதா ப்ராதா நிவாஸச் சரணம் ஸுஹ்ருத் கதிர் நாராயண:" என்றும், "எம்பிரானெந்தை யென்னுடைச் சுற்றமெனக்கரசென்னுடை வாணாள்" என்றும் சொல்லுகிறபடியே ஸர்வவிதபந்துவும் ஸர்வேச்வரனென்றும் சொல்லிற்றாயிற்று. "விஷ்ணு-போதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்" என்கிறபடியே அயநசப்தம் ப்ராபகவாசியாய், சேதநருக்கு ப்ராபகனென்றும் சொல்லிற்றாயிற்று. பிராட்டி நாரசப்தகோடிகதையாகையாலே இப்பதத்தில் லக்ஷ்மீஸம்பந்தமும் அநுஸந்தேயம். ஆக, இந்த நாராயணபதத்தாலே கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லிற்றாயிற்று.

ஆய. மகாரவிவரணமான "ஆய" என்கிற சதுர்த்தியாலே அவன் திருவடிகளில் பண்ணும் கைங்கர்யத்தை அபேக்ஷிக்கிறது. சதுர்த்தி, மகாரவிவரணமானபடி என்னென்னில்: சேஷத்வத்துக்கு ஆச்ரயமாகவிறே மகாரவாச்யனைச் சொல்லிற்று. "அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே, அந்த சேஷத்வஸித்திதான் கிஞ்சித்காரத்தாலேயாகையாலே, கிஞ்சித்காரப்ரகாசகமான இந்த சதுர்த்தி மகாரவிவரணமாகிறது. கிஞ்சித்காரமில்லாதவன்று சேஷத்வமில்லை. சேஷத்வமில்லாதவன்று ஸ்வரூபம், 'அஸந்நேவ' ஆய்விடும்.

ஆக, இம்மூன்று பதத்தாலும் ஈச்வரனுடைய ஸ்வரூபமும், ஆத்மாவினுடைய ஸ்வரூபமும், த்யாஜ்யதயா விரோதிஸ்வரூபமும் சொல்லிற்றாயிற்று.

ஈச்வரன் ஸர்வசேஷியாயிருக்கும்; சேதநவஸ்து அவனுக்கு அநந்யார்ஹசேஷமாயிருக்கும்; ஸ்வஸ்வாதந்த்ர்யமும், அந்யசேஷத்வமும், ஸ்வரூபவிரோதியாகக்கடவது; என்று சொல்லுகிறது—ப்ரணவத்திலே. நமச்சப்தத்திலே, ஈச்வரனுடைய நிரபாயோபாயத்வமும், சேதநனுடைய அநந்யசரணத்வமும், ஸ்வரக்ஷணப்ரவ்ருத்தி ஸ்வரூபஹாநி என்னுமிடமும் சொல்லிற்றாயிற்று. ஈச்வரகிஞ்சித்காரத்தினுடைய பரமப்ராப்யத்வமும், இவனுடைய அநந்யபோகத்வமும், ப்ராப்யாந்தரஸம்பந்தம் அப்ராப்தமென்னுமிடமும் சரமபதத்தாலே சொல்லிற்றாயிற்று. ஆக, இத்தால் சேதநனுடைய ப்ரக்ருதே:பரத்வமும், ப்ரக்ருதே:பரனுடைய சேஷத்வமும், சேஷத்வத்தினுடைய அநந்யார்ஹதையும், அநந்யார்ஹசேஷத்வப்ரதிஸம்பந்தியையும், அநந்யார்ஹசேஷபூதனுடைய அஹங்காரமமகாரநிவ்ருத்தியையும், தந்நிவ்ருத்தமான ஸ்வரூபத்தினுடைய அத்யந்தபாரதந்த்ர்யத்தையும், பாரதந்த்ர்யகாஷ்டையான ததீயசேஷத்வத்தையும், பரதந்த்ரனுக்கு அநுரூபமான உபாயத்தையும், உபாயபலமான கைங்கர்யத்தையும், கைங்கர்யப்ரதிஸம்பந்தியையும் சொல்லுகிறது.

ரக்ஷகாந்தரப்ரதிபத்தியுண்டானபோது, அகாரார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ஸ்வஸ்வாதந்த்ர்யம் நடையாடிற்றாகில், சதுர்த்யர்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. சேஷ்யந்தரப்ரதிபத்தி உண்டாயிற்றாகில், உகாரார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. தேஹாத்மாபிமானம் நடையாடிற்றாகில், மகாரார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ஸாதநாந்தரருசியும் ஸ்ரீவைஷ்ணவர்கள் பக்கல், ஸஜாதீயத்வப்ரதிபத்தியும் நடையாடிற்றாகில், நமச்சப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ஈச்வரவிபூதிபூதரோடே ராகத்வேஷம் நடையாடிற்றாகில், நாரசப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. அபந்துக்கள் பக்கல் பந்துத்வப்ரதிபத்தியுண்டாயிற்றாகில், அயநசப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ப்ரயோஜநாந்தரருசி உண்டாயிற்றாகில், சதுர்த்யர்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது.

பரந்த ரஹஸ்யம் திருமந்த்ரப்ரகரணம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.



# த்வய ப்ரகரணம்.

நம் ஆசார்யர்கள் இம்மந்த்ரார்த்தத்தை விசதமாக அநுஸந்தித்த ப்ரகாரமாய், "மந்தாரம் த்ராயதே" என்கிற வ்யுத்பத்தியின்படியே அநுஸந்தாதாவை ரக்ஷிக்கையாலே மந்த்ரசப்தவாச்யமுமாய், வாக்யத்வயாத்மகமாகையாலே த்வயமென்று திருநாமமுமாய், சிஷ்டாசாரத்வாரத்தாலே மந்த்ரஸித்தமான அர்த்தத்துக்கு ப்ரமாணமுமாய், இவ்வர்த்த நிஷ்டருடைய அநுஷ்டானரூபமாயிருக்கிற த்வயம், திருமந்த்ரத்தில் நமச்சப்தத்திலும் நாராயணபதத்திலும் உக்தமாய் ஸகலசாஸ்த்ரதாத்பர்யபூமிபூதமான உபாயாம்சத்தையும் உபேயாம்சத்தையும் விசதீகரிக்கிறது.

இப்படித்வயத்திலும் சொன்ன உபாயோபேயங்களே ஸகலசாஸ்த்ரதாத்பர்யமென்று நிர்ணயித்துத்தருவார் ஆரென்னில்: நின்றார் நின்ற நிலைகளிலே அவ்வோருக்கு ருசிவிஷயபூதமான புத்ரபச்வந்நாதிபுருஷார்த்தஸித்திக்கு ஸாதநவிசேஷங்களை எழுதிப்போருகிற சாஸ்த்ரந்தானே, "பரீக்ஷ்ய லோகாந் கர்மசிதாந் ப்ராஹ்மணோ நிர்வேதமாயாத்" "க்ஷரந்தி ஸர்வா வைதிக்யா ஜுஹோதி யஜதி க்ரியா:, அக்ஷரம் ந க்ஷரம் ஜ்ஞேயம் ப்ரஹ்மா சைவ ப்ரஜாபதி:" என்று, அல்பாஸ்திரத்வாதிதோஷபஹுளமாயிருக்கையாலே நிர்வேதகோசரமாகச் சொல்லி, "நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி" "ப்ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி" "மம ஸாதர்ம்யமாகதா:, ஸர்க்கேபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச" "ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி" "யத்ர நாந்யத் பச்யதி நாந்யச்ச்ருணோதி நாந்யத் விஜாநாதி ஸ பூமா" "நிரஸ்தாதிசயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா, பேஷஜம் பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா" "ஏதத் ஸாம காயந்நாஸ்தே, ஹாவுஹாவு," "யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி" "இமம் மாநவமாவர்த்தம் நாவர்த்தந்தே" "ந ச புநராவர்த்ததே, ந ச புநராவர்த்ததே" "அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்" "ஆ ப்ரஹ்மபவநால்லோகா: புநராவர்த்திநோர்ஜுந, மாமுபேத்ய து கௌந்தேய புநர்ஜந்ம ந வித்யதே" என்கிறபடியே, யாவதாத்மபாவி அநுபவியாநின்றாலும், அநுபூதாம்சம் அல்பமாய், அநுபாவ்யாம்சம் "யதோ வாசோ நிவர்த்தந்தே, அப்ராப்ய மநஸா ஸஹ" என்கிறபடியே வாங்மநஸ்ஸுகளுக்கு அவிஷயமாம்படி நிரவதிகவைபவத்தையுடைத்தாய், ஸம்ஸாரம், "பஹுதா ஸந்ததது:கவர்ஷிணி" என்கிறபடியே ஸுகலேசகந்தமில்லாதபடி நிஷ்க்ருஷ்டதுக்கமேயாய் இருக்குமாப்போலே, "நோபஜநம் ஸ்மரந்நிதம் சரீரம்" என்கிறபடியே பூர்வாநுபூதது:கஸ்ம்ருதிக்கு அவகாசமில்லாதபடி, "ஈறிலின்பத்திரு வெள்ளம் யான் மூழ்கினன்" என்று, நிஷ்க்ருஷ்டஸுகாவகாஹநரூபமாய், ஒரு காலத்திலே தோன்றி காலாந்தரத்திலே கழியுண்ணுமதன்றிக்கே போக்யமான அந்தப் பரவஸ்துவோடு போக்தாவான தன்னோடு போகவர்த்தகமான அத்தேசத்தோடு வாசியற அகாலகால்யமாயிருக்கையாலே, அவையுள்ளதனையும் அநுவ்ருத்தமாய், நேரே நிஷ்க்ருஷ்டமான சேதநனுடைய ஸ்வரூபத்துக்கு அநுரூபமுமாய், பகவத்குணாநுபவஜநிதப்ரீதிப்ரேரிதமுமான பகவத்கைங்கர்யமே பரமப்ராப்யமென்று சொல்லுகையாலும், அதுக்கு மேலே நிரதிசயமாயிருப்பதொரு புருஷார்த்தமுண்டாக ச்ருதமல்லாமையாலும் உபேயமாயறுவது பகவத்கைங்கர்யம்.

அப்படி பரமப்ராப்யமான கைங்கர்யத்தைப் பெறுகைக்கு ஸாதனமாக சாஸ்த்ரங்களிலே எழுதுகிற, "ஸத்யம் தபோ தமச் சமோ தாநம் தர்ம: ப்ரஜநநமக்நயோக்நிஹோத்ரம் யஜ்ஞோ மாநஸம் ந்யாஸ:" என்றாப்போலே, சொல்லுகிற ஸாதநஸமூஹங்களை, "தஸ்மாந்

ஸத்யம் பரமம் வதந்தி, தஸ்மாத் தப: பரமம் வதந்தி" என்று ஒன்றுக்கொன்று உத்க்ருஷ்டமாகச் சொல்லி, எல்லாத்துக்கும் மேலே "தஸ்மாந்ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" "ந்யாஸ இதி ப்ரஹ்மா, ப்ரஹ்மா ஹி பர:, பரோ ஹி ப்ரஹ்மா, தாநி வா ஏதாந்யவராணி தபாம்ஸி ந்யாஸ ஏவாத்யரேசயத்" என்று ஸர்வோத்க்ருஷ்டமாக ந்யாஸசப்தவாச்யமான உபாயவிசேஷத்தைச் சொல்லி, தத்வ்யதிரிக்தங்களையடைய அபக்ருஷ்டமாகச் சொல்லுகையாலும், இதுக்கு மேலே விலக்ஷணமாயிருப்பதொரு உபாயவிசேஷத்தை எடாமையாலும், அந்த கைங்கர்யப்ராப்திக்கு உசிதமான உபாயமும் நமச்சப்தோக்தமான உபாயமே ஆகையாலே, இவை ஸகலசாஸ்த்ரதாத்பர்யங்களான உபாயோபேயங்கள்.

ஆக, இந்த சாஸ்த்ரத்துக்குத் தாத்பர்யமாயறுவது இங்கு சொன்ன உபாயமும் உபேயமுமாகில், உபாயாந்தரங்களையும் உபேயாந்தரங்களையும் உபபாதிக்கைக்கு அடியென்னென்னில்: சாஸ்த்ரமாகிறது—"த்ரைகுண்யவிஷயா வேதா:" என்கிறபடியே, பெற்றதாய் அந்தபதிராதிகளான விகலகரணரோடு படுகரணரோடு வாசியற வத்ஸலையாயிருக்குமாப் போலே, மாதாபித்ருஸஹஸ்ரங்களிற்காட்டிலும் வத்ஸலதரமாகையாலே, தம:ப்ரசுரரோடு ஸத்வப்ரசுரரோடு வாசியற அவர்கள் அபேத ப்ரவ்ருத்தராய், நசிக்கவிட க்ஷமமல்லாமையாலே அவ்வோருடைய குணாநுகுணமாக புருஷார்த்தங்களையும் தத்ஸாதநங்களையும் உபதேசித்துக் கொள்கொம்பிலே ஏறுகைக்கு சுள்ளிக்கால் நாட்டுவாரோபாதி, இவ்வோமுகங்களாலே தன்னுடைய தாத்பர்யாம்சத்திலே ஆரோபிக்கைக்காக ப்ரவர்த்திப்பிக்கிறதாகையாலே குறையில்லை.

அதாவது: ஒருவன், தன்னுடைய கர்மவிசேஷத்தாலே பரஹிம்ஸை ஸாதநமாக த்ரவ்யார்ஜநம் பண்ணுகையிலே ருசியுடையனும்; அவனுக்கு பரமபுருஷார்த்தலக்ஷண மோக்ஷஸ்வரூபத்தையும், தத்ஸாதநத்தையும் உபதேசித்தால், ஜீவிக்கையாகாது. இவனை அநாதரிக்கில் அபதே ப்ரவ்ருத்தனாய் நஷ்டனாம். அதுக்காக இவனுடைய ருச்யநுகுணமாக, "நீ த்ரவ்யார்ஜநம் பண்ணுகைக்காக வழிபறிக்கையிலே அந்வயிக்கில் அது ஆயாஸஸாத்யமுமாய், நீ நினைக்கிற பலந்தான் ஸாக்ஷிகமுமாய், நரகோதர்க்கமுமாயிருக்கும்; நான் சொல்லுகிற வழியே இழியில் அவ்வாயாஸஸாத்யத்வாதிகளின்றியிலே நீ நினைக்கிற பலம் பெறலாம்; நீ கணிசிக்கிறபரஹிம்ஸையையும் கைவிடவேண்டா" என்று ச்யேநவிதியை உபதேசிக்கும். ஆனால், சேதமென்னென்று இதிலே இழிந்து இத்தை அநுஷ்டிக்கும். அது போய் அநாயாஸேந பலபர்யந்தமானவாறே சாஸ்த்ரத்திலே ஒரு விச்வாஸவிசேஷம் பிறக்கும். அத்தாலே க்ஷீணபாபனும். அந்த பாபக்ஷயத்தாலே பிறரைக்கொன்று வயிறு வளர்க்கையில் ருசி கழிந்து, அஹிம்ஸாத்மகமாயிருப்பதொரு வழியாலே த்ரவ்யார்ஜநம் பண்ணுகையிலே ருசி பிறக்கும். அவ்வளவிலே "வாயவ்யம் ச்வேதமாலபேத பூதிகாம:" "சித்ரயா யஜேத பசுகாம:" "காரீர்யா வ்ருஷ்டிகாமோ யஜேத" என்றாப்போலே, ஐஹிகபலஸாதனங்களை விதிக்கும்; இந்த ஐஹிகபலமான க்ஷேத்ராதிகளிலே, அல்பத்வபரிமிதகாலவர்த்தித்வாதிகளைக்கண்டு, பஹுளமாய் சிரகாலவர்த்தியான பலத்திலே ருசியுண்டானபோது "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" என்றாப்போலே ஸ்வர்க்காதிஸாதநவிசேஷங்களை விதிக்கும். அவைதன்னிலும், "ஸ்வர்க்கேபி பாதபீதஸ்ய க்ஷயிஷ்ணோர் நாஸ்தி நிர்வ்ருதி:" "அஸந்தோஷச்ச பவதி த்ருஷ்ட்வா தீப்தாம் பரச்ரியம்" இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே,

கர்மஸாத்யமாகையாலும், கர்மக்ஷயத்திலே க்ஷீணமாவதொன்றாகையாலும், இடைவிடாமல் பதநபயம் நடையாடுகையாலும், பரஸம்ருத்தி பொறுக்கமாட்டாதபடியாலே உண்டது உருக்காட்டாதே தனக்குண்டான ஸுகம் கீழ் அற்றுப்போகையாலும், ஸ்ருஷ்டிஸம்ஹாராதிகளுக்குக் கர்மீபவித்துப்போகும் தேசமாகையாலும் நிர்விண்ணனாய், துக்கங்கள் நேராகக் கழலுகையிலே ருசி பிறந்ததாகில், "யோகிநாமம்ருதம் ஸ்தாநம் ஸ்வாத்மஸந்தோஷகாரிணும்" என்கிறபடியே ஆத்மப்ராப்திஹேதுபூதமான யோகவிசேஷத்தை விதிப்பது; அது தன்னிலும், "தெரிவரியவளவில்லாச் சிற்றின்பம்" என்கிறபடியே ப்ராக்ருதவிஷயபோகத்திற்காட்டில் மினுங்கியிருந்ததேயாகிலும், ஸ்வாத்மாநுபவமாத்ரமாகையாலே விதவாபோகத்தோபாதி ஸங்குசிதமாயிருக்குமென்று, தத்ஸங்கோசநிபந்தனமான உபேக்ஷை பிறந்ததாகில், "ஆநந்தோ ப்ரஹ்ம" "ஆநந்தமய:" "ஆநந்தயாதி" "ஆநந்தீ பவதி" "வீவிலின்பம் மிகவெல்லை நிகழ்ந்தனன் மேவியே" என்கிறபடியே, தன்னோடு கிட்டினாரையடைய பரமாநந்திகளாகப் பண்ணும்படி ஆனந்தமயனை ஸர்வேச்வரனைப் பெறுகைக்கு உபாயமான கர்மஜ்ஞாநாதி ஸாதநபரம்பரைகளை விதிப்பது; அந்த ஸாதனங்களுடைய அஷ்கரத்வஸாபாயத்வசிரகால ஸாத்யத்வவிளம்ப்யபலப்ரதத்வாத்யநுஸந்தானத்தாலே இளைத்தவனுக்கு, அந்த ஸாதனங்களுக்கு எதிர்த்தட்டாயிருக்கும் ஸாதனவிசேஷத்தை விதிப்பதாய்ப் போருகிறதாகையாலே, பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷத்தை விதிக்கலாவது—தத்வ்யதிரிக்தஸகலபுருஷார்த்தங்களிலும் ஜுகுப்ஸை பிறந்தவனுக்கு; அந்த புருஷார்த்தத்துக்கு ஸாதநமான சரமோபாயத்தை விதிக்கலாவது—முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரத்திலுண்டான பயமடைய இஸ்ஸாதனங்களிலே உடையனாயிருக்குமவனுக்கு. ஆக, இவையிரண்டும் அநதிகாரிகளுக்கு உபதேசிக்கைக்கு யோக்யதையில்லாமையாலே அதிகாரிகளாகைக்காக தத்தத்குணாநுகுணமான புருஷார்த்த தத்ஸாதனங்களை விதிக்கிறது.

ஆக, திருமந்த்ரார்த்தத்தை விசதீகரிக்கிற த்வயத்தில் பூர்வார்த்தம் பதத்ரயாத்மகமாய், "தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:" "முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே" "த்வாமேவ சரணம் ப்ராப்ய நிஸ்தரந்தி மநீஷிண:" "ஸோஹம் த்வாம் சரணமபாரமப்ரமேயம் ஸம்ப்ராப்த:" "சரணம் தேவ்ரஜம் விபோ" "சரண்யம் சரணம் யாதோ கோவிந்தம் நாவஸீததி" "சரணம் வ்ரஜ" "மாமேகம் சரணம் வ்ரஜ" இத்யாதிகளிலே முமுக்ஷுவுக்குக் கர்த்தவ்யமாகச் சொல்லப்படுகிற ப்ரபத்தியையும், ப்ரபத்தவ்ய விஷயவிசேஷத்தையும், அத்தை அச்சமற ஆச்ரயிக்கலாம்படி பண்ணித்தரும் புருஷகார விசேஷத்தையும் சொல்லுகிறது.

அதில், பதத்ரயாத்மகமான ப்ரதமபதத்தில் ஸ்ரீசப்தம், புருஷகாரத்தைச் சொல்லுகிறது. உபாயம் உபேயார்த்தமாயிருக்கச்செய்தேயும், வ்யுத்பத்திவேளையன்றியிலே அநுஷ்டானவேளையாய், உபாயாநுஷ்டாநாநந்தரம் உபேயஸித்தியாகையாலே, ப்ரதமோபாத்தமானவோபாதி இவ்வுபாயஸ்வீகாரத்துக்கு முன்னே வேணுமே சேரவிடும் புருஷகாரமும்; ஆகையாலே ப்ரதமத்திலே புருஷகாரபாவத்துக்கு ஏகாந்தமான ஸ்வபாவவிசேஷங்களோடே கூடியிருக்கிற வஸ்துவிசேஷத்தை நிர்தேசிக்கிறது, ஸ்ரீசப்தம்.

அந்த ஸ்வபாவங்களாவன:— புருஷகாரமாக நினைக்கிற வஸ்துவைப் பற்றும்போது, வேறொரு புருஷகாரம் தேடவேண்டாதபடி, இவனோடே ஒரு ஸம்பந்தவிசேஷமுண்டாகையும்,

இவன் நினைக்கிற விஷயத்தோடே சேர்க்கும்போது இவன் றன்னோபாதி, தனக்கு வேறொரு புருஷகாரம் வேண்டாதபடி அவ்விஷயத்தோடே ஒரு ஸம்பந்தவிசேஷமுண்டாகையும்; ஆக, இரண்டுமிறே புருஷகாரவஸ்துவுக்கபேக்ஷிதம். அவை இரண்டு ஸ்வபாவவிசேஷத்தையும் "ச்ரிங்-ஸேவாயாம்" என்கிற தாதுவிலே "ஸ்ரீயதே" "ச்ரயதே" என்கிற வ்யுத்பத்தி த்வயத்தாலுமாக ப்ரகாசிப்பிக்கிறது. வ்யுத்பத்தித்வயத்தாலும் "ஸேவிக்கப்படாநின்றாள்; ஸேவியாநின்றாள்" என்று, ஸேவாவிஷயமாயிருக்கும்; ஸேவைக்கு ஆச்ரயமுமாயிருக்கு மென்கிறது. "ஈச்வரீம் ஸர்வபூதாநாம்" "அஸ்யேசாநா ஜகத:" இத்யாதிகளிற்சொல்லுகிற படியே, பகவத்வ்யதிரிக்தஸகலபதார்த்தங்களுக்கும் ஈச்வரியாயிருக்கையாலே, த்ரிவிதாத்ம வர்க்கத்தாலும் ஸேவிக்கப்படாநிற்கும். ஆகையாலே ஸேவாவிஷயபூதையாயிருக்கக்கடவள். "விஷ்ணுபத்நீ" "விஷ்ணோச் ச்ரீ:" "ஹ்ரீச்சதே லக்ஷ்மீச்ச பத்ந்யௌ" இத்யாதிகளிற் சொல்லுகிறபடியே, பத்நீத்வேந ஈச்வரனுக்கு சேஷபூதையாயிருக்கையாலே, அவனை ஸேவியாநிற்கும். ஆகையாலே ஸேவைக்கு ஆச்ரயமுமாயிருக்கும். ஆனபோதிறே கர்ம கர்த்ருபாவவிரோதமின்றிக்கேயொழிவது. மாதாவாகில் ப்ரஜைகளுக்கு ஸ்வாமிநியுமாய் பர்த்தாவுக்கு சேஷபூதையுமாயிறே இருப்பது. "த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா" என்னக்கடவதிறே. ஆக, மாத்ருத்வத்தாலே சேதனரோடே நித்யஸம்பந்த முண்டாகையாலும், பத்நீத்வேந ஈச்வரனோடே நித்யஸம்பந்தமுண்டாகையாலும் புருஷகார பூதை பிராட்டி என்னுமிடத்தை வ்யுத்பத்தித்வயத்தாலும் சொல்லிற்றாயிற்று.

புருஷகாரபாவத்துக்கு ஏகாந்தமாக இவளுக்குச் சொன்ன உபயஸம்பந்தத்துக்கு முண்டான ப்ரயோஜனவிசேஷத்தைச் சொல்லுகிறது: "ச்ருணோதீதி ஸ்ரீ:" "ச்ராவயதீதி ஸ்ரீ:" என்கிற நிருக்தம். "ச்ருணோதி" என்று, கேட்குமென்கையாலே, சேதநரோடுண்டான பந்தகார்யத்தைச் சொல்லுகிறது. "ச்ராவயதி" என்று, கேட்பியாநிற்குமென்கையாலே ஈச்வரனோடுண்டான பந்தகார்யத்தைச் சொல்லுகிறது.

அதாவது:— இவன் "ஈச்வரதத்வமில்லை" என்று எழுத்திடுமன்றும், இவன் உருமாயாதபடி இராமடமூட்டுவாரோபாதி, கண் காணமல் நோக்கிப் போருவது; கரணகளேபரவிதுரமாய் அசித்கல்பமாய்க் கிடக்க, அபேக்ஷாநிரபேக்ஷமாகவே தயமானமநா வாய்க்கொண்டு கரணகளேபரங்களைக்கொடுப்பது; பின்பு, இவற்றுக்கு ப்ரவ்ருத்திநிவ்ருத்தி சக்தியுண்டாகைக்காக அநுப்ரவேசிப்பது; பின்பு, அஸுரராக்ஷஸாதிகள் காலிலே துகை யுண்ணும்போது, "நாட்டில் பிறந்து படாதன பட்டு" ராமக்ருஷ்ணாதிரூபேண மார்பிலே அம்பேற்று, எதிரிகளை இடறிக்கொடுப்பது; "நம்மைப் பெறுகைக்கீடாயிருப்பதொரு அறிவுண்டாமோ" என்னும் நோயாசையாலே, வேதங்களையும், வைதிகரையும், ப்ரவர்த்திப் பித்து, இவை படுகிற நோவைக் கண்டு, இவர்களிலும் "ப்ருசம் பவதி து:கித:" என்று திருவுள்ளம் மிகவும் உடைகுலைப்படுவது; ஸாதனங்களாகக் கொடுத்த கரணகளேபரங்களை பாதகங்களாக்கல், அவற்றைக்கொண்டு அத:பதியாமைக்காக, அவற்றை ஒடித்திட்டுவைப்பது; பின்பு, "ஸ ஏகாகீ ந ரமேத" என்று நித்யவிபூதியுக்தனை தான் இவற்றையொழியச் செல்லாமையுடம்பு வெளுப்பதாம்படியான நிருபாதிகபந்தமும், "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே, இவை படுகிற நோவு பொறுக்கமாட்டாமையாலே "நாம் இழிந்து நோக்குகைக்கு, சிறிது இடம் பண்ணித் தருவது காண்!" என்று

அவஸரப்ரதீக்ஷனுவது; "அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:" என்று "நான் அழிந்தேயாகிலும் ஆச்ரிதரை ரக்ஷிக்கக்கடவேன்" என்பது; "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்" "ந த்யஜேயம் கதஞ்சந" "ஸமோஹம் ஸர்வபூதேஷு" என்னும் ஸ்வபாவவிசேஷமும்; ஏவமாதிகளுடைய ஆச்ரயணீயனை ஸர்வேச்வரன் பக்கலிலே ஸம்வேதமாயிராநிற்கச் செய்தேயும், அப்படிப்பட்டிருக்கிற அவனுடைய வாத்ஸல்யசீதளமான திருவுள்ளத்தை, "க்ரோதமாஹாரயத் தீவ்ரம்" என்கிறபடியே க்ரோதத்துக்கு இரையாக்கிக் கடல் கொதித்தாப்போலே கொதிக்கும்படி பண்ணுவது; "ப்ரியம்வத:" என்கிறபடியே ம்ருதஸஞ்சீவிநியான வாகம்ருதத்தை "க்ஷிபாமி" "ந க்ஷமாமி" "ஹந்யாம்" என்கிறபடியே, விஷதாரை போலே ச்ரவணகடுகமாம்படி பண்ணுவது; ஸர்வோஜ்ஜீவனஹேதுவான அவனுடைய திவ்யவ்யாபாரங்களை நரகாதிகளிலே தள்ளிக் குட்டிக்கொலையாக நிறுத்தறுத்துத் தீர்த்துகையிலே அதிக்ருதமாம்படியும், அநாதிகாலம் பண்ணிப்போருகிற பகவதபசாரபாகவதாபசாரா ஸஹ்யாபசார நாநாவிதாநந்தாபசாராநுஸந்தாநத்தாலே குடல் கரிந்து அநாதிகாலம் கர்மங்களை நிறுத்தறுத்துத் தீர்த்துப்போருகிற அவனை ஆச்ரயிக்கப் புகுகிறது; "அவன் உதிரக்கை கழுவாதபடி பண்ணிப்போந்த நான் ஆச்ரயிக்கப் புகுகிறேன்; அதுக்குக் கைதொடுமான கர்மம் இலச்சினைப்படியே குறியழியாமல் கிடக்கிறது." என்கிற பயாதிசயத்தாலே தேங்கி, ஸம்ஸாரத்தில் வெம்மையும், பகவத்விஷயத்தில் வைலக்ஷண்யமும் வடிம்பிடுகையாலே, பண்டு போலே ஆச்ரயணவிமுகனுமாட்டாதே, துஷ்கரத்வாதிகளாலே ஸாதநாந்தரங்களில் காலிடக்கூசி, புறம்பே போக்கடியற்றுத் தெகிடாடுகிற இச்சேதநன் 'ஈச்வரன் திருவுள்ளத்தில் நடையாடுகிற அழல் தீயை ஆற்றி, நம்மைச் சேரவிடுகைக்கு நம்மோடும் அவனோடும் நிருபாதிகஸம்பந்தத்தை உடையளாய், "ந கச்சிந் நாபராத்யதி" என்னுமிவளையொழியப் புகுவாசலில்லை' என்று காகவ்ருத்தாந்தாதிமுகத்தாலே அறுதியிட்டு, "ப்ரணிபாதப்ரஸந்நாஹி மைதிலீ ஜநகாத்மஜா" என்று புருஷகாரநிரபேக்ஷமாக அஞ்சலிமாத்ரஸாலபையான இவளை வந்து கிட்டி, "மாதர் மைதிலி ராக்ஷஸீஸ் த்வயி ததைவார்த்ராபராதாஸ் த்வயா, ரக்ஷந்த்யா பவநாத்மஜால்லகுதரா ராமஸ்ய கோஷ்டீ க்ருதா" என்கிறபடியே, "புறம்புள்ள பொருத்தமடைய அற்று, ஈச்வரனுக்காளாகாதபடி, பூர்வாபராதத்தாலே அஞ்சின எனக்கு நிருபாதிகஜநநியான தேவரீர் திருவடிகளொழியப் புகலில்லை; இனி நான் ஈச்வரனுடைய இரக்கத்துக்கு இரையாய் ரக்ஷிதனுதல்; அவனுக்கு ஸ்வாதந்த்ர்யபாத்ரமாய் நாசத்தோடே தலைக்கட்டுதலொழிய இவைப்பாறுகைக்கிடமில்லாதபடி அநந்யகதி; இனி, அடியேனுக்கு ஹிதமின்னதென்றறிந்து ரக்ஷித்தருளுகை தேவரீருக்கே பரம்." என்று இவன் சொன்ன வார்த்தையைக் கேட்கையும்;

அதுக்கு மேலே வெந்நீருக்குக் குளிர் நீர் போலே நிரங்குசஸ்வாதந்த்ர்யத்தாலே "அபித: பாவகோபமம்" என்கிறபடியே அநபிபவநீயனை ஈச்வரனைத் தன்னுடைய போக்யதாதிசயத்தாலே பதமாக்கி "நாயந்தே! இச்சேதநனை அங்கீகரித்தருளீர்" என்னும்; "ஆவதென்; 'ச்ருதிஸ்ஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா' என்று நம்முடைய ஆஜ்ஞாரூபமான சாஸ்த்ரமர்யாதையை அதிலங்கித்து நம் நெஞ்சு புண்படும்படி நிரக்கழிய அபராதம் பண்ணிப்போந்தவனல்லனோ? இவனை அங்கீகரிக்கையாவதென்?" என்னும் ஈச்வரன்; "அவனுடைய பூர்வாபராதங்களை உம்முடைய பொறைக்கிலக்காக்கி ரக்ஷித்தருளீர்"

என்னும் பிராட்டி; "பொறையை நோக்குகைக்காக சாஸ்த்ரமர்யாதையைக் குடநீர் வழியவோ" என்னும் ஈச்வரன்; "சாஸ்த்ரமர்யாதையை நோக்குகைக்காக உம்முடைய ஸ்வாபாவிகமான க்ஷமாதத்வத்தைக் குடநீர் வழியவோ" என்னும் பிராட்டி; "க்ஷமையை நோக்கில், சாஸ்த்ரமர்யாதை குலையும்; சாஸ்த்ரமர்யாதையை நோக்கினல் க்ஷமாதத்வம் குலையும்; இரண்டும் குலையாதொழிய வேண்டும்; செய்யவடுப்பதென்?" என்னும் ஈச்வரன்; "கிங்கர்த்தவ்யதாகுலனுயிருந்தால் அத்தனையே; அவை இரண்டும் குலையாதபடி வழி சொல்லுகிறேன்; அப்படியே செய்தருளீர்." என்னும் பிராட்டி; "இரண்டும் குலையாமல் இச்சேதநனை நோக்க வழியுண்டாமாகில் நமக்குப் பொல்லாதோ? சொல்லிக்காண்" என்னும் ஈச்வரன்; "ஆனல், சாஸ்த்ரமர்யாதையை விமுகர் விஷயமாக்குவது; உம்முடைய க்ஷமையை அபிமுகவிஷயமாக்குவது; இரண்டும் ஜீவித்ததாயறும்" என்னும் விஷயவிபாகம் பண்ணிக் கொடுக்கும்பிராட்டி; அத்தைக்கேட்டு "அழகிய விபாகம்!" என்று இச்சேதநனை அங்கீகரித்தருளும் ஈச்வரன்; ஆக, இப்படி ஸாபராதஜந்துவை ஈச்வரன் அங்கீகரித்தருளும்படியான வார்த்தைகளைக் கேட்பித்தருளுகையும்.

ஆக, புருஷகாரத்வஸமர்ப்பகமான ஸ்வபாவவிசேஷங்களும், தத்கார்யங்களும் தர்மிக்ராஹகமான ஸ்ரீசப்தத்தாலே சொல்லிற்றாயிற்று. இப்படி, புருஷகாரபூதையாயற்றாலும் இவள் அஸந்நிஹிதையாயிருக்குமாகில், "சஞ்சலம் ஹி மந:" "சலசித்தம்" "நின்றவா நில்லா நெஞ்சு" என்கிறபடியே, குருவழிக்காற்றுப் போலே சுழன்று வருகிற இஸ்ஸம்ஸாரி சேதநருடைய நெஞ்சு தளமாக அங்குரித்த ருசியாகையாலே, க்ஷணபங்குரையாயிருக்குமாகையாலே, அது நீவதற்கு முன்னே ஈச்வரனை ஆச்ரயிக்கைக்கு விரகற்றுப் பழைய குருடே ஆய்விடும் என்கிற சங்கையிலே, ருசி பிறந்தபோதே ஆச்ரயிக்கலாம்படி ஆச்ரயணீயவஸ்துவோடே இவள் நித்யஸம்யுக்தையாய் இருக்கும் என்கிறது—மதுப்பு.

இம்மதுப்பு, 'நித்யயோகே மதுப்' ஆகையாலே இவள் நித்யாநபாயிநியாய் இருக்குமென்கிறது. அதுக்கு ஹேது என்னென்னில்: ஜ்ஞாநாநந்தலக்ஷணமான பகவத்ஸ்வரூபத்துக்கு ஜ்ஞாநாநந்தலக்ஷணமான ஆத்மஸ்வரூபத்திற்காட்டில் வ்யாவர்த்தகமான ஹேயப்ரத்யநீகத்வவிபுத்வசேஷித்வாதிகளோபாதி, ச்ரிய:பதித்வமும், ம்ருத்பாதாநகமான கடகராதிகளில் ப்ருதுபுத்நோதராகாரரூபையான கடத்வஜாதி கடத்துக்கு கரகாதிவ்யாவ்ருத்தியைப் பண்ணுகிறவோபாதி, வ்யாவ்ருத்தியைப் பண்ணித்தரும்படி, ஸ்வரூபநிரூபகபூதையாகையாலும், ஸ்வாபாவிகமாகவும் ஔபாதிகமாகவும் பகவத்ஸாரூப்யம்பெற்றிருக்கிற நித்யருடையவும் முக்தருடையவும் விக்ரஹங்களிற்காட்டில் வ்யாவ்ருத்தமாம்படி, "ஸ்ரீவத்ஸவக்ஷா:" என்கிறபடியே, அஸாதாரணதிவ்யமங்களவிக்ரஹத்துக்கு நிரூபகபூதையாகையாலும், ஒரு மிதுனவிஷயகிஞ்சித்காரத்தையொழியில், க்ஷணகாலமும் தரிக்கமாட்டாதபடியான நித்யரையும் முக்தரையும் நித்யகைங்கர்யம் கொள்ளுகைக்காக, "ச்ரியா ஸார்த்தமாஸ்தே" என்கிறபடியே நிரந்தர ஸம்ச்லேஷம் பண்ணிக்கொண்டிருக்கையாலும், விபவாதிகளிலும் வந்தால், "தேவத்வே தேவதேஹேயம் மநுஷ்யத்வே ச மாநுஷீ, விஷ்ணோர் தேஹாநுரூபாம் வை கரோத்யேஷாத்மநஸ் தநும்" என்கிறபடியே அவ்வோ அவ்வோ அவதாரஸஜாதீயமான விக்ரஹபரிக்ரஹம் பண்ணி வந்து அவதரிக்கையாலும், அதுக்கு மேலே "அகலகில்லேனிறையும்" என்று மார்பிலே இருந்து மடலெடுக்கும்படி பகவத்போகத்திலே ஆழங்காற்பட்டு,

“ஜலாந் மத்ஸ்யாவிவோத்த்ருதௌ” என்கிறபடியே க்ஷணகாலவிச்லேஷாஸஹையாய்
இருக்கையாலும், “ஸ்வவைச்வரூப்யேண ஸதாநுபூதயாப்யபூர்வவத் விஸ்மயமாததாநயா”
என்கிறபடியே பகவதநுபவாவகாஹநம் பண்ணி நித்யமுக்தஸங்கங்கள் “ஸ ஏகதா பவதி,
த்விதா பவதி, த்ரிதா பவதி, சததா பவதி, ஸஹஸ்ரதா பவதி” என்று, அநேகசரீரபரிக்ரஹம்
பண்ணி நிரந்தராநுபவம் பண்ணினாலும், “நிரவத்ய: பர: ப்ராப்தே:” என்கிறபடியே
அநுபூதாம்சம் அல்பமாய், அநுபாவ்யாம்சமே அபரிச்சிந்நமாம்படியான பெரிய வைபவத்தை
யுடைய தானும் தன்னுடைய ஜ்ஞாநசக்த்யாதிகளையும், ஸ்வவைச்வரூப்யத்தையும் சேர்ந்து
ஒருகாலகலைக்தேசமும் மடுடு பற்றாதபடி நிரந்தராநுபவம் பண்ணாநின்றாலும், ஆனைக்குக்
குதிரை வைத்து அந்த வைச்வரூப்யாநுபவமடைய, போகோபோத்காதகேளீசளிதமாம்படி-
பண்ணவற்றான அவளுடைய நிரவதிகபோக்யதாதிசயத்தாலே மார்பிலே இருத்தி
மடலெடுக்கும்படி க்ஷணகாலமும் விரஹாஸஹளைகயாலும், இவள் நித்யஸம்யுக்தையா
யிருக்கும்.

“ஸ்ரீயதே” என்கிற வ்யுத்பத்தியாலே த்ரிவிதாத்மவர்க்கத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி
சொல்லிற்று. மதுப்பாலே அல்லாத நாச்சிமாரிற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று.
அல்லாதவர்களுக்கு நித்யஸம்யோகஹேதுபூதங்களான ஸ்வரூபநிரூபகத்வாதிகளில்லையே.
ஆக, இவள் சொன்னதொன்றை மேல் விழுந்து கேட்கும்படியான இவளோடுண்டான
நிருபாதிகபந்தத்தாலும், நித்யாநபாயிநியாய் நின்று, “அல்லிமலர்மகள் போகமயக்குக்
காளாகியும் நிற்கும்” என்னும்படி பண்ணும் தன்னுடைய வால்லப்யாதிசயத்தாலும் நிருத்தர
மாம்படியான தன்னுடைய உக்திவிசேஷங்களாலும், அவனுடைய ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றிச்
சேரவிட க்ஷமையாகையாலும், புருஷகாரபாவம் சொல்லிற்றாயிற்று.

“ஸ்ரீமந்நாராயணசரணௌ” என்று உபாயதயா வக்ஷ்யமாணனான நாராயணனுக்கு
விசேஷணமாக ஸ்ரீமத்தையைச் சொல்லாநின்றால், நாராயணசப்தத்தினால் சொல்லப்புகுகிற
குணவிசேஷங்கள் விசேஷணத்வேந உபாயசரீரத்தில் அந்விதமாகிறவோபாதி, இவளும்
உபாயாவயவமாக ப்ராப்தையுமாய், மாதாபிதாக்களிருவரும் சேரவிருந்து ப்ரஜாரக்ஷணம்
பண்ணுகை ப்ராப்தமுமாய், அதுக்கு மேலே “வேரி மாறாத பூமேலிருப்பாள் வினை தீர்க்கும்”
என்று உபாயக்ருத்யமான விரோதிநிவர்த்தகத்வம் இவ்வர்த்தத்திலே நிஷ்டரான நம்மாழ்வார்
திருவுள்ளத்தாலுமுண்டாய், ப்ரதேசாந்தரங்களில் இவளைப் புருஷகாரமாக நினைத்துச்
சொல்லுகிறார்களென்கிற அவையும் உபாயபாவத்திலே அந்வயிப்பிக்க யோக்யமுமாய்,
அதுக்கு மேலே, “அரி: ப்ராணாந் பரித்யஜ்ய ரக்ஷிதவ்ய:” என்று மேலே அநுஷ்டிக்கப்புகுகிற
ப்ரபத்தி தானே, புருஷகாரக்ருத்யத்தைச் செய்யவற்றாகையாலும், மாட்டாதாகில், இவள்
ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றிச் சேரவிட, உபாயபூதனான ஈச்வரன் ரக்ஷிக்க அமைந்திருக்க
உபாயாந்விதமான இவளுடைய ப்ரபத்யநுஷ்டானம் நிஷ்பலமாம்படியுமாயிருக்க, இவளுக்கு
உபாயசரீரத்திலே அந்வயமில்லை; புருஷகாரத்திலே என்று, ஒதுக்கித் தருவார் ஆரென்னில்:

விசேஷணத்வமுண்டேயாகிலும், விசேஷணபூதமான குணவிசேஷங்களோபாதி,
உபாயோபயோகித்வம் அவளுக்கில்லாமையாலும், ஸமாச்ரயணைகாந்தமான ஸௌசீல்யாதி
குணைநயவிரோதியான ஸ்வாதந்த்ர்யத்தைப் புருஷகாரபூதையான இவள் ஆற்றினாலும்,

அவன் கார்யம் செய்யும்போதைக்கு "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே உபாயப்ரார்த்தனாரூபமான ப்ரபத்தி வேண்டுகையாலும், "வினை தீர்க்கும்" என்கிற இடம் "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்கிறவருடைய உக்தியாகையாலே, இத்திருவாய்மொழி அநுஸந்தித்தவர்கள் பக்கல் இவளுக்குண்டான ஆதராதிசயப்ரகாசகமாகையாலும், இவளுக்குப் புருஷகாரபாவத்திலே நோக்காகக்கடவது.

இவளுக்கு, உபாயபாவத்தில் அந்வயமுண்டாகில், ஸாதநபூதமான கர்மஜ்ஞாநாதிகளுக்கு "பலமத:" "ஸ ப்ரீதோலம் பலாய" என்று, ஆராதகப்ரீதனை ஈச்வரமுகத்தாலே இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரரூபமான பலஸித்தி இவளாலேயாதல், அங்ஙனன்றியிலே பலோபபாதகஹேதுவான ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கு உத்பாதகையாதலாகவேண்டும். தான் பலப்ரஸாதகையாகில், "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" "பராஸ்ய சக்திர் விவிதைவ ச்ரூயதே ஸ்வாபாவிகீ ஜ்ஞாநபலக்ரியா ச" "தேஜோபலைச்வர்யமஹாவபோதஸுவீர்யசக்த்யாதிகுணைகராசி:" என்று ச்ருதிஸ்ம்ருதிகளில் ஈச்வரனுக்குச் சொல்லுகிற ஜ்ஞாநசக்த்யாதிகுண விசேஷங்களின்றியிலே ஒழியவேணும். உண்டாகில் இவளையொழியவே ஈச்வரன்றானே கார்யம் செய்ய க்ஷமனே. அக்குணங்களை உத்பாதிக்கிறாளாகில் குணங்களுக்கு ஸ்வாபாவிகத்வமின்றியிலே ஒழியும்.

ஸௌசீல்யாதிகளோபாதி திரோஹிதமானவற்றை ப்ரகாசிப்பிக்கிறாளென்னில்; ஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாராதிகளிலே இடைவிடாமல் விநியோகங்கொண்டு போருகிற ஜ்ஞாநசக்த்யாதிகளுக்கு, ஸௌசீல்யாதிதிரோதாயகமான ஸ்வாதந்த்ர்யத்தோபாதி ஒரு திரோதாநமில்லையே. உண்டாகில் ஸ்ருஷ்ட்யாதிகள் நடவாதொழியவேணும். ஸர்வதா அவ்விதையாமாகில் ஸ்வவிரோதிநிவ்ருத்தியில் "தத் தஸ்ய ஸத்ருசம் பவேத்" என்றிருக்கக் கூடாதே. குணவிசேஷங்களை அமைகையன்றோ, "ஆசம்ஸேயம் ஹரிச்ரேஷ்ட்ட க்ஷிப்ரம் மாம் ப்ராப்ஸ்யதே பதி:, அந்தராத்மா ஹி மே சுத்தஸ் தஸ்மிம்ஸ்ச பஹவோ குணா:" என்று தன் பக்கல் அநந்யோபாயத்வமும் அவன் பக்கல் குணவிசேஷங்களுமே பலஸித்திக்கும் அபேக்ஷிதமாகத்தான் அறுதியிட்டு வைத்தது.

நாம் உபாயமாக யாதொரு வஸ்துவை ஸ்வீகரிக்கிறோம்; அவ்வஸ்துவுக்கு இவள் ஸ்வரூபம் நிரூபகமாகையாலே, ப்ரணவத்தில் ப்ரதமபதத்திற்போலே "யத்யபி ஸச்சித்த:" என்கிற குணஸித்திந்யாயத்தாலே, அவர்ஜநீயமாய் அந்வயியாதோ? என்னில்: ஸ்வரூப நிரூபகத்வேந அவர்ஜநீயபந்தமுண்டேயாகிலும், உபாயதசையில் கண்டுகொள்வதொரு ப்ரயோஜநமில்லாமையாலே, ஸ்வரூபநிரூபகங்களான ஜ்ஞாநாநந்தங்களோபாதியும் ஸ்வரூபாச்ரயமான குணாந்தரங்களோபாதியும் குமிழிருந்து போமத்தனை.

இவற்றுக்கு ப்ரயோஜநமின்றிக்கே ஒழிகைக்கு ஹேது அவனுடைய நைரபேக்ஷ்யமாகில், சில குணவிசேஷங்கள் உபாயதயா அந்வயிக்கிறபடி என்னென்னில்: அவை கார்யோபயோகியாகையாலும், குணத்வேந அப்ருதக்ஸித்திப்ரவ்ருத்திகமாகையாலும், குணிகுணத்வாரா கார்யம் செய்கை நைரபேக்ஷ்யத்துக்குக் குறையில்லாமையாலும், அவற்றுக்குத் தட்டில்லை. இவள் கார்யாநுபயுக்தையாகையாலும், த்ரவ்யத்வேந ப்ருதக்ஸித்திப்ரவ்ருத்தி யோக்யதையுண்டாகையாலும், அத்தாலே உபாயநைரபேக்ஷ்யத்துக்குக் கொத்தையாயறுகை

யானும், உபாயபாவத்தில் அந்வயமில்லை. ஆகையாலே, சேஷித்வதசையிலும் ப்ராப்யத்வதசையிலும் ஒரு மிதுனமேயாகவேண்டினவோபாதி, உபாயதசையிலே ஸ்வேதரஸகலஸஹாயாஸஹமாயிருக்கையாலே, இவளுக்கு உபாயபாவத்தில் அந்வயமின்றியிலே புருஷகாரபாவத்திலேயாகக்கடவது.

இச்சேதநனோட்டை ஸம்பந்தம், ஈச்வரனுக்கும் பிராட்டிக்கும் ஒத்திருக்க, அவன் புருஷகாரத்வாரா ஸமாச்ரயணீயனாகைக்கும், இவள் புருஷகாரபூதையாகைக்கும் ஹேது என்னென்னில்: அவன் புருஷோத்தமனாய், பும்ஸ்த்வப்ரயுக்தமாய் வரும் காடின்யம் நடையாடுகையாலும், "தேவதேவோ ஹரி: பிதா" என்கிறபடியே பித்ருத்வப்ரயுக்தமாய் வரும் ஹிதபரத்வத்தாலும், அதுக்கு மேலே ஸ்வேதரஸகலபதார்த்தஸார்த்தநிருபாதிகநிர்வாஹகனாகையாலே "தஹ; பச" என்னும்படியான க்ரௌர்யத்தாலும், அவனை ஆச்ரயிக்கும்போது புருஷகாரத்வாரா ஆச்ரயிக்கவேண்டும். இவள் நாரீணாமுத்தமையாகையாலே, ஸ்த்ரீத்வப்ரயுக்தமாய் வரும் மார்தவத்தாலும், "த்வம் மாதா ஸர்வலோகாநாம்" என்கிறபடியே மாத்ருத்வப்ரயுக்தமான வாத்ஸல்யாதிசயத்தாலும், தத்தத்கர்மாநுகுணநிர்வஹணமில்லாமையால் வரும் மாதுர்யத்தாலும், அவனிற்காட்டில் இவளுக்கு நெடுவாசியுண்டாகையால் இவள் புருஷகாரபூதையாகக்கடவள்.

ஆக, ஸ்ரீமத்பதார்த்தத்தாலே ஆச்ரயணைகாந்தமான விலக்ஷணபுருஷகாரயோகம் சொல்லிற்றாயிற்று. அனந்தரம், நாராயணபதம், இச்சேதநனுடைய பூர்வாபராததர்சனத்தாலே கடல் கொதித்தாப்போலே, ஸ்வாபாவிகமான ஸௌசீல்யாதிகள் தலைசாயும்படி, அத்யுந்நதமான ஸ்வாதந்த்ர்யத்தை ஆற்றி, புருஷகாரபூதையான பிராட்டி உத்பவித்த வாத்ஸல்யாதிகுணவிசேஷங்களைச் சொல்லுகிறது. ஸ்வாதந்த்ர்யாபிபூதமான குணோதயமிறே, புருஷகாரகார்யமாயறுவது.

இந்த குணோதயத்துக்குப் புருஷகாராபேக்ஷையுண்டாகில், உபாயம் ஸாத்யமுமாய் ஸாபேக்ஷமுமாம்; அநுத்பூதமான குணங்கள் உத்பூதங்களாகிறதாகையாலே, உபாயத்துக்கு ஸாத்யத்வமுண்டாம்; உபாயஸ்வரூபோத்பத்திக்கு ஸஹகாரிஸாபேக்ஷத்வமுண்டாகையாலே, பக்தியோபாதி அங்கஸாபேக்ஷத்வமுமாம்; ஸ்வரூபகதமாய் திரோஹிதமாய்க் கிடந்தத்தை ப்ரகாசிப்பிக்குங்காட்டில் புருஷகாரத்துக்கு அங்கஸாதநத்வம் உண்டாமோ? என்ன ஒண்ணாதபடி, ஆத்மதர்மமான பக்திவிசேஷத்துக்கு ப்ரகாசகமான கர்மயோகாதிகளை அங்கஸாதநமாகச் சொல்லாநின்றது; அதுக்கு மேலே, ஆத்மதர்மமாய் அப்ரகாசமான அபஹதபாப்மத்வாதிகுணங்களை ப்ரகாசிப்பிக்கிற ஈச்வரனுக்கு ப்ரதானஸாதநத்வவ்யவஹாரம் உண்டாகாநின்றது. ஆகையாலே, உபாயாந்தரவ்யாவ்ருத்திரூபமான ஸித்தத்வநைரபேக்ஷ்யங்கள் இரண்டும் குலையுமே என்னில்: உபாயமாவது:— இஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரகரமாய் இருப்பதொன்றாய், அப்படிப்பட்ட உபாயமாவது, ஜ்ஞாநசக்த்யாதிகுணவிசிஷ்டனான ஈச்வரனாகையாலே வாத்ஸல்யாதிகுணங்களுக்கு உபாயத்வமில்லை; உள்ளது ஆச்ரயணைகாந்ததையே. ஆகையாலே உபாயபூதமான ஜ்ஞாநசக்த்யாதிகளுடைய உத்பத்த்யாதிகளுக்குப் புருஷகாராபேக்ஷை இல்லாமையாலே, உபாயாந்தரவ்யாவ்ருத்திரூபமான ஸித்தத்வத்துக்கும் நிரபேக்ஷத்வத்துக்கும் ஒரு குறையில்லை. ஆகையிறே, "மாம்" என்கிற ஸ்வீகாரவிஷயத்திலே

ஸ்வீகாரோபயோகியான ஸௌசீல்யாதிகளை அநுஸந்தித்து, "அஹம்" என்கிற பாபவிமோசகன் பக்கலிலே ஜ்ஞாநசக்த்யாதிகளை அநுஸந்தித்தது.

வாத்ஸல்யமாவது:— "வத்ஸம் லாலயதி" என்கிற வ்யுத்பத்தியாலே, அன்றீன்ற கன்றின் பக்கல் தாய் பண்ணும் வ்யாமோஹம். அதாவது:— சுவடுபட்ட புல்லையும் காற்கடையில் கொள்ளும் தசையிலும், தன் கடையிநின்றும் புறப்பட்ட கன்றினுடைய அழும்பு நாற்றத்தையே தனக்கு போக்யமாக ஸ்வீகரித்துத் தன்னுடைய க்ஷீரத்தாலே அத்தை தரிப்பிக்குமாப்போலே, "தோஷோ யத்யபி தஸ்ய ஸ்யாத்" என்கிறபடியே ஆச்ரிதகதமான தோஷங்களைத் தன் பேறாக மேல்விழுந்து போக்கித் தன் குணங்களாலே அவர்களை தரிப்பிக்கை. ஆத்மகுணாநுஸந்தானமாகையாலே, ஆச்ரயணாநந்தரம் வரும் பாபவிமோசன வ்யாபாரத்தோடு விரோதம் பிறவாது.

ஸ்வாமித்வமாவது:— இந்த வாத்ஸல்யத்துக்கு ஊற்றாய், "ஈச்வரப்ராப்தி ஆத்மாவுக்கன்று; ஆத்மப்ராப்தி ஈச்வரனுக்கு" என்னும்படி இச்சேதநவஸ்துவை உடையனாகை. உடையானிறே உடைமையைப் பெறுகையிலே யத்னம் பண்ணுவான்.

வத்ஸலனுமாய் வருத்தவனுமாயிருந்தாலும், "தமஸ: பரஸ்தாத்" "ரஜஸ: பராகே" என்கிற தேசவிசேஷத்திலே, "அவாக்யநாதர:" என்கிறபடியே, தன்னுடைய விச்ருங்கலிதமான ஐச்வர்யமடையத் தோற்றும்படி இருக்குமாகில், இத்தேசத்திலே அதிக்ஷுத்ரனை இச்சேதநனாலே ஆச்ரயிக்க ஒண்ணாதே? என்னவேண்டாதபடி, "மஹதோ மந்தைஸ்ஸஹ நீரந்த்ரேண ஸம்ச்லேஷஸ்வபாவ: சீலம்" என்று பெரியனான தான் தன்னைத் தாழவிட்டு, "ஹே! க்ருஷ்ண! ஹே! யாதவ! ஹே! ஸகே!" என்னலாம்படி சிறியாரோடே ஒரு நீராகக் கலந்து பரிமாறுகையும், பரிமாறாநின்றால், "ஆத்மாநம் மாநுஷம் மந்யே ராமம் தசரதாத்மஜம்" என்கிறபடியே, தன் வைபவம் தன் திருவுள்ளத்திற்படாதபடி பரிமாறுகையும் ஸௌசீல்யமாவது.

இனி, ஒரு தேசகாலவிப்ரகர்ஷாதிகளாலே நினைத்தபோது ஆச்ரயிக்கை அசக்யமாயிருக்கையன்றியிலே, எப்போதும் எல்லாராலும் ஆச்ரயிக்கலாம்படி, அர்ச்சாவதார ஸுலபனாகை—ஸௌலப்யமாவது. பரமபதம், க்ஷீராப்தி தொடக்கமானவை, தேசவிப்ரகர்ஷத்தாலே ஆச்ரயிக்கவொண்ணாது. விபவாதிகள் இதாநீந்தநர்க்கு காலவிப்ரகர்ஷத்தாலே ஆச்ரயிக்கவொண்ணாது. அந்தர்யாமித்வாதிகள் அசக்ஷுர்விஷயமாகையாலே ஆச்ரயிக்கவொண்ணாது. இனி, இந்த காலவிப்ரகர்ஷத்தாலே வரும் குறையுமின்றியிலே, தேசவிப்ரகர்ஷத்தாலே வரும் குறையுமின்றியிலே, அசக்ஷுர்விஷயத்வத்தால் வரும் குறையுமின்றியிலே, "பின்னானார் வணங்கும் சோதித் திருமூழிக்களம்" என்கிறபடியே ஸர்வஸமாச்ரயணீயமாயறுவது, உகந்தருளின நிலமேயாகையாலே, ஸர்வஸௌலப்யம் பூர்ணமாயிருப்பது அர்ச்சாவதாரத்துக்கே.

தன் தோஷங்கண்டு இறாயாமைக்கு, வாத்ஸல்யத்தை அநுஸந்திக்கவேணும். அவன் அப்ராப்தனென்று இறாயாமைக்கு, ஸ்வாமித்வத்தை அநுஸந்திக்கவேணும். மேன்மை கண்டு இறாயாமைக்கு ஸௌசீல்யத்தை அநுஸந்திக்கவேணும். அதீந்த்ரியனென்று இறாயாமைக்கு

ஸௌலப்யத்தை அநுஸந்திக்கவேணும். தன்னுடைய தோஷமாதல்; அவனுடைய அப்ராப்தியாதல்; அவன் மேன்மையாதல்; அவனநீந்த்ரியத்வமாதல்; இவை, நெஞ்சிலே நடையாடில், ஆச்ரயிக்க யோக்யதையில்லாமையாலே, அவற்றுக்கெதிர்த்தட்டாய், ஆச்ரயணைகாந்தமாய், புருஷகாரபூதையான பிராட்டியாலே உத்பவிக்கப்பட்டு, பின்னை அவள்தானே அழிக்க நினைக்கிலும், "அப்யஹம் ஜீவிதம் ஜஹ்யாம் த்வாம் வா ஸீதே ஸலக்ஷ்மணாம்" "த்வயி கிஞ்சித் ஸமாபந்நே கிம் கார்யம் ஸீதயா மம" "தாமரையாளாகிலும் சிதகுரைக்குமேல் என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படி பண்ணக்கடவதாய், ப்ரதமாசார்யரான நம்மாழ்வாராலே ஆச்ரயணைகாந்தமாக "நிகரில் புகழாய்! உலகம் மூன்றுடையாய்! என்னையாள்வானே!—திருவேங்கடத்தானே!" என்று வாத்ஸல்யாதிக்ரமத்திலே அநுஸந்திக்கப் பட்டிருக்கிற நாலு குணங்களையும் சொல்லிற்றாயிற்று.

ஈச்வரன் ஆச்ரயணீயனுமிடத்தில், ஆச்ரயணஸௌகர்யமுண்டாமளவு போராதே, ஸம்ஸாரபயபீதனுய், பகவத்ப்ராப்திருசி வடிம்பிடும்படியான இவ்வதிகாரிக்கு ஸம்ஸார ஸம்பந்தத்தை அறுக்கைக்கும், பகவதநுபவஜநிதகைங்கர்யத்தைக் கொடுக்கைக்கும் ஏகாந்தமான ஸ்வபாவவிசேஷங்கள் வேணும். ஆகையால், உத்தரார்த்தத்தில் சொல்லுகிற விரோதிநிவ்ருத்திபூர்வகமான ப்ராப்யஸித்திக்கு ஏகாந்தமாய், அஹம் சப்தத்திலே உக்தமான ஜ்ஞாநசக்த்யாதிகுணசதுஷ்கமும், அவற்றுக்குப் பெருநிலைநிற்கும் இரக்கமும் இப்பதத்திலே அநுஸந்தேயம்.

ஆச்ரிதருடைய ஹிதாஹிதங்களறியும் போதைக்கு ஸர்வஜ்ஞனுகவேணும். அறிந்தபடியே கார்யம் செய்கைக்கு ஸர்வசக்தி ஆகவேணும். ஸர்வசக்தனுனாலும் இவன் பக்கலொன்றும் நச்சாதொழிகைக்கு அவாப்தஸமஸ்தகாமனுகவேணும். இத்தனையும் உண்டானாலும் தன் பேறுகக் கார்யம் செய்யும்போதைக்கு ஸர்வஸ்வாமியாகவேணும். அநாதிகாலம் கர்மாநுகுணமாக அறுத்தறுத்துத்தீற்றுகைக்குக் கருவியாய்ப் போந்த இவை, ரக்ஷணத்துக்கு உறுப்பாகைக்கு இரக்கம் வேணும். ஆகையாலே ஸௌசீல்யாதிகுணசதுஷ்டயத்தோடு ஜ்ஞாநசக்த்யாதிகுணபஞ்சகத்தோடு வாசியற இப்பதத்திலே அநுஸந்தேயம்.

நது, பகவத்ஸ்வரூபகுணவிபூத்யாதிகளுக்கு அவ்யவஹிதவாசகமாயிருக்க, இந்த நாராயணசப்தம் ஸ்வரூபாதிகளை ஒழிய குணஜாதத்தில் குணைகதேசத்துக்கு வாசகமாகிறதென்னுமிடத்துக்கு நிர்ணயகப்ரமாணம் ஏதென்னில்: இவற்றுக்கெல்லாத்துக்கும் வாசகமேயாகிலும், "ப்ரபத்யே" என்று, ப்ரகரணம் ஆச்ரயணமாகையாலே, அது, கோபலீவர்தந்யாயத்தின்படியே ஆச்ரயணைகாந்தமான குணவிசேஷங்களையே ஒதுக்கித் தரக்கடவது. ஒரு மாணிக்கப்பேழையிலே நாட்டிலுள்ள ஆபரணங்களடையச் சமைத்திட்டு வைத்தால், தந்தாமுக்கு அவ்வோகாலங்களில் அபிமதமான ஆபரணங்களை எடுத்துப் பூண்பாரோபாதி, இதுவும் ஸர்வார்த்தங்களுக்கும் வாசகமாயிருந்ததேயாகிலும், அவ்வோகாலங்களுக்கு அபேக்ஷிதமான அர்த்தவிசேஷங்களை எடுத்து விநியோகம் கொள்ளுமதொழிய, எல்லாவற்றையும் எடுக்கவேணுமென்கிற நியமமில்லை. உண்டாகில், ஈச்வரனுக்கு உபாயோபேயத்வரூபமான விபாகமின்றியிலே ஒழியும். ஸமஸ்தகல்யாணகுணங்களுக்கும் ஆச்ரயமாயிருக்கச் செய்தேயும், உபாயத்வைகாந்தமான ஸ்வபாவவிசேஷங்களை அவன் பக்கலிலே அநுஸந்திக்கும

தொழிய, ஏகாச்ரயஸ்தமென்று போகைகாந்தமான குணங்களை அநுஸந்தியாதே. வாச்யபூதனான அவன் பக்கல் அப்படியேயானால், வாசகபூதமான இந்த சப்தமும் அப்படியேயாமித்தனை. கோபலீவர்தந்யாயமாவது:— ப்ரயோஜகவ்ருத்தன் ப்ரயோஜ்ய வ்ருத்தனைக் குறித்து 'காவ ஆநீயந்தாம்' என்று, 'பசுக்களைக் கொண்டுவா' என்றால், அந்த கோத்வஜாதி எருதின் பக்கலிலும் கிடக்கையாலே, எருதுகளையும் பசுக்களையும் சேரப் பிடித்துக்கொண்டு வரப்புகும். அப்போது 'பலீவர்த்தாஸ் திஷ்டந்து' என்று, 'எருதுகள் நிற்க' என்கிற விசேஷவிதானத்தாலே அவ்வெருதுகளை யொழியப் பசுக்களைக் கொண்டு வருகை. அப்படியே இதுவும் எல்லாவற்றுக்கும் வாசகமேயாகிலும், இந்த சப்தம் இப்போது ப்ரகரணபலத்தாலே இக்குணவிசேஷங்களுக்கே வாசகமாகக்கடவது.

ஆக, நாராயணபதத்தில் நாரசப்தம், "நாரசப்தேந ஜீவாநாம் ஸமூஹ: ப்ரோச்யதே புதை:" என்கிறபடியே ப்ராப்தாக்களான ப்ரத்யகாத்மாக்களைச் சொல்லி, அயநசப்தம், "இண்-கதௌ" என்கிற தாதுவிலே "ஸம்ஸாரார்ணவமக்நாநாம் விஷயாக்ராந்தசேதஸாம், விஷ்ணுபோதம் விநா நாந்யத் கிஞ்சிதஸ்தி பராயணம்" என்கிறபடியே உபாயவாசகமாய், ஆக நாராயணபதம், ஸர்வேச்வரனையே ஸர்வாத்மாக்களுக்கும் ஸம்ஸாரநிஸ்தரணோபாயவாசகமாய் — ஸம்ஸாரநிஸ்தாரணதிகளுக்கு ஸாதநபூதனென்றதாய், அந்த ஸாதநஸமாச்ரயணத்துக்காக ஸௌசீல்யாதிகுணசதுஷ்கங்களை அநுஸந்தித்ததாய், கார்யகரமாகைக்கு ஜ்ஞாநசக்த்யாதிகுணபஞ்சகங்களை அநுஸந்தித்ததாய்நின்றது.

அனந்தரம், குணவிசேஷவிசிஷ்டமான ஆச்ரயணீயவஸ்து "சுத்தேந மநஸா க்ராஹ்ய:" "ஸ்வப்நதீகம்யம்" "ஸஹைவ ஸந்தம் ந விஜாநந்தி தேவா:" "யமாத்மா ந வேத" "பொறியுணர்வவையிலன்" என்கிறபடியே ஐந்த்ரியகஜ்ஞாநகம்யம் அல்லாமையாலும், கண்டாலல்லது ஆச்ரயிக்கவொண்ணாமையாலும், ஆச்ரயணஸௌகர்யத்துக்காக, அவ்வஸ்துவை ப்ரகாசிப்பிக்கக் கடவதாய், கீழ்ச்சொன்ன ஸௌலப்யமென்கிற ஆத்மகுணத்தினுடைய பலமான ப்ரகாசத்தையுடைத்தான விலக்ஷணவிக்ரஹத்தைச் சொல்லுகிறது: "சரணௌ" என்கிற பதம்.

ஸ்வரூபத்தோடு, ஸ்வரூபாச்ரயமான குணங்களோடு, வாசிபற, சுத்தஸத்வமயமான அப்ராக்ருததிவ்யஸம்ஸ்தானத்திலே, பொற்குப்பியில் மாணிக்கம் போலே புறம்பொசிந்து காட்டுகையாலும், அவ்வடிவுதான் "ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய, ந சக்ஷுஷா பச்யதி கச்ச நைநம்" "ந மாம்ஸசக்ஷுரபிவீக்ஷதே தம்" "அபச்யந்த: பரம் ரூபம்" என்கிற பரரூபமன்றியிலே விபவார்ச்சாவதாரரூபமாகையாலும், ஆச்ரயணைகாந்தமாகக்கடவது.

அங்ஙனன்றியிலே, நாராயணபதத்திற்சொல்லுகிறபடியே ஈச்வரன் குணத்வாரா உபாயபூதனுமோபாதி, விக்ரஹத்வாராவும் உபாயபூதனென்று விக்ரஹத்தினுடைய ஸ்வதந்த்ரோபாயத்வம் தோற்றுகைக்காக, தனியே விக்ரஹத்தை உபாதானம் பண்ணுகிறதென்னவுமாம். "சிந்தயந்தீ ஜகத்ஸூதிம் பரப்ரஹ்மஸ்வரூபிணம், நிருச்வாஸதயா முக்திம் கதாந்யா கோபகந்யகா" "ப்ரஸாதபரமௌ நாதௌ மம கேஹமுபாகதௌ, தந்யோஹமர்ச்சயிஷ்யாமீத்யாஹ மால்யோபஜீவந:" என்கிறபடியே இடக்கையும் வலக்கையும் அறியாத இடைச்சி, போக்யமான பூவை விற்று வயிறு வளர்க்கும் மாலாகாரர், குட்கமானுரை,

"பரமாத்மநி யோ ரக்தோ விரக்தோபரமாத்மநி" "மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு" என்று தன்பக்கலிலே நிரதிசயமான ப்ராவண்யத்தைப் பிறப்பித்து, அதுவே கருவியாக இதரவிஷயவிரக்தியையும் பிறப்பித்து, தானே முடிய நடத்தக் கடவதாயிறே விக்ரஹமிருப்பது.

விக்ரஹமே உபாயபூதமாமாகில், விபவார்ச்சாவதாரரூபங்களைக் கண்டவர்களுடைய பகவத்விஷயத்தில் ப்ரவணாராகாதொழிவானென்னென்னில்: எல்லார்க்குமொக்கக் காட்சி உண்டேயாகிலும், விஷயாந்தர ஸௌந்தர்யாதிகளை ஆவிஷ்கரியாமையாலே அங்ப்ரபராாகிறார் களல்லது, விக்ரஹத்துக்கு அந்த ஸ்வபாவமில்லாமையன்று. ஆகையிறே பாஷ்யகாரர் "ஸௌந்தர்யஸௌசீல்யாதிகுணாவிஷ்காரேண அக்ரூரமாலாகாராதீந் பரமபாகவதாந் க்ருத்வா" என்றருளிச்செய்ததும்.

ஆக, உத்தமான குணங்களுக்கு ப்ரகாசகமாக விக்ரஹத்தை உபாதாநம் பண்ணுகிற தாதல்; ஸ்வதந்த்ரஸாதநமாக உபாதாநம் பண்ணுகிறதாதலாகிறது. நேரே வாசகமாயிருப்ப தொரு சப்தத்தையிட்டு விக்ரஹத்தைச் சொல்லாதே, சரணசப்தார்த்தமான திருவடிகளிலே விக்ரஹத்தை உபலக்ஷிக்கைக்கு ஹேதுவென்னென்னில்: இங்கு, உபாயதயா ஸ்வீகரிக்க இழிகிற அதிகாரி, கீழே திருமந்த்ரத்திலே ஸம்சிக்ஷிதஸ்வரூபனாகையாலே, சேஷத்வ ப்ரகாசகமான இந்த வ்யவஹாரமொழிய அறியாமையாலும், ஸ்தனந்தயத்துக்கு மாதாவினுடைய ஸர்வாவயவங்களும் உத்தேச்யமாகாநிற்கச்செய்தேயும், ஸ்தனத்திலே ஒரு விசேஷப்ராப்தியுண்டாமோபாதி, இவனுக்கும் திருவடிகளிலே ஒரு விசேஷஸம்பந்த முண்டாகையாலும், திருவடிகளைக் கொண்டு விக்ரஹத்தை உபலக்ஷிக்கிறது.

அனந்தரம் மேலில் பதத்வயமும், அதிகாரிகதமானவற்றைச்சொல்லுகிறது. இதில் சரணசப்தம்—"உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம், வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசக:" என்கிறபடியே உபாயவாச்சமாய், "ச்ரியா ஸார்த்தமாஸ்தே" "ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" "ஸதா பச்யந்தி ஸூரய:" என்று சொல்லுகிறபடியே ப்ராப்யகோடியிலும் மூதலிட்டு, கீழ்ச்சொன்ன ஸ்ரீமத்தைக்கும், நாராயணசப்தோக்தமான குணவிசேஷங்களுக்கும், அநந்தரோக்தமான திவ்யமங்களவிக்ரஹத்துக்கும் உபேயவ்யாவ்ருத்தியைப் பண்ணித்தருகிறது.

"ப்ரபத்யே" என்று, "பத்லு-கதௌ" என்கிற தாதுவிலே கத்யர்த்தமாய், "கத்யர்த்தா:—புத்யர்த்தா:" என்று, ஒரு ஜ்ஞானவிசேஷத்தைச் சொல்லுகிறது. அந்த ஜ்ஞானவிசேஷமாகிறது:— "அஹமஸ்ம்யபராதாநாமாலயோகிஞ்சநோகதி:" என்கிறபடியே ஸ்வாகிஞ்சந்யாத்யநுஸந்தானபூர்வகமாய், "ப்ரார்த்தநாமதி:" "யாச்ஞா ப்ரபத்தி:" என்கிற படியே ப்ரார்த்தனாகர்ப்பமாய், "த்வமேவோபாயபூதோ மே பவ" "ததேகோபாயதாயாச்ஞா" என்கிறபடியே, தான் உபாயசரீரத்தில் அந்வயியாதே உபாயஸ்வீகாராத்மகமாகையாலே உபேயசரீரத்திலும் அந்வயியாதே அதிகாரிக்கு விசேஷணமாய், மஹாவிச்வாஸாத்மகமான ப்ரதிபத்திவிசேஷம். "ப்ரபத்யே" என்று உத்தமனாகையாலே, "கீழ் உக்தமான விஷயத்தை உபாயதயா ஸ்வீகரிக்கிறேன்" என்று ஸ்வாநுஷ்டானமாகக் கிடக்கிறது.

அங்ஙனன்றியிலே, "கதி" என்று வியாபாரமாய், மாநஸகதியையும் வாசிககதியையும் காயிககதியையும் சொல்லிற்றாகவுமாம். மாநஸகதியாவது:–உபாயத்வேந அத்யவஸிக்கை; வாசிககதியாவது:– "ராகவம் சரணம் கத:" "அடிக்கீழமர்ந்து புகுந்தேன்" "நாராயணா! ஓ மணிவண்ணா! நாகணையாய்! வாராயென்னாரிடரை நீக்காய்" "த்வயவக்தா" என்று சொல்லுகிறபடியே, ரக்ஷித்தருளவேணுமென்று வாயாலே ப்ரார்த்திக்கை. காயிககதியாவது:– "அஞ்ஜலி: பரமா முத்ரா க்ஷிப்ரம் தேவப்ரஸாதிநீ" என்கிறபடியே, பகவத்ப்ரஸாதஹேதுபூதமான அஞ்ஜலியை ப்ரயோகிக்கை. அங்ஙனன்றியிலே, நிஷாதநாகாதிகளைப்போலே ரக்ஷகவஸ்து இருந்தவிடத்தே வருகை என்னவுமாம். இத்தைப்பற்றவிறே, "பத்தாஞ்ஜலிபுடம் தீநம் யாசந்தம் சரணாகதம்" என்று சதுர்விதமாகச் சொல்லிற்று. இந்நாலும் ஏகாச்ரயத்திலே உண்டானபோது அதிகாரிபூர்த்தி ப்ரகாசிக்கக்கடவது. இவற்றிலே அந்யதமமாத்ரமானபோது பகவத்வைபவம் ப்ரகாசிக்கக்கடவது.

இதில் "சத்ருசனை நான் அத்யவஸிக்கிறேன்" என்று ஜாதிகுணவ்ருத்தாதிகளாலே ஒருவனை விசேஷியாமையாலே, இப்ப்ரபத்யநுஷ்டானம் ஸர்வாதிகாரமென்று தோற்றுகிறது. இனி, ருசியே வேண்டுவது. இந்த ருசி ப்ரயோஜகமாகையிறே, "ராவணோ நாம துர்வ்ருத்த:" என்று தொடங்கித் தன் நிகர்ஷாதிகளடையத் தன் வாயாலே சொல்லுவது; "ராவணஸ்யாநுஜோ ப்ராதா விபீஷண இதி ச்ருத:, சதுர்ப்பிஸ்ஸஹ ரக்ஷோபிர் பவந்தம் சரணம் கத:" என்று அருகிருந்தாரிலும் அவன் குறை சொல்லி க்ஷேபிப்பது; அதுக்குமேலே "வத்யதாம்-பத்யதாம்" என்பதாகாநிற்கச் செய்தேயும் ஸ்ரீவிபீஷணப்பெருமாளை ரக்ஷித்தது; சரண்யரான பெருமாள் தாம், "யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்பது; அவனோடே சேர்ப்பிக்கும் பிராட்டி "தேந மைத்ரீ பவது தே யதி ஜீவிதுமிச்சஸி" என்று உபதேசிப்பதாகாநிற்கச்செய்தேயும், "ந நமேயம்" என்கிற ப்ரதிஜ்ஞை குலையாதொழிந்ததும். இப்பதத்திலே "அத்யவஸிக்கிறேன்" என்று அத்யவஸாயாத்மகஜ்ஞாநவிசேஷத்துக்கு ஆச்ரயமான அதிகாரிஸ்வரூபமும் அநுஸந்தேயம். அதாவது: திருமந்த்ரத்தில் பதத்ரயத்திலும் சொன்ன ஆகாரத்ரயமும்.

ஆக, இப்பதத்தாலே ஸகலஸாம்ஸாரிகதுரிதவிதூநநபூர்வகமாக, நிரஸ்தாதிசயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணமான ஸ்வாநுபவாநந்தத்தைக் கொடுக்கைக்கு அநாதிகாலம் அவஸரப்ரதீக்ஷனாய், இவனுடைய வைமுக்யவைபவத்தாலே ப்ரதிஹதசக்திகனாய், ரக்ஷிக்கைக்கு இடம் பெறாதே போந்த ஈச்வரனுக்கு "ரக்ஷ்யாபேக்ஷாம் ப்ரதீக்ஷதே" என்கிறபடியே ரக்ஷணாவகாசமாய், சைதந்யப்ரயுக்தமாய், ச்யாமத்வயுவத்வாதிகளோபாதி அதிகாரிவிசேஷணமாய், அதிகாரிநியமாபேக்ஷையில்லாமையாலும், "ஆயாஸஸ் ஸ்மரணே கோஸ்ய" என்று ஸ்மரணமாத்ரமாகையாலே அநாயாஸமாயும், "யதா ததா வாபி" என்கிறபடி ப்ராங்முகத்வாதிநியமாநபேக்ஷமாகையாலும், இதுதனக்கு "ஸக்ருதேவ ப்ரபந்நாய" என்கிறபடியே ஸக்ருத்கரணமாகையாலும், அதிகாரிவிசேஷநியமாபேக்ஷமாய், அத்யாயாஸஸாத்யமாய், ப்ராங்முகத்வாதிநியமாபேக்ஷமாய், அஸக்ருதாவ்ருத்திரூபமான கர்மஜ்ஞாநாதிகளில் வ்யாவ்ருத்தமாய், ஆகிஞ்சந்யஸஹகாரியாய், பெருமாள் கடலைச் சரணம் புக்கு, "சாபமாநய"வோடே தலைக்கட்டினாப்போலேயன்றியிலே, இழிகிறவன் நேரே அகிஞ்சனாதிகாரி

பலாவ்யபிசாரியான
யாகையாலும், எதிரி நேரே ஸர்வஸமாச்ரயணீயவிஷயமாகையாலும்,
உபாயாத்யவஸாயத்தை ஸ்வாநுஷ்டானமாக்கிற்றாய்நின்றது.

“ தேவாநாம்
இந்த உபாயமாகிறது, வேதாந்தங்களிலே ஸகலஸாதநாதிகமாகவும்,
குஹ்யம் ” என்கிறபடியே தேவரஹஸ்யமாகவும், எழுதப்படுகிறதொன்றானால், கர்மஜ்ஞாநாதி
களோபாதியாகிலும் அதிக்ருதாதிகாரமாகவேண்டாவோ வேதாந்தஸித்தமான இது?
அதிக்ருதாதிகாரமன்றியிலே ஒழியவேணும். ஆனால், அவை அதிக்ருதாதிகாரம்; இது
ஸர்வாதிகாரமென்று நிர்ணயித்துத் தருவாராரென்னில்: அவை த்ரைவர்ணிகாதிகாரமாக
வேண்டுகிறது, அக்னிவித்யாங்ககமாகையாலே; இனி, அக்நிவித்யாங்ககமான கர்மாபேக்ஷை
யுண்டாகையாலே ஜ்ஞாநாதிகளும் அதிக்ருதாதிகாரம் ஆகிறதித்தனை போக்கி, சாஸ்த்ர
ஸித்தமாகையன்று. அங்ஙனன்றாகில், சாஸ்த்ரஸித்தமான பாகயஜ்ஞநாமஸங்கீர்த்தநாதி
களில் ஸ்த்ரீசூத்ராதிகளுக்கு அந்வயமின்றியிலே ஒழியவேணும்; நிஷாதன் கபோதத்தைச்
சரணம் புகாதொழியவேணும்; காகவிபீஷணாதிகள் சக்ரவர்த்தித்திருமகனைச் சரணம்
புகாதொழியவேணும்.

சக்ரவர்த்தித்திருமகன் கடலைச் சரணம்புகுகிறவிடத்திலே, “ ததஸ் ஸாகரவேலாயாம்
தர்ப்பாநாஸ்தீர்ய ராகவ:, அஞ்ஜலிம் ப்ராங்முக: க்ருத்வா ப்ரதிசிச்யே மஹோததே: ” என்று,
ப்ராங்முகத்வாதிநியமங்களோடே சரணம் புக்காரென்றெழுதாநின்றது. ஆனால், நியமாந
பேக்ஷை இப்ப்ரபத்தி என்கிறபடி என்னென்னில்: சக்ரவர்த்தித்திருமகனை ஸ்ரீவிபீஷணாழ்வான்
சரணம் புகுகிறவிடத்தில், “ த்வாம் து திக் குலபாம்ஸநம் ” என்று ராவணன் உபேக்ஷித்த
காலமே காலமாக் கடல் கிட்டவே வாராநிற்கச்செய்தேயும், ஸ்நாநாசமநாதிகளும் பண்ணதே,
தானிருந்தபடியே சரணம் புக்கானென்றெழுதுகையாலே, நியமாபேக்ஷை உண்டென்னவு
மொண்ணாது. ஆகையால் “ ஸந்த்யாவந்தனாதிகளோபாதி, விடவுமாம்; சிகாயஜ்ஞோபவீ
தாதிகளோபாதி கிடக்கவுமாம். ” என்கிற அநியமம் அநுஷ்டானத்வயத்திலும் ப்ரகாசிக்கிறது.

அஸக்ருதா
“ ஸக்ருதேவ ப்ரபந்நாய ” என்கிறபடியே ஸக்ருத்கரணம் அமையுமாகில்,
வ்ருத்திரூபமான உபாஸனாத்மகஜ்ஞானம் போலே இந்த அத்யவஸாயாத்மகஜ்ஞானமும்,
“ ப்ரபத்யே ” என்கிற வர்த்தமாநத்தால் தைலதாராவதவிச்சிந்நமாய்ப் போரவேண்டும்படி
தோன்றாநின்றது. அப்போது “ ஸக்ருதேவ ” என்கிற ஸக்ருத்கரணத்துக்கும் இவ்வர்த்மா
னத்துக்கும் சேர்த்தியென்னென்னில்: “ ஸக்ருதேவ ” என்கிறவிடம், பகவத்விஷயீகாரத்
துக்கு ஸக்ருத்கரணம் அமையுமென்னுமிடத்தை ப்ரகாசிப்பிக்கிறது; வர்த்தமானம்,
யாவச்சரீரபாதம் காலக்ஷேபாபேக்ஷையாலும், அபிமதபலலாபத்வரையாலும், அநுவர்த்திக்கு
மிடத்தை ப்ரகாசிப்பிக்கிறது. “ யாவச்சரீரபாதம் அநுஷ்டியாநின்றாலும் பெறுகிற பலத்தின்
கனத்தைப் பார்த்தால், ‘ ஸக்ருத் ’ என்கைக்கும் போராதபடிகாண் இருப்பது! ” என்று
எம்பார் அருளிச்செய்வர். அங்ஙனன்றியிலே, “ ஸஹஸாசப்தத்துக்கு ஸக்ருதாதேசமாய்,
‘ ஸக்ருதேவ ப்ரபந்நாய ’ என்கிறது. ‘ ஸஹஸைவ ப்ரபந்நாய ’ என்கிறபடி ” என்று
ஆழ்வான் பணிக்கும். அதாகிறது: ஸம்ஸாரத்தில் பயாதிசயத்தாலும், பகவத்விஷயத்தில்
ருச்யதிசயத்தாலும், “ ச்ரத்தயா சரணம் யதி ” . “ ஆஜகாம முஹூர்த்தேந ” என்று சொல்லு
கிறபடியே ஸத்வரனாய்க் கொண்டு ஆச்ரயிக்கை.

ஆக, பூர்வார்த்தத்தாலே அத்யவஸாயாத்மகஜ்ஞாநவிசேஷத்தையும், அதுக்கு உபேயாத்யவஸாயத்திற்காட்டில் வ்யாவ்ருத்தியையும், அந்த உபாயத்துக்கு ஸாத்யோபாய வ்யாவ்ருத்தியையும், அந்த ஸித்தோபாயத்தில் இழிகைக்கு விரோதியான பூர்வாபராத பயத்துக்கு நிவர்த்தகமான புருஷகாரவிசேஷத்தையும் சொல்லிற்றாயிற்று.

அனந்தரம், இதில் ஸ்வீக்ருதமான ஸித்தோபாயம் “தாவதார்த்திஸ் ததா வாஞ்சா தாவந் மோஹஸ் ததாஸுகம், யாவந் ந யாதி சரணம் த்வாமசேஷாகநாசநம்” என்று, ஆர்த்தாதிகளான சதுர்விதாதிகாரிகளுக்கும் ஸாதாரணமாகையாலே, இவர்களில் கீழ் உபாயஸ்வீகரணம் பண்ணி நிற்கிறவன் எந்த அதிகாரி என்கிற அபேக்ஷையிலே, “முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே” “ப்ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி” என்கிறபடியே பலவிசேஷ ப்ரார்த்தநாரூபாத்யவஸாயத்தாலே இவனை விசேஷிக்கிறது: உத்தரார்த்தம். ஆக, பூர்வார்த்தத்தாலே உபாயப்ரார்த்தனம் பண்ணிற்றாய், உத்தரார்த்தத்தாலே தத்பலமான உபேயத்தை ப்ரார்த்திக்கிறதென்றதாயிற்று.

நநு, உபாயப்ரார்த்தனமாவது:— ஸ்வேஷ்டாநிஷ்டப்ராப்திபரிஹாரங்களுக்கு நீயே ஸாதனமாகவேணும் என்கிற அபேக்ஷையிறே. ஸ்வர்க்ககாமனாய் ஜ்யோதிஷ்டோமத்திலே இழியுமோபாதி, “நமக்கு ப்ராப்யமான இஷ்டம் இன்னது; பரிஹார்யமான அநிஷ்டமின்னது.” என்று பிறந்த நிர்ணயத்துக்கு அனந்தரமிறே ததநுகுணமான உபாயஸ்வீகாரத்தில் இழிவது; இனி, ப்ராப்யாபேக்ஷை பண்ணுகிறது: தர்மார்த்தாதிகளான ப்ராப்யாந்தரங்களிற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லுகைக்காகவோ? அங்ஙனன்றியிலே உபாயதயா ஸ்வீக்ருதனானவனுக்கு ப்ராப்யவிசேஷஜ்ஞாநம் பிறக்கைக்காகவோ? ப்ராப்யவிசேஷத்தை ப்ரார்த்தித்தாலன்றி அத்தைத்தாரானென்றோ? என்னில்: உபாயஸ்வீகாரபூர்வபாவியான முமுக்ஷுத்வத்தாலே தர்மகாமாதிகளிற்காட்டில் வ்யாவ்ருத்தி ஸித்திக்கையாலும், ஸ்வீக்ருதோபாயம் ஸர்வஜ்ஞமாகையாலும், ஸ்வீக்ருதனுமாய் ஸர்வஜ்ஞனுமாய்வைத்து, ப்ராப்யாபேக்ஷாப்ரதீக்ஷனாயிருக்கைக்கு ஒரு ப்ரயோஜனமில்லாமையாலும், உபாயஸ்வீகார மொழிய ப்ராப்யாபேக்ஷைபண்ணவேண்டா; இனி, ப்ராப்யத்தைத் தரவேணுமென்ற பேக்ஷிக்கை ப்ராப்யாபேக்ஷையாகில், உபாயஸ்வீகாரரூபமான பூர்வார்த்தத்துக்கு ப்ரயோஜனமில்லை. ஆகையாலே பூர்வார்த்தாநுஸந்தானம் பண்ணுதல், உத்தரார்த்தாநுஸந்தானம் பண்ணுதலொழிய உபயாநுஸந்தானம் பண்ணுகை புநருக்தமாய்த் தலைக்கட்டுமேயென்னில்:

பூர்வார்த்தாநுஸந்தானமாத்ரத்தாலே உபேயலாபம் ஆர்த்தமாய் வருமேயாகிலும், “அத்யாத்மயோகாதிகமேந தேவம் மத்வா தீரோ ஹர்ஷசோகௌ ஜஹாதி” “தரதி சோகமாத்மவித்” என்று, முமுக்ஷுவுக்கு பலம் சொல்லுகிறவிடத்தில் சோகநிவ்ருத்திமாத்ரத்தைப் புருஷார்த்தமாக்குவது; “தத்ஸுக்ருததுஷ்க்ருதே தூநுதே” என்று புண்யபாபரூபகர்ம விமோசனமாத்ரத்தைப் புருஷார்த்தமாக்குவது; “விஜ்ஞாநஸாரதிர் யஸ்து மந:ப்ரக்ரஹவாந் நர:, ஸோத்வந: பாரமாப்நோதி தத் விஷ்ணோ: பரமம் பதம்.” என்று ஒரு தேசவிசேஷ ப்ராப்தியைப் புருஷார்த்தமாக்குவது; “ஏஷ ஸம்ப்ரஸாதோஸ்மாச்சரீராத் ஸமுத்தாய பரம் ஜ்யோதிருபஸம்பத்ய ஸ்வேந ரூபேணாபிநிஷ்பத்யதே” என்கிறபடியே ஸ்வஸ்வரூபப்ராப்தியைப் புருஷார்த்தமாக்குவது; “நிரஞ்ஜந: பரமம் ஸாம்யமுபைதி” என்று, பரமஸாம்யாபத்தியைப்

புருஷார்த்தமாக்குவது; "ஏதமாநந்தமயமாத்மாநமுபஸங்க்ராமதி" என்று பகவத்ஸாமீப்யத்தைப் புருஷார்த்தமாக்குவது; "ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணு விபச்சிதா" என்று, பகவத்குணுநுபவத்தைப் புருஷார்த்தமாக்குவது; "விஜ்ஞாநாதாநந்தோ ப்ரஹ்மயோநி:" "ரஸம் ஹ்யேவாயம் லப்த்வாநந்தீ பவதி" என்று, பகவதநுபவஜநிதமான பரமாநந்தத்தைப் புருஷார்த்தமாக்குவது; "யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி" என்று, பகவதநுவ்ருத்திரூபமான கைங்கர்யத்தைப் புருஷார்த்தமாக்குவதாய், ஆக இப்படி சேதந நிவ்ருத்யாதிகளைப் புருஷார்த்தமாகச் சொல்லுகிற தத்தத்வாக்யவிசேஷங்களில் சரம புருஷார்த்தநிஷ்கர்ஷம் பிறவாமையாலே, அந்த புருஷார்த்தவிசேஷத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக உபாயஸ்வரூபவிசேஷப்ரத்யாயகமாக பூர்வார்த்தம் உதிக்கையாலும், உத்தரார்த்தம் உதிக்கையாலும் பௌநருக்த்யமில்லை.

உபேயதயா வரணமும் உபாயதயா வரணமுமிறே இரண்டுக்கும் க்ருத்யம். உபேயத்வேந வரித்தபோது உபாயாபேக்ஷையுண்டு; உபாயத்வேந வரித்தபோது உபேயாபேக்ஷையுண்டு; ஆகையால் உபயமும் அபேக்ஷிதமாகக் கடவது. உபேயத்வவரணமாவது:— ஈச்வரன் திருவடிகளிலே கைங்கர்யத்தையே உபேயமாக அத்யவஸிக்கை. உபாயத்வவரணமாவது:— அவன் திருவடிகளை உபாயமாக அத்யவஸிக்கை. அத்யவஸாயத்வயமும் இவ்வதிகாரிக்கு அபேக்ஷிதம். அநந்யஸாதநத்வஸித்திக்கு உபாயாத்யவஸாயம் வேணும்; அநந்யபோகத்வஸித்திக்கு உபேயாத்யவஸாயம் வேணும். உபாயவிசேஷாத்யவஸாயம் ப்ரயோஜநாந்தரபாணுக்கும் உண்டாகையாலே, தத்வ்யாவ்ருத்திஸித்திக்கு உபேயாத்யவஸாயம் வேணும்; ஸாதகனுக்கும் உபேயாத்யவஸாயம் உண்டாகையாலே தத்வ்யாவ்ருத்திஸித்திக்கு உபாயாத்யவஸாயம் வேணும். ஸாதகன்தானே "இஷ்டம் மநீஷாண, அமும் மநீஷாண, ஸர்வம் மநீஷாண" என்று உபேயவிசேஷத்தை அபேக்ஷியாநின்றானே; "தைத்யஸைந்யபராஜிதா:, சரணம் த்வாமநுப்ராப்தா:" என்று ப்ரயோஜநாந்தரபாணுக்கு உபாயாத்யவஸாயமுண்டே. தத்வ்யாவ்ருத்திஸித்திக்கும் "அந்தரிக்ஷகதச் ஸ்ரீமாந்" "ஸ து நாகவரச் ஸ்ரீமாந்" என்கிறபடியே உபாயோபேயாத்யவஸாயங்களாகிற மஹைச்வர்யம் இவ்வதிகாரிக்கு அபேக்ஷிதமாகையாலே, அவையிரண்டையும் இரண்டு வாக்யத்தாலும் சொல்லுகிறது. அத்தைப்பற்றவிறே "முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே" என்று ச்ருதமாயிற்றதும்.

கீழ் "ப்ரபத்யே" என்று ஸ்வீக்ருதமான உபாயத்தினுடைய பலமான கைங்கர்யத்தை அபேக்ஷிக்கக்கடவதாகக் கொண்டு, அதுக்கு ப்ரதிஸம்பந்திவிசேஷாபேக்ஷை உண்டாகையாலே, அந்த ப்ரதிஸம்பந்தியினுடைய பூர்த்திபூரணபூர்வகமாக அநுஸந்திக்கிறது.

அதில் "ஸ்ரீமதே" என்கிறபதம், கைங்கர்யப்ரதிஸம்பந்தியைப் பூரிக்கிறது. சேஷத்வப்ரதிஸம்பந்தி ஒரு மிதுனமானவோபாதி, கைங்கர்யப்ரதிஸம்பந்தியும் ஒரு மிதுனமாயிறே இருப்பது. ஆகையாலே "பெரியபிராட்டியாரோடே நித்யஸம்யுக்தனானவனுக்கு" என்கிறது. "வைகுண்டே து பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே விஷ்ணுரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதைஸ் ஸஹ" என்கிறபடியே ஒரு விபூதியாக மிதுநபோகபரராயிறே இருப்பது. ஆகையிறே அத்திரளினின்றும் பிரிகதிர்ப்பட்டுத் துடர்ந்தடிமை

செய்ய வந்தவர்களும், "பவாம்ஸ்து ஸஹ வைதேஹ்யா கிரிஸாநுஷு ரம்ஸ்யதே, அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றதும்; அந்த இளையபெருமாளோபாதி அடிமை செய்ய ஆசையுடையாரும், "கோலத் திருமாமகளோடு கூடின உன்னைக் கூடவேணும்" என்றதும்; "யுவா குமாரஃ" "ஏஷ வாமநி:, ஏஷ பாமநி:" என்றுப்போலே ஓதுகிற, "பும்ஸாம் த்ருஷ்டி-சித்தாபஹாரி"யான அவனுடைய வடிவழகையும், சீலாதிகுணவிசேஷங்களையும், தலைநீர்ப்பாட்டிலே அநுபவிப்பது; அநுபவித்தவள் உந்மத்தையாவது; அவள் தன்னுடைய ஓரோர அவயவங்களிலே ஆழங்காற்பட்டு, "அல்லி மலர் மகள் போகமயக்குக்கு" ஆளாய், அவன் தானும் உந்மத்தனவதாய் ப்ராந்தமிதுனமாய், துவண்டு செல்லும்போது, சிசிரோபசாரம் பண்ணுவது; வ்யஜநாதிகளைப் பரிமாறுவது; படிக்கமிடுவதாய்ப்போலே தானும் மிதுனத்துக்குச் செய்யும் கிஞ்சித்காரமாயறுவது; ஆகையாலே ஒரு மிதுனமே ப்ராப்யம்.

இவற்றிலே, அந்யதமத்தை ப்ராப்யமாக நினைக்கையாவது: விநாசத்தோடே தலைக்கட்டுகை. பிரிகையிறே, தங்கை மூக்கறுப்புண்டதும், தமையன் தலையறுப்புண்டதும். பரிமளம் பூவை ச்லாக்யமாக்குமாப்போலேயும், ப்ரபை மாணிக்கத்தை ச்லாக்யமாக்குமாப்போலேயும், இவளாலேயிறே அவனுக்குப் போக்யத்வம். "ச்ரத்தயா தேவோ தேவத்வமச்நுதே" என்னக்கடவதிறே. சேஷிக்கு அதிசயத்தைப் பண்ணுகையிறே சேஷவஸ்துவுக்கு க்ருத்யம். இவளாலே அவனுக்கு நிறமுண்டாகையாவது: "விஷ்ணுபத்நீ" "விஷ்ணோச்ச்ரீ:" என்கிறபடியே இத்தலையில் சேஷத்வம் ப்ரகாசிக்கை. இந்த ஸ்ரீசப்தத்தாலே கைங்கர்யப்ரதிஸம்பந்திதயா முக்தநித்யாதிகளாலே ஸேவிக்கப்படாநின்றுளென்கிற ஆகாரமும், ஸ்வபோகஸௌக்யத்தாலே அவனை ஸேவிக்குமென்கிற ஆகாரமும் தோற்றுகிறது. ஆக, இப்பதத்தாலே பிராட்டியும் ஸர்வேச்வரனும் சேரவிருந்த சேர்த்தியிலே அடிமை செய்யக்கடவன் என்னும் அர்த்தவிசேஷம் சொல்லிற்றாயிற்று.

அவ்வடிமைதான், அநுபவஜநிதப்ரீதியூற்றாக விளையுமதாகையாலும், அநுபவஜநிதப்ரீதிதான், அநுபாவ்யவிஷயாதீனமாகையாலும், அந்த கைங்கர்யத்துக்கடியான ப்ரீதிக்கு நாற்றங்காலான ஸ்வரூபரூபகுணவிபூதிபூர்த்தியைச் சொல்லுகிறது:— நாராயணபதம். "அச்நுதே-காமாந்" "லப்த்வாநந்தீ பவதி" "இமாந் லோகாந்-அநுஸஞ்சரந்" "ஸதா பச்யந்தி" என்கிறபடியே, ஸ்வரூபரூபகுணாத்யநுபவம் ப்ரீதிக்கு ஹேதுவாகக்கடவது. ப்ரீதி, கைங்கர்யஹேதுவாகக்கடவது. இல்லையாகில் "ஸ்ரீமதே" என்கிறவிடத்தில் சதுர்த்தியே அமையும்; கைங்கர்யப்ரகாசமாகைக்கு நாராயணபதம் வேண்டாவே. ஸ்வரூபரூபகுணவிபூதிகள் நாலுக்கும் வாசகமாகையாலே, அநுபாவ்யவிஷயபூர்த்தியைக் காட்டக்கடவது, நாராயணபதம்.

நாரசப்தம், ரூபகுணவிபூதிகளுக்கு வாசகமாகிறது. அயநபதம், இவை மூன்றுக்கும் கொள்கலமான ஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அந்த ஸ்வரூபத்தைப் பார்த்தால் "ஸத்யம் ஜ்ஞாநமநந்தம் ப்ரஹ்ம" என்கிறபடியே, அசித்திற் காட்டில் அத்யந்தவ்யாவ்ருத்தமான த்ரிவிதாத்மஸ்வரூபத்திலும் அத்யந்தவ்யாவ்ருத்தமாயிருக்கும். ரூபத்தைப் பார்த்தால் "ந பூதஸங்கஸம்ஸ்தாநோ தேஹோஸ்ய பரமாத்மந:" என்று அப்ராக்ருதமாயிருக்கையாலும், அஸ்த்ரபூஷணாத்யாயத்திற்சொல்லுகிறபடியே ஸகலஜகதாதாரமாகையாலும், ப்ராக்ருதமுமாய், ஆதேயமுமான ஸர்வசேதநசரீரங்களிலும் அதிகமாயிருக்கும். "அபஹதபாப்மா விஜரோ

விம்ருத்யுர் விசோகோ விஜிகத்ஸோபிபாஸஸ் ஸத்யகாமஸ் ஸத்யஸங்கல்ப:" "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" "ஜ்ஞாநசக்திபலைச்வர்யவீர்யதேஜாம்ஸ்யசேஷத:, பகவச்சப்தவாச்யாநி விநா ஹேயைர் குணாதிபி:" "ஸமஸ்தகல்யாணகுணாத்மகோஸௌ", "ஸர்வேஷ்டகாமாதிகுணாகராசி:, பர: பராணாம் ஸகலா ந யத்ர க்லேசாதயஸ் ஸந்தி" என்கிறபடியே, ஹேயகுணஸம்ஸ்ருஷ்டமாய், "யதோ வாசோ நிவர்த்தந்தே" என்கிறபடியே நிஸ்ஸீமமுமாய், "நேதி நேதி" என்கிறபடியே அபரிச்சிந்நமுமான கல்யாணகுணங்களும், ஹேயகுணஸம்ஸ்ருஷ்டமுமாய் பரிச்சிந்நமுமான ஸர்வசேதந குணங்களிலும் அதிகமாயிருக்கும். "யஸ்யச்சாயாம்ருதம்" "யஸ்ய ம்ருத்யு:" "பாதோஸ்ய விச்வாபூதாநி, த்ரிபாதஸ்யாம்ருதம் திவி" என்கிறபடியே, உபயவிபூதியும் விபூதிகோடிகடிதை யாகையாலே, பரிச்சின்னவிபூதிகளில் அதிகையாயிருக்கும்.

ஆக, இப்படி ஸர்வப்ரகாரத்தாலும், ஸர்வாதிகனாய், "பதிம் விச்வஸ்ய" "பதிம் பதீநாம்" இத்யாதிகளான ச்ருதிசதங்களில் சொல்லுகிறபடியே ஸர்வஸ்வாமியான ஸர்வேச்வரன் நாராயணசப்தத்திலே கைங்கர்யப்ரதிஸம்பந்திதயா சொல்லப்படுகையாலே, "ஸர்வம் பரவசம் து:க்கம்" "ஸேவா ச்வவ்ருத்திர் வ்யாக்யாதா" "அபரப்ரேஷ்யபாவாத்" என்கிற வாக்யங்களிற்சொல்லுகிற ஸேவாநிஷேதம் அஸேவ்யஸேவாவிஷயம். இல்லையாகில், "ததுபாஸிதவ்யம்" "ததந்வேஷ்டவ்யம்" "தத் வாவ விஜிஜ்ஞாஸிதவ்யம்" "ஸோந்வேஷ்டவ்ய:" "ஆத்மாநமேவ லோகமுபாஸீத" "காரணந்து த்யேய:" "ஸ வை வேதிதவ்ய:" "த்யேயஸ் ஸதா" "த்யேயோ நாராயணஸ் ஸதா" "வாஸுதேவதருச்சாயா நாதிசீதா ந கர்மதா, நரகாங்காரசமநீ ஸா கிமர்த்தம் ந ஸேவ்யதே" என்று பகவத்ஸேவாவிதாயகமான வாக்யங்களோடு விரோதிக்கும். பதிவ்ரதைக்குப் புருஷாந்தரஸ்பர்சமன்றோ த்யாஜ்யமாயறுவது; ஸ்வபர்த்ருஸ்பர்சமன்றே.

அனந்தரம், பகவத்ஸ்வரூபரூபகுணவிபூத்யாதிகளை அநுபவித்து அந்த பகவதநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷம் ப்ரேரிக்க "ஹா வுஹா வுஹா வு, அஹமந்நமஹமந்நமஹமந்நம்" "யேந யேந தாதா கச்சதி தேந தேந ஸஹ கச்சதி" "இரைத்து நல்ல மேன்மக்களேத்த" "சூட்டு நன் மாலைகள் தூயனவேந்தி" இத்யாதிகளிற்சொல்லுகிறபடியே விரோதிநிவ்ருத்திபூர்வகமாக ஒருதேசவிசேஷத்திலே போய் வாசிகமாகவும் காயிகமாகவும் பண்ணும் கிஞ்சித்காரங்களை ப்ரார்த்திக்கிறது: "ஆய" என்கிற சதுர்த்தியாலே. அபிமதலாபம் விரோதிநிவ்ருத்திபூர்வகமாகவன்றி உதியாமையாலே இங்குப் பண்ணுகிற கைங்கர்யாபேக்ஷையாலே விரோதிநிவ்ருத்தியும் ப்ரார்த்திக்கையாகக்கடவது. இரண்டும் அபேக்ஷிதமாகில் இரண்டையும் ப்ரார்த்தியாதே, கைங்கர்யத்தையே ப்ரார்த்திப்பானென்னென்னில்: கைங்கர்யஸித்தியே பரமப்ரயோஜனம். அதுக்கு ப்ரதிபந்தகமாகையாலே விரோதியினுடைய நிவ்ருத்தி அபேக்ஷிதமாகிறதித்தனை போக்கி, ஜராமரணமோக்ஷார்த்தமாக இழிந்த கேவலனைப்போலே ஸ்வயம் உத்தேச்யமல்லாமையாலே வந்த அப்ராதான்யம் தோற்ற அத்தை எடாதொழிகிறது. விரோதிநிவ்ருத்தியை அவன் ஸ்வயப்ரயோஜனமாக நினைத்திருக்கும்; இவன் கைங்கர்யவிரோதிதயா த்யாஜ்யமென்று நினைத்திருக்கும். ஸம்ஸாரபயமிறே அவனுக்குள்ளது; பகவத்ப்ராவண்யமுள்ளது இவனுக்கேயிறே. சரமச்லோகத்தில் விரோதிநிவ்ருத்தியை ப்ரதானமாகச் சொல்லிற்று: ஸ்வயமுத்தேச்யமாய் அன்று; ஆத்மாவுக்கு ஸ்வாபாவிகதர்மமான கைங்கர்யம் ப்ரகாசிக்கைக்கு நடுவில் இடைச்சுவர் போகவேண்டுவதென்னும் நினைவாலே.

இச்சதுர்த்தி, 'தாதர்த்யே சதுர்த்தி'யாய், சேஷத்வவாசியாயற்றதேயாகிலும், கீழ் பண்ணின ப்ரபத்திக்கு சேஷத்வமாத்ரம் பலமல்லாமையாலே, "அகிஞ்சித்கரஸ்ய:சேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே சேஷத்வபலமான சேஷவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஜ்ஞானமில்லாதவன்று ஸ்வரூபம் 'அஸந்நேவ' ஆமோபாதியும், அநுஷ்டானமில்லாதபோது அந்த ஜ்ஞானந்தான் 'அஸந்நேவ' ஆமோபாதியும், சேஷவ்ருத்தியில்லாதபோது சேஷத்வமும் அஸத்கல்பமாகக்கடவது. ஆகவிறே மகாரத்துக்கு, மேலில் சதுர்த்தி விவரணமாயிற்றது. சேஷத்வம் இங்கே ஸித்தியாகிறக்ச்செய்தேயும், ஒரு தேசவிசேஷம் தேடிப்போகவேண்டுகிறது, சேஷவ்ருத்திஸித்திக்காகவிறே. உபாயஸ்வீகாரத்துக்கு முன்னே உண்டே சேஷத்வஜ்ஞானம்; ஆகையன்றோ திருமந்த்ரத்துக்குப் பின்பு த்வயமாகவேண்டிற்று. ஆகையாலே சேஷத்வஜ்ஞானம் முற்படக்கடவது. அனந்தரம், உபாயஸ்வீகாரமாகக்கடவது. அனந்தரம் கைங்கர்யரூபமான ப்ராப்யத்தினுடைய ப்ரார்த்தனமாகக்கடவது.

ப்ராப்யாபேக்ஷைக்கனந்தரமன்றோ நல்லாபிஹேதுவான உபாயஸ்வீகாரம் பண்ணுவது. ஆனால், "அர்த்தார்த்தீ ராஜகுலம் கச்சேத்" "மந்தாக்நிர் நாம்பு பிபேத்" "ஜ்யோதிஷ்டோமேந ஸ்வர்க்ககாமோ யஜேத" என்கிறப்போலே, உபேயாபேக்ஷையுடையவனுக்கு உபாயாபேக்ஷையாகையாலே, உத்தரார்த்தம் முற்பட்டு, பூர்வார்த்தம் பிற்படவேண்டாவோ? என்னில்: வ்யுத்பத்திதசையில் அது வேண்டுவது; அநுஷ்டானதசையில் மாறுடிபிருக்கும். ஜ்யோதிஷ்டோமாநுஷ்டாநாநந்தரமன்றோ ஸ்வர்க்கஸித்தி.

ஆக, இச்சதுர்த்தியாலே சேஷத்வத்தைப் பூரித்துத் தரும் சேஷவ்ருத்தியை ப்ரார்த்திக்கிறது. இது ப்ரார்த்தனரூபம் என்னுமிடத்தில் ப்ரமாணமென்னென்னில்: கீழ் உபாயஸ்வீகாரம் பண்ணினவன், லப்தாபிமதனாயிருக்குமவனல்லாமையாலும், அபிமதபலலாபதசையில்லாமையாலும், இவ்வர்த்தவிவரணம் பண்ணின பாஷ்யகாரர் "பவாநி" என்று ப்ரார்த்திக்கையாலும், ப்ரதமாசார்யரான நம்மாழ்வார் "அடிமை செய்ய வேண்டும்" என்று ப்ரார்த்திக்கையாலும், ப்ரார்த்தனரூபமாகக்கடவது. ஆகையாலே, கைங்கர்யப்ரார்த்தனம் பண்ணுகிறதாய் இப்பதம், "ஒழிவில் காலமெல்லாமுடனாய் மன்னி வழுவிலா அடிமை செய்ய வேண்டுநாம்" என்று கைங்கர்யவிசேஷணமாகச் சொல்லுகிற ஸர்வகாலாதிசப்தங்களாலே அந்த கைங்கர்யப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

ஸர்வகாலசப்தத்தாலே "ந ச புநராவர்த்ததே ந ச புநராவர்த்ததே" "அநாவ்ருத்திச் சப்தாதநாவ்ருத்திச் சப்தாத்" என்கிறபடியே யாவதாத்மபாவி அநுபாவ்யமான போகத்தை ப்ரார்த்திக்கிறது. இத்தாலே "கதாகதம் காமகாமா லபந்தே" "கத்வா கத்வா நிவர்த்தந்தே சந்த்ரஸூர்யாதயோ க்ரஹா:" என்கிறபடியே, தேசாந்தரத்திலே த்ரவ்யத்தை ஆர்ஜித்து தேசாந்தரத்திலே அறவிற்றிட்டு ஜீவித்து, மாண்டவாறே தேசாந்தரம் போவாரோபாதி, இங்கே ஆர்ஜிதமான புண்யத்தை அநுபவித்து போகாவஸானத்திலே, "யதேதமாகாசம், ஆகாசாத் வாயும், வாயுர் பூத்வா தூமோ பவதி, தூமோ பூத்வா அப்ரம் பவதி, அப்ரம் பூத்வா மேகோ பவதி, மேகோ பூத்வா ப்ரவர்ஷதி" என்று சொல்லுகிற க்ரமத்திலே புநராவ்ருத்தி லக்ஷணமான ஸ்வர்க்காத்யைச்வர்யபோகத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லிற்று.

ஸர்வதேசசப்தத்தாலே திவ்யவேச்மம், திருமாமணிமண்டபம், திவ்யோத்யானம் தொடக்கமான, பரமபதத்தில் போகஸ்தானங்களோடு, ஆமோதப்ரமோதஸம்மோதரூபமான வ்யூஹஸ்தானங்களோடு, லீலாவிபூதியில் வ்யூஹவிபவார்ச்சாவதாராதிஸ்தானங்களோடு வாசியற, "தஸ்ய ஸர்வேஷு லோகேஷு காமசாரோ பவதி" "இமாந் லோகாந் காமாந் நீகாமரூப்யநுஸஞ்சரந்" என்கிறபடியே தேசபரிச்சேதமில்லாதபடி அடிமைசெய்யப் பெறுவேனாகவேண்டுமென்கிறது. இத்தால் தேசபரிச்சின்னமான கேவலனுடைய போகத்தை வ்யாவர்த்திக்கிறது. அதாவது: ஸாம்ஸாரிகமான சப்தாதிவிஷயங்களினுடைய அநுபவம், கர்மஜநிதஸம்ஸாரவசவர்த்திகளான ப்ரஹ்மாதிகளுக்கே போக்யமாயிருக்கையாலும், ஆத்மாநுபவஸுகத்தைப்பற்ற அதிக்ஷுத்ரமாயிருக்கையாலும், சப்தாதிவிஷயங்களில் அந்வயமில்லை; "ஏகாந்திநஸ் ஸதா ப்ரஹ்மத்யாயிநோ யோகிநோ ஹி யே, தேஷாம் தத் பரமம் ஸ்தாநம் யத் வை பச்யந்தி ஸூரய:" என்று அநந்யப்ரயோஜநரான பரமைகாந்திகளாலே அநுபாவ்யமான அபரிச்சின்னபகவதநுபவத்தில் அந்வயமில்லாமையாலும், அணுபரிமாணனான ஆத்மாவே போக்யமாயிருக்குமே; ஆகையாலே அவ்வாத்மாநுபவம் தேசபரிச்சின்னம்.

ஸர்வாவஸ்தாசப்தத்தாலே கீழ்ச்சொன்ன ஐச்வர்யம்போலே நச்வரமன்றிக்கே யாவதாத்மபாவியாய், கைவல்யம்போலே ஸங்குசிதமன்றியிலே, ஸர்வதேசாநுவ்ருத்தமாயிருந்ததேயாகிலும், நித்யாக்நிஹோத்ரம் போலே போகோபாதிகர்ப்பமாய் இருப்பன சில காலவிசேஷங்களும் இடைவிடலாம்; அங்ஙனன்றியிலே அந்தரங்கதசையோடு பஹிரங்கதசையோடு வாசியற ஒரு காலகலையும் வந்த்யையாகாதபடி அடிமைசெய்யப் பெறுவேனாக வேண்டும் என்கிறது. அழகோலக்கம் கொடுக்கும் போதோடு, நாச்சிமாரும் தேவருமாய் தென்றலும் பிற்காலிக்கவேண்டும்படியான தசையோடு வாசியறத் திருவனந்தாழ்வானைப்போலே அடிமை செய்யவேணும். ஓலக்கம் கொடுக்கும்போது சத்ரசாமராதிபாணியாயும் அந்தரங்க தசையில் படுக்கை, படிக்கம், ஒட்டுப்பெட்டில், காளாஞ்சி, வீலாசுகம் தொடக்கமானவையாயும், இடைவிடாமல் அடிமை செய்யக்கடவனாயிறே இருப்பது முக்தன்.

இத்தால் ஒருகால் "ஆத்மாநம் வாஸுதேவாக்யம் சிந்தயந்" என்கிறபடியே, ஸ்வாநுபவவைபவத்தாலும், ஸ்ரீஸ்தனஸம்ச்லேஷாநுபவத்தாலும், "அஹமந்நம்" என்கிறபடியே பரமபோக்யபூதமான நித்யமுக்தருடைய ஸ்வரூபாநுபவத்தாலும், பரமானந்தியாகா நிற்கச்செய்தேயும், "ஸ ஏகாகீ ந ரமேத" "ப்ருசம் பவதி து:க்கித:" "க்ரோதமாஹாரயத் தீவ்ரம்" "கோபஸ்ய வசமேயிவாந்" என்கிறபடியே ஸூரிகளோபாதி தன்னோடே அவர்ஜநீயஸம்பந்தமுடையார் சில சேதநர் காணகளேபரவிதுராராய்க் கிடக்கிறபடியைக் கண்டு, உண்டது உருக்காட்டாதொழிவது; காணகளேபரங்களைக் கொடுத்தாலும் தாபத்ரயதப்தராய் நோவுபடுகிற படியைக் கண்டு அவர்கள் தாம் வந்து ஸாந்த்வனம் பண்ணவேண்டும்படி வெறுப்பது; அவை பண்ணுகிற பகவதபசாராதிகளைக் கண்டு இரக்கத்துக்கு உறுப்பான ஹ்ருதயத்தை க்ரோதத்துக்கு இடமாக்குவதாய், லீலாவிபூதிஸம்பந்தத்தாலே, ஒருதலை * தோதவத்தியும் ஒருதலை விழுப்புமான ஈச்வரனுடைய போகத்திற்காட்டில் போகமாத்ரஸாம்யயுக்தனான முக்தனுடைய போகத்துக்கு வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று.

* தோதவத்தி—தௌதவஸ்த்ரீ (வெள்ளை வஸ்த்ரம் தரித்தவன்); (இங்கு) பரிசுத்தமான சரீரத்தையுடையவன்

ஸர்வவிதசப்தத்தாலே "நிவாஸசய்யாஸநபாதுகாம்சுகோபதாநவர்ஷாதபவாரணாதிபி:" "சென்றால் குடையாம் இருந்தால் சிங்காதனமாம் நின்றால் மரவடியாம்" என்கிறபடியே ஆகாராநுரூபமாக, "ஸ ஏகதா பவதி, த்விதா பவதி, த்ரிதா பவதி, சததா பவதி, ஸஹஸ்ரதா பவதி" என்கிறபடியே அநேகவிக்ரஹபரிக்ரஹம் பண்ணி, "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்று இளையபெருமாள் சத்ரசாமரபாணிகளாவது, கநித்ரபிடகாதரராவது, பலாஹரணாதிகளைப் பண்ணுவது, சாலாஸந்நிவேசாதிகளைப் பண்ணுவது, குஸுமசயநாதிகளைப் பண்ணுவது, கையும் வில்லுமாய் நோக்குவதாய், படைவீட்டில் பெருமாள் பரிகரவர்க்கம் செய்ததடையத் தாமே செய்தாப்போலே, நானும் எல்லாவகைப்பட்ட அடிமைகளையும் செய்யப் பெறவேணுகிவேணுமென்று ப்ரார்த்திக்கிறது. இத்தாலே பெருமுலையாலே அடிமைசெய்யும் 'நித்யாநபாயிநி'யான பிராட்டியுடைய போகத்திற்காட்டில் வ்யாவ்ருத்தி சொல்லிற்றாயிற்று. சேதநனுடைய ஸ்வரூபத்தோடு போகத்தோடு கிஞ்சித்காரத்தோடு வாசியற அத்யந்தவ்யாவ்ருத்தமாயிருக்கும். பகவச்சேஷத்வம் அவளுக்கு ஸ்வரூபம்; மிதுன சேஷத்வம் இவனுக்கு ஸ்வரூபம். பகவத்போகமே அவளுக்குள்ளது; அவளும் அவனுமான சேர்த்தி இவனுக்கு போக்யம். ஸ்தனதடாதிகளாலே பண்ணும் கிஞ்சித்காரம் அவளுக்குள்ளது; இவனுக்கு மிதுனவிஷயமான ஸர்வவிதகிஞ்சித்காரமுமுண்டு.

உசிதசப்தத்தாலே ஸர்வகாலங்களிலும் ஸர்வதேசங்களிலும் ஸர்வாவஸ்தைகளிலும் ஸர்வவிதகிஞ்சித்காரமும் பண்ணக்கடவேனென்கிற ஸங்கல்பமே இவனுக்குள்ளது. அனுஷ்டிக்குமிடத்தில் "க்ரியதாம்" என்கிறபடியே "அவன் திருவுள்ளத்துக்கு யாதொன்று அநுகூலமானது, அது அநுஷ்டேயம்" என்று, ஸ்வேச்சாவ்யாவ்ருத்தமான கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. அதாவது:– மரவடிகளைப்பாதி திருவடிகளிலே கிடக்கவுமாய், மாலையைப்பாதி திருமுடியில் ஏறவுமாய், இளையபெருமாளைப்பாதி கூடப்போகவுமாய், ஸ்ரீபரதாழ்வானைப்பாதி தலையிலே முடிவைக்கவுமாயிருக்கை. இதுவிறே பாரதந்த்ர்யத்துக்கு எல்லைநிலம். யாதொன்று திருமுகமலர்த்திக்கு உறுப்பாயிருவது, அதிறே கைங்கர்யமாவது.

ஆக, இத்தால், நெடுநாள் போகவிரோதியான க்ஷயரோகத்தாலே நொந்தவன் ஒரு ஸித்தௌஷதத்தைப் பெற்று நோய்விட்டுக் குளிக்குமோபாதி, பகவத்ப்ரஸாதமாகிற பரம பேஷஜவைபவத்தாலே ஸாம்ஸாரிகமான தடையறக்கழிந்து, அழுக்குக்கழற்றின மாணிக்கம் போலே அத்யுஜ்ஜ்வலனாய், அர்ச்சிராதிகதியாலே பரமபதமாகிற திவ்யதேசத்திலே புக்கு, நிரந்தரபகவதநுபவைகயாத்ரையான நித்யஸூரிஸங்கத்திலே அந்யதமனாய், கடல் உடைந்தாப்போலே கண்டவிடமெங்கும் திறந்து பாய்கிற பரமபக்திரூபாபன்னஜ்ஞானத்தாலே, ஈச்வரனுடைய ஸ்வரூபத்தோடு ரூபத்தோடு குணத்தோடு விபூதியோடு வாசியற விளாக்குலை கொண்டு அநுபவித்து, அந்த அநுபவஜநிதப்ரீதிப்ரகர்ஷத்தாலே மதுபானமத்தரைப்போலே அக்ரமமாக ஸ்தோத்ரமுகனாய்க் களித்தாடுவது; அதுதான் போய்த் தலைமண்டையிட்டு கிஞ்சித்காரங்களில் குதூஹலத்தைப் பிறப்பித்து அடிமையிலே மூட்டுவது; அந்த கிஞ்சித்காரந்தான், "நிரவத்ய: பர: ப்ராப்தே:" என்கிறபடியே அநுபூதாம்சம் அல்பமாய் அநுபாவ்யாம்சமே விஞ்சும்படியான விஷயவைலக்ஷண்யவைபவமும், அதுதன்னையும் விளாக்குலை கொள்ளவற்றான அபிநிவேசாதிசயமும் கைதொட்டு வளர்க்க, அத்தால் கொள்கொம்புமூடப் படர்ந்து ஒரு காலபரிச்சேதத்தையாதல், தேசபரிச்சேதத்தையாதல், அவஸ்தாபரிச்சேதத்தை

யாதல், க்ரியாபரிச்சேதத்தையாதல் ஸஹியாமையாலே, ஸர்வகாலங்களிலும் ஸர்வதேசங்களிலும், ஸர்வாவஸ்தைகளிலும் பண்ணும் ஸர்வவிதகைங்கர்யங்களையும் ப்ரார்த்தித்ததாய்நின்றது: "ப்ரார்த்தநாயாம் சதுர்த்தீ" என்கிற சதுர்த்தியாலே.

"அபஹதபாப்மா விஜரோ விம்ருத்யு:" "நிர்குணம் நிரஞ்ஜநம்" என்கிறபடியே ஹேயகுணநிஷேதத்தையும், "யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்" இத்யாதிகளிற்படியே விலக்ஷண குணயோகத்தையும் சொல்லி, இப்படி விலக்ஷணகுணயுக்தமாய் ஹேயகுணரஹிதமான வஸ்துவே உபாஸ்யமென்று உபாஸ்யவஸ்துநிர்ணயம் பண்ணினவோபாதி, ப்ராப்யமாயிருவதும் வைலக்ஷண்யபூர்ணமாய் ஹேயகந்தரஹிதமாயிருக்கவேண்டுகையாலே, அதில் வைலக்ஷண்ய பூர்த்தியைக் கீழுடையச் சொல்லிற்றுகையாலே, அனந்தரமான இந்த நமச்சப்தம் ஹேயகந்தாராஹித்யத்தைச் சொல்லுகிறது.

அதில் போகத்துக்கு ஹேயாந்வயமுண்டாவது, போக்யவஸ்துவின் பக்கல் குறையாலேயாதல்; போக்தாவின் பக்கல் குறையாலேயாதலிறே. அதில் இங்குச்சொன்ன போக்யம் ஸர்வமங்களாயதநபூதையான பிராட்டிக்கும் மாங்கள்யகரமாய், தான் "மங்களாநாம் ச மங்களம்" என்கிறபடியே ஸ்வரூபரூபாதிகளாலே ஸர்வமங்களங்களுக்கும் அவ்வருகுபட்டிருக்கையாலே குறைவற்றிருந்தது; இனி போக்த்ருத்வதோஷமேயுள்ளது. அத்தைக் கழிக்கிறது இப்பதம். அதாவது:— அஹங்காரமமகாரங்கள்.

ஸ்வரூபயாதாத்ம்யஜ்ஞானஜனகமான திருமந்த்ரத்திலே அஹங்காரமமகாரங்கள் நிவ்ருத்தமாயிருக்க, இப்போது நிவர்த்யமாகிற அஹங்காரமமகாரங்கள் எவையென்னில்: இவ்வஹங்காரமமகாரங்கள் தான் மூன்று வகைப்பட்டிருக்கும். "அநாத்மந்யாத்மபுத்திர் யா அஸ்வே ஸ்வமிதி யா மதி:" என்கிறபடியே, அநாத்மாவான தேஹத்தில் ஆத்மபுத்தியும், தேஹாநுபந்தியான பதார்த்தங்களில் ஸ்வத்வபுத்தியும், அஹங்காரமமகாரமாகக்கடவது. அதுக்கு மேலே "ஸ்வதந்த்ரோஹம்" என்று தேஹாத் பரமாக ஆத்மாவை ப்ரதிபத்தி பண்ணிப் போராநிற்கச்செய்தேயும், ஸ்வதந்த்ரமாக ப்ரதிபத்திபண்ணிப் போருவதொன்றுண்டு; அதுவுமொரு அஹங்காரம். விஷயமுண்டாகில் மமதையும் அநுவர்த்திக்குமிறே. அதுக்கு மேலே கர்மஜ்ஞாநாதிகளை அநுஷ்டிக்கவுமாம்; ஒரு ஸாதனவிசேஷஸ்வீகாரம் பண்ணவுமாம். "அவற்றுக்கு அநுஷ்டாதா நான்; என்னுடைய அநுஷ்டானம் இவை" என்று பிறப்பன சில அஹங்காரமமகாரங்களும் ப்ரதமாக்ஷரத்தில் சரமபதத்தாலும், அதில் விபக்திவிசேஷத்தாலும், அனந்தரபதத்தாலும் வ்யாவ்ருத்தமாயிற்று. இனி, இவை மூன்றுக்குமேலே காகாக்ஷிந்யாயத்தாலே ஒரு பதவிசேஷத்தாலே வ்யாவ்ருத்தமாய், போகதசாநுவ்ருத்திக்கும் யோக்யதையுண்டாயிருப்பதொரு அஹங்காரமமகாரமுண்டு; அத்தை வ்யாவர்த்திக்கிறது இங்கு. அதாகிறது:— "நான் போக்தா; என்னுடைய போகம்." என்றிருக்கை.

"அஹமந்நாத:" "ஸோச்நுதே ஸர்வாந் காமாந்" "ஸதா பச்யந்தி" "போகமாத்ர-ஸாம்யலிங்காச்ச" "அத்ர ப்ரஹ்ம ஸமச்நுதே" என்று சொல்லுகிறபடியே, நேரே குணாதிகளுக்கடைய போக்தாவாயிருக்க, அதுக்கு மேலே குணத்யநுபவம் ரஸித்து ப்ரீதனுனல், அந்த ப்ரீதிப்ரேரிதமாய் வருமதாயுமிருக்க கைங்கர்யம், "போக்த்ருத்வம் எனக்

இல்லை" என்றிருக்கையாவதென்? போக்த்ருத்வமில்லையாகில் "லப்த்வாநந்தீ பவதி" என்கிற ஆனந்தித்வமின்றியிலே ஒழியும். ஆனந்தித்வமில்லாமையாலே அபுருஷார்த்தமுமாம். கர்மாநுஷ்டானதசையில் கர்த்ருத்வாநுஸந்தானம், "அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணஞ்ச ப்ருதக்விதம், விவிதா ச ப்ருதக் சேஷ்டா தைவஞ் சைவாத்ர பஞ்சமம்" என்கிறபடியே ஆத்மாவுக்கு சைதந்யப்ரயுக்தமான ப்ரயத்னமாத்ரமேயாய் அதிஷ்டாநாதிகளுக்கே கர்த்ருத்வமாகையாலே அங்கு உபபன்னம். முக்தனுல் கர்த்ருத்வாரோபணவிஷயமான அதிஷ்டாநாதிகள் இல்லாமையாலும், "ஸர்வத: பாணிபாதம் தத் ஸர்வதோக்ஷிசிரோமுகம், ஸர்வதச் ச்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி" என்கிறபடியே அதிஷ்டாநாதிகளால் கொள்ளும் கார்யத்தை ஸ்வரூபேண கொள்ளவல்லனுய், "ப்ரஜ்ஞயா ஹி விபச்யதி" "மநஸைவைதாந் காமாந் பச்யந் ரமதே" என்கிறபடியே அநுபவத்துக்கு வேண்டுவது ஆத்மதர்மபூதமான ஜ்ஞானமாத்ரமாகச் சொல்லுகையாலும் அநுபபந்நமென்னில்: இப்போது அதுவன்று நினைக்கிறது. பதிவ்ரதையான ஸ்த்ரீக்கு பர்த்ருஸம்ச்லேஷஜநிதஸாரஸ்யாநுபவம் உண்டாகாநிற்கச்செய்தேயும், பர்த்தாவினுடைய முகவிகாஸமாய் ப்ரயோஜனம், "அவ்விகாஸமேஹது" என்று ஸம்ச்லேஷாதிகளிலே ஸங்கம் பிறக்குமோபாதி, பகவத்குணாநுபவாதிகளில் "நான் போக்தா" "எனக்கு ரஸித்தது" என்று புருஷபோகத்தோபாதி ஸ்வதந்த்ரமாயிருத்தல், ஸாதாரணமாயிருத்தல் செய்கையன்றியிலே, "ஈச்வரன் முகமலர்த்தி, எனக்கு ஹேது" என்று அவற்றிலே ஸங்கமாய், முகமலர்த்தியே தனக்கு போக்யமாக நினைத்திருக்கை. அத்தைப் பற்றவிறே முதலிலே "அஹமந்நம்" என்று சொல்லி, பின்னே "அஹமந்நாத:" என்றதும்.

ஆக, இவ்வாக்யத்வயத்தாலும் ஸ்வரூபஜ்ஞாநானந்தரபாவியாய் பந்த்வயோக்தமான உபாயோபேயங்களை ப்ரார்த்தித்ததாய் நின்றது. அதில் பூர்வவாக்யத்தில் "ப்ரபத்யே" என்கிற க்ரியாபதம், அத்யவஸாயத்தைச் சொல்லுகிறது. அதுக்கு உபேயாத்யவஸாய வ்யாவ்ருத்தியைப் பண்ணித்தருகிறது: உபாய்வாசகமான சரணசப்தம். அந்த உபாயத்துக்கு ஸாத்யோபாயவ்யாவ்ருத்தியைப் பண்ணித்தருகிறது:— "நாராயணசரணௌ" என்று. அந்த ஸித்தஸாதனத்தில் இழியும் துறையைச் சொல்லுகிறது:—ஸ்ரீமத்பதம். ப்ராப்யதசாநுவ்ருத்திவிரோதியினுடைய நிவ்ருத்தியைச் சொல்லுகிறது:— நமச்சப்தம். அவனுக்கு ப்ராப்யமான கைங்கர்யத்தைச் சொல்லுகிறது:— சதுர்த்தி. அந்த கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறது:—நாராயணபதம். ப்ரதிஸம்பந்தியைப் பூரித்துத் தருகிறது ஸ்ரீமத்பதம். ஆக, கைங்கர்யவிரோதிநிவ்ருத்தியையும், கைங்கர்யத்தையும், கைங்கர்யப்ரதிஸம்பந்தியையும், ப்ரதிஸம்பந்திபூர்த்தியையும், அத்தைப் பெறுகிற அதிகாரிவிசேஷணமான அத்யவஸாயத்தையும், அது உபாயாத்யவஸாயமென்னுமிடத்தையும், அந்த உபாயத்தினுடைய ஸித்தத்வத்தையும், அந்த ஸித்தோபாயத்திலே மூட்டும் புருஷகாரத்வத்தையும் சொல்லிற்றாயிற்று.

பிராட்டியுடைய புருஷகாரத்வத்தையும், புருஷகாரபூதையான அவளுடைய நித்யயோகத்தையும், நித்யயுக்தையான அவளாலே உதிக்கப்பட்ட சீலாதிகுணவிசேஷங்களையும், அந்த குணப்ரகாசகமான விலக்ஷணவிக்ரஹயோகத்தையும், குணவிக்ரஹவிசிஷ்டனுடைய உபாயபாவத்தையும், அந்த உபாயாவலம்பியான சேதநனுடைய அத்யவஸாயத்தையும்,

அத்யவஸாயவிசிஷ்டனுக்கு ப்ராப்யம் ஒரு மிதுனமென்னுமிடத்தையும், அந்த ப்ராப்யத்தைப் பூண்கட்டித்தரும் ஸர்வஸ்வாமித்வத்தையும், ஸர்வஸ்வாமி திருவடிகளில் கைங்கர்யமே புருஷார்த்தமென்னுமிடத்தையும், அதுக்கு விரோதி அஹங்காரமமகாரமென்னுமிடத்தையும் சொல்லிற்றாயிற்று.

த்வயப்ரகரணம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

இது, தி. தா. புத்தூர் அக்ரஹாரத்திலிருக்கும்
கி. ஸ்ரீநிவாஸய்யங்கார் அவர்களால்
பரிசோதிக்கப்பட்டு,
தமது
ஸ்ரீநிவாஸம் அச்சுக்கூடத்தில்
அச்சிட்டு வெளியிடப்பட்டது.

## சரமச்லோக ப்ரகரணம்.

### அவதாரிகை.

பக்தியிலும் ப்ரபத்திக்கு நெடுவாசி உண்டு: ஆசார்யருசிபரிக்ரஹம்; ஸர்வாதிகாரம்; தேஹாவஸாநத்திலே பலம்; அந்திமஸ்ம்ருதி வேண்டா; பரமசேதநம்; ஸித்தஸ்வரூபம்; ஸஹாயாந்தரநிரபேக்ஷம்; அவிலம்ப்ய பலப்ரதம்; ஸ்வரூபாநுரூபமான உபாயம்; ப்ராப்யாநுரூபமான உபாயம்.

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிற ச்லோகத்திற்சொல்லுகிற தர்மபரித்யாகம், சாஸ்த்ரவிரோதத்தாலும், அநுஷ்டானவிரோதத்தாலும், ப்ரகரணவிரோதத்தாலும் அயுக்தம். "யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத்" "தர்மேண பாபமபநுததி" "யஜ்ஞேந தாநேந தபஸாநாசகேந ப்ராஹ்மணா விவிதிஷந்தி" "ஸர்வாபேக்ஷா ச, யஜ்ஞாதிச்ருதேரச்வவத்" என்று ஜ்ஞானஸாதநமாகக் கர்மத்தை அவச்யாநுஷ்டேயமாக ஓதுகையாலும், "ப்ரஹ்மவிதாப்நோதி பரம்" "தமேவம் வித்வாநம்ருத இஹ பவதி" "ப்ரஹ்ம வேத ப்ரஹ்மைவ பவதி" "ததா வித்வாந் புண்யபாபே விதூய நிரஞ்ஜநः பரமம் ஸாம்யமுபைதி" "அஸ்தி ப்ரஹ்மேதி சேத் வேத ஸந்தமேநம் ததோ விதுः" "வித்யாத் து புருஷம் பரம்" என்று, வேதநவிசேஷத்தை பகவத் ப்ராப்திஸாதநமாக விதிக்கையாலும், "யமேவைஷ வ்ருணுதே தேந லப்யः, தஸ்யைஷ ஆத்மா விவ்ருணுதே தநூம் ஸ்வாம்" "பக்த்யா ச த்ருத்யா ச ஸமாஹிதாத்மா ஜ்ஞாநஸ்வரூபம் பரிபச்யதீஹ" "ஹ்ருதா மநீஷா மநஸாபிக்லுப்தः" என்று ப்ராப்திஸாதநமாக பக்தியை விதிக்கையாலும், இவற்றினுடைய த்யாகம் சாஸ்த்ரவிருத்தம். "சுகோ முக்தः, வாமதேவோ முக்தः" என்று முக்தராக ச்ருதரான சுகாதிகளோடு, "உபமாநமசேஷாணாம் ஸாதூநாம்"

என்னப்பிறந்த ப்ரஹ்லாதனோடு, பாதஸௌபரிப்ரப்ருதிகளான அல்லாத முமுக்ஷுக்களோடு வாசியற, கர்மஜ்ஞாநாதிகளையே அநுஷ்டித்துப் போருகையாலே, தர்மத்யாகவிதி, அநுஷ்டானத்தோடும் விரோதிக்கும். “நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:” “கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:” “ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே,” “ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே,” “ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா” “போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம், ஸுஹ்ருதம் ஸர்வபூதாநாம் ஜ்ஞாத்வா மாம் சாந்திம் ருச்சதி” “பக்த்யா மாமபிஜாநாதி” “பக்த்யா த்வநந்யயா சக்ய:” “மத்பக்திம் லபதே பராம்” “மந்மநா பவ மத்பக்த:” என்று ஸாதரமாகவும் ஸவிஸ்தரமாகவும் பதினெட்டோத்தாலும் உபதிஷ்டமான கர்மாதித்யாகம் ப்ரகரணவிருத்தம். ஆக, சாஸ்த்ரவிரோதமும், கர்மஜ்ஞாநாநுஷ்டானவிரோதமும், ப்ரகரணவிரோதமும் பிறக்கையாலே, இச்ச்லோகத்துக்கு இவற்றோடு சேர்ந்த அர்த்தம் அர்த்தமாமித்தனை; விருத்தமான த்யாகம் அர்த்தமாகமாட்டாது என்று சிலர் சொன்னார்கள்.

சாஸ்த்ரவிரோதமும், அநுஷ்டானவிரோதமும், ப்ரகரணவிரோதமும் பிறவாமையாலே அது அர்த்தமாகாது. “யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை, தம் ஹி தேவமாத்மபுத்திப்ரஸாதம் முமுக்ஷுர் வை சரணமஹம் ப்ரபத்யே” “தஸ்மாந் ந்யாஸமேஷாம் தபஸாமதிரிக்தமாஹு:” “ந்யாஸ இதி ப்ரஹ்மா” “தேவாநாம் குஹ்யம்” “ய ஏவம் வேத” “ப்ரஹ்மணோ மஹிமாநமாப்நோதி” “தாவதார்த்திஸ் ததா வாஞ்சா தாவந் மோஹஸ் ததாஸுகம், யாவந்ந யாதி சரணம் த்வாமசேஷாகநாசநம்” “சரண்யம் சரணம் யாதோ கோவிந்தம் நாவஸீததி.” “வ்ருதைவ பவதோ யாதா பூயஸீ ஜந்மஸந்ததி:, தஸ்யாமந்யதமம் ஜந்ம ஸஞ்சிந்த்ய சரணம் வ்ரஜ” “தேஷாம் து தபஸாம் ந்யாஸமதிரிக்தம் தபச் ச்ருதம்” “ஸா தேவேஸ்மிந் ப்ரயுஜ்யதாம்” என்று ஸர்வதர்மபரித்யாகபூர்வகமாக அநுஷ்டேயையான ப்ரபத்தியையும், பகவத்ப்ராப்திக்கு ஸ்வதந்த்ரஸாதநமாக சாஸ்த்ரத்திலே விதிக்கையாலே சாஸ்த்ரவிரோதமில்லை. கர்மஜ்ஞாநாதிவிதாயகமான சாஸ்த்ரங்களுக்கும், தத்த்யாகபூர்வகமாக அநுஷ்டேயமான ப்ரபத்தியை விதிக்கிற சாஸ்த்ரத்துக்கும், அந்யோந்யம் விரோதம் பிறக்கையாலே, ப்ரபத்திசாஸ்த்ரந்தான் துர்பலமானாலோவென்னில்; சாஸ்த்ரத்வம் அவிசிஷ்டமாகையாலே ப்ரபத்திவிதாயகசாஸ்த்ரத்தோடே விரோதம் பிறக்கையாலே, கர்மஜ்ஞாநாதிவிதாயகசாஸ்த்ரந்தான் துர்பலமாயிருக்கையாலே அதுவுமர்த்தமன்று.

இங்ஙனே விரோதம் சொல்லப்பார்க்கில், ச்யேநவிதிக்கும், காமனுவிதிக்கும், மோக்ஷவிதிக்கும் அந்யோந்யம் விரோதம் பிறக்கையாலும், ப்ரஹ்மசர்யம், கார்ஹஸ்த்யம், வானப்ரஸ்ததர்மம், பிக்ஷுதர்மம் இவற்றுக்கு அந்யோந்யம் விரோதம் பிறக்கையாலும், “ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி” என்று பூதஹிம்ஸையை நிஷேதித்து வைத்து பசுவிசஸனத்தை விதிக்கையாலும், “யாவஜ்ஜீவமக்நிஹோத்ரம் ஜுஹுயாத்” என்று அக்நிஹோத்ரஹோமத்தை விதித்துவைத்து, தத்த்யாகத்தை “ஸந்யஸேத் ஸர்வகர்மாணி” என்று விதிக்கையாலும், கர்மத்தை அநுஷ்டேயமாகச் சொல்லிவைத்து, தத்த்யாகபூர்வகமாக அநுஷ்டேயமான ஜ்ஞாநயோகத்தை விதிக்கையாலும், உபாஸ்யவஸ்துவை “யஸ் ஸர்வஜ்ஞஸ் ஸர்வவித்” என்று ஸகுணமாகச் சொல்லிவைத்து, “நிர்க்குணம்” “நிரஞ்ஜநம்” என்று

குணவிதுரமாகச் சொல்லுகையாலும், ஆக இவ்வோமுகங்களாலே ஆபாதருடம் பரஸ்பர விருத்தமாகத் தோற்றுகையாலே சாஸ்த்ரமாக த்யாஜ்யமாம். இவ்விரோதத்தை, குணபேதத்தாலும், வர்ணபேதத்தாலும், ஆச்ரமபேதத்தாலும், பாகபேதத்தாலும், ருசிபேதத்தாலும், அதிகாரிபேதத்தாலும் பிறக்கையாலே, பரிஹரிக்கிறவோபாதி இதுவும் அதிகாரிபேதத்தாலே பரிஹ்ருதம். ஆகையாலே சாஸ்த்ரவிரோதமில்லை. கர்மஜ்ஞாநாதிகளை அநுஷ்டித்த சுகாதிகளோபாதி, கண்டுமுசுகுந்தப்ரப்ருதிகளான முமுக்ஷுக்களோடு, தூர்வாஸச்சாப தூஷிதரான தேவதைகளோடு வாசியற ப்ரபத்த்யநுஷ்டானம் பண்ணி பலிக்கக்காண்கையாலே, அநுஷ்டானவிரோதமில்லை. கர்மயோகாதிகளுக்கு ஸஹாநுஷ்டானமில்லாமையாலே, பாகக்ரமநிபந்தனமான அதிகாரிபேதத்தாலே பரிஹரிக்கிறவோபாதி, இதுவும் அதிகாரிபேதத்தாலே பரிஹ்ருதம். ஆகையாலே ப்ரகரணவிரோதமில்லை.

இப்படி ஆபாஸமான சாஸ்த்ரவிரோதாதிகளைப் பரிஹரிக்கைக்காகச் சிலர், "கீழ் விஹிதமான கர்மஜ்ஞாநாதிகள் த்ரைவர்ணிகவிஷயம்; இந்த த்யாகபூர்வகப்ரபத்திவிதாநம், அத்ரைவர்ணிகரான ஸ்த்ரீசூத்ராதிகள் விஷயம்" என்று விஷயவிபாகம் பண்ணினார்கள். இங்கு விதிவிஷயபூதனான அர்ஜுநன் த்ரைவர்ணிகரிலே அந்யதமனாகையாலும், "ஸ்த்ரியோ வைச்யாஸ் ததா சூத்ராஸ் தேபி யாந்தி பராம் கதிம்" என்று அத்ரைவர்ணிகரான ஸ்த்ரீசூத்ராதிகளுக்கும் பஜநாதிகாரமுண்டாகக் கீழே ச்ருதமாகையாலும், ப்ரஸஜ்ய ப்ரதிஷேதம் தர்மாநுஷ்டானயோக்யஸ்தலத்திலேயாகையாலும், அதுவும் அர்த்தமன்று.

கர்மபலத்யாகபூர்வகமாக அங்கப்ரபத்தியை விதிக்கிறது என்றார்கள் சிலர். இவ்விடத்தில் கர்மயோகப்ரஸ்தாவமில்லாமையாலும், உண்டானாலும், "மா பலேஷு கதாசந" என்று கீழே உக்தமாகையாலும், தர்மசப்தம் பலவாசியல்லாமையாலும், அதுவும் அர்த்தமன்று.

"க்ருச்ரசாந்த்ராயணகூச்மாண்டவைச்வாநரி தொடக்கமான ப்ராயச்சித்ததர்மங்களை விட்டு, அந்த ஸ்தானத்திலே என்னையே பற்று" என்கிற பக்ஷமும், அர்ஜுநன் கர்மயோக விரோதித்வக்ருதத்தை உடையனல்லாமையாலும், மேல்விழுந்த ஊர்வசியையும் அநாதரிக்கும்படி ஜிதேந்த்ரியனாகையாலும், கீழ் சோகஜனகமான ப்ராயச்சித்தம் அப்ரஸ்துதமாகையாலும், தர்மசப்தத்தை அவ்வளவிலே ஒதுக்கவொண்ணாமையாலும், அதுவும் அர்த்தமன்று.

"புக்த்வா சாந்த்ராயணம் சரேத்" போலே கர்மயோகாதிகளிலே ப்ரம்சமுண்டாயிற்றாகில், தத்ப்ராயச்சித்தமாக ப்ரபத்தியை விதிக்கிறதென்கிற பக்ஷமும், "நேஹாபிக்ரமநாசோஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே" என்று ப்ராயச்சித்தநிரபேக்ஷமாகச் சொல்லுகையாலும், அதுவும் அர்த்தமன்று.

"ஜ்ஞாநயோகலாபத்துக்கு, தத்ஸாதநமான கர்மத்தை விட்டு என்னைப் பற்று" என்கிற பக்ஷமும், ஸாத்யமான ஜ்ஞானத்துக்கு வாசகசப்தமில்லாமையாலும், ப்ரபத்தியை ஸ்வதந்த்ரமாக விதிக்கையாலும், தர்மசப்தம் கர்மத்தளவிலே நில்லாமையாலும், விஹித கர்மத்யாகமாகிற தூஷணம் வருகையாலும், அதுவும் அர்த்தமன்று.

"இத்தை விட்டேயாகிலும் பற்றுவான் என்று சரணாகதிப்ரசம்சை தான்" என்கிற பக்ஷமும், ப்ரசம்சையால் சோகநிவ்ருத்தி பிறவாமையாலே அதுவும் அர்த்தமன்று.

“ பூர்ணாஹுதிந்யாயத்தாலே இவ்வதிகாரிக்கு கர்மத்யாகத்தில் தாத்பர்யமில்லை; ப்ரபத்த்யநுஷ்டானத்திலே தாத்பர்யம். ” என்கிற பக்ஷமும், கர்மத்யாகத்தையொழிய அநுஷ்டிக்க ஒண்ணாத ப்ரபத்திக்கு, பலத்தையொழியவே அநுஷ்டேயமான பூர்ணாஹுதிந்யாயம் த்ருஷ்டாந்தமல்லாமையாலே, அதுவும் அர்த்தமன்று.

“ ந யோத்ஸ்ய இதி கோவிந்தமுக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ” “ ரதோபஸ்த உபாவிசத் ” என்று பந்துஹத்யாபயத்தாலே யுத்தாந்நிவ்ருத்தனான அர்ஜுநனை யுத்தத்திலே ப்ரவர்த்திப்பிக்கைக்காக, ப்ரவ்ருத்தமான ப்ரபந்தமாகையாலும், இதனுடைய “ நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:, சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேதகர்மண: ” “ தர்ம்யாத்தி யுத்தாச்ச்ரேயோந்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ” “ லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்த்துமர்ஹஸி ” என்று கர்மம் அவச்யகர்த்தவ்யமென்று சொல்லுகையாலும், “ அத சேத் த்வமிமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி, ததஸ் ஸ்வதர்மம் கீர்த்திஞ்ச ஹித்வா பாபமவாப்ஸ்யஸி ” “ ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபமவாப்ஸ்யஸி ” என்று கர்மாநநுஷ்டானத்தில் பாபிஷ்டனுமென்கையாலும், “ யே த்வேததப்யஸூயந்தோ நாநுதிஷ்டந்தி மே மதம், ஸர்வஜ்ஞாநவிமூடாம்ஸ்தாந் வித்தி நஷ்டாநசேதஸ: ” என்று தானுதரித்து உபதேசித்த கர்மத்தை ஸாதரமாக அநுஷ்டியானாகில் நஷ்டனுமென்றும், “ மோஹாத் தஸ்ய பரித்யாகஸ் தாமஸ: பரிகீர்த்தித: ” என்று, கர்மஸ்வரூபத்யாகத்தை தம:கார்யமாகச் சொல்லுகையாலும், “ ஸங்கம் த்யக்த்வா பலஞ்சைவ ஸ த்யாகஸ் ஸாத்விகோ மத: ” என்று பலஸங்காதித்யாகமே ஸாத்விகத்யாகமென்றும் விசேஷித்துச் சொல்லுகையாலும், “ ந ஹி தேஹப்ருதா சக்யம் த்யக்தும் கர்மாண்யசேஷத: ” “ நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே ” என்று, காணங்கள் குர்வத்ரூபங்களாகையாலே கர்மத்தை நேராகவிடவொண்ணாமையாலும், விடில் பஞ்சமஹாயஜ்ஞாதிகளையும் விடவேண்டிவருமாகையாலும், விட்டால் யஜ்ஞசிஷ்டாசியாகை தவிர்ந்து அகாசியாய், ஆஹாரசுத்தியால் வரும் ஸத்வசுத்தி குலையும்படியாய் விடுகையாலும், “ கர்த்தவ்யாநீதி மே பார்த்த நிச்சிதம் மதமுத்தமம் ” என்று கர்மாநுஷ்டானமே தனக்கு உத்தமமாகச் சொல்லுகையாலும், “ ஸ்திதோஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசநம் தவ ” என்று, ச்லோகம் கேட்டவனந்தரத்திலே, “ நீ திருவுள்ளமானபடியே கர்மாநுஷ்டானம் பண்ணக்கடவேன் ” என்று அர்ஜுநன் ப்ரதிவசனம் பண்ணுகையாலும், அந்த வசனாநுகூலமாக பாரதயுத்தம் ப்ரவ்ருத்தமாகையாலும், “ மாமேவ யே ப்ரபத்யந்தே ” “ தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே ” “ தமேவ சரணம் கச்ச ” என்று அங்கதயா விஹிதமான ப்ரபத்தியை ப்ராதான்யமாக விதிக்கக்கூடாமையாலும், துஷ்கரமான ஸாதனங்களாலே ஸாத்யமான அர்த்தத்தை ஒரு ப்ரபத்திமாத்ரம் ஸாதிக்கை அநுபபன்னமாகையாலும், இந் ஸாதநாந்தர துஷ்கரத்வாதிகளாலே சோகாவேசம் பிறந்தமை ச்ருதமல்லாமையாலும், “ து:க்கமித்யேவ யத் கர்ம காயக்லேசபயாத் த்யஜேத், ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ” என்று கர்மத்தினுடைய துஷ்கரத்வாதிகளாலே அத்தை விடில், த்யாகபலஸித்தியில்லையென்று சொல்லுகையாலும், விஹிதார்த்தாநுஷ்டானம் ஸ்வரூபஹாநியாகில், விதிநிஷேதரூபமான சாஸ்த்ரங்களைக் குடநீர்வழியவேண்டுகையாலும், “ சரணம் வ்ரஜ ” என்கிற விதிக்கு வையர்த்யம் பிறக்கையாலும், ஏகபதத்துக்கு தேவதாந்தரவ்யாவ்ருத்த்யர்த்தம் ஸித்திக்கையாலும், இங்குச் சொல்லுகிற த்யாகம் கர்மஸ்வரூபத்யாகமாகமாட்டாது.

"ஆகையாலே, ஸூக்ஷ்மமான ஸாதனங்களில் பலஸங்காதிகளையும் ஸ்வதந்த்ரஸாதனத்வப்ரதிபத்தியையும் விட்டு, தத்ஸாதனஸமாராத்யனை என்னையே பலப்ரஸாதகனாக புத்திபண்ணு; அத்தாலே ப்ரீதனான நான் அந்த கர்மவிசேஷங்களையும், ப்ரதிபத்திவிசேஷத்தையும் உடைய உன்னை மத்ப்ராப்திப்ரதிபந்தகமான ஸகலபாபங்களினின்றும் விமுக்தனாக்கக் கடவேன். இப்படி உன் ஸகலவிரோதிகளும் நான் போக்கும்படி எனக்கு ப்ரஸாதனமான கர்மயோகத்தில் கர்த்தவ்யாகர்த்தவ்யபுத்தியால் சோகிக்கக்கடவையல்லை" என்று, இது சரமச்லோகமாகையாலே கீழே சாஸ்த்ரத்தால் உக்தமான அர்த்தத்தையடைய நிகமித்துத் தலைக்கட்டுகிறதென்று சிலர் சொன்னார்கள்.

இங்குச் சொல்லுகிற த்யாகம் கர்மஸ்வரூபத்யாகமாகக் கொள்ளாமையாலே, உபக்ரமத்தோடும், அவனுடைய உக்த்யநுஷ்டானத்தோடும் விரோதமில்லை. "அவச்யம் கர்த்தவ்யம்" "பண்ணாவிடில் பாபம் வரும்" என்கிற ஹேதுத்வயமும் "ஆத்மாவலோகனத்துக்கு உறுப்பாகக் கர்மத்தை அநுஷ்டித்தில்லையாகிலும், ஸ்வவர்ணாஸ்ரமோசிததர்மமாகையாலே உனக்கு "ஸ்வதர்மமபி சாவேக்ஷ்ய" என்கிறபடியே "அவச்யம் கர்த்தவ்யம்; பண்ணயாகில் அகரணே ப்ரத்யவாயம் வரும்" என்கிறதிலே அந்யபரமாகையாலே பரிஹ்ருதம். "கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண:" என்கிற இதுவும், ஜ்ஞாநயோகத்திற்காட்டில் கர்மயோகப்ரசம்ஸாபரமாகையாலே பரிஹ்ருதம். தன் பக்கலிலே கர்த்ருத்வத்தை ஏறிட்டு அநுஷ்டிக்கச் சொன்னதிலே அஸூயை பண்ணுவாருண்டாகில் நஷ்டராவரென்கையாலே அஸூயாநிபந்தனமான நாசத்தைச் சொல்லுகிறதித்தனை போக்கி அநநுஷ்டானநிபந்தனமான நாசத்தையன்று சொல்லுகிறது; அநநுஷ்டானநிபந்தனமாகில் "தஸ்ய கார்யம் ந வித்யதே" என்று கர்மயோகத்தில் நிரபேக்ஷனாய் அத்தை விட்ட ஜ்ஞாநயோகாதிகாரிக்கும் நாசம் வருகையாலே பரிஹ்ருதம். இந்த ந்யாயத்தாலே "கர்மஸ்வரூபத்யாகம் தாமஸம்" என்கிறவிடமும், "மோஹாத் தஸ்ய பரித்யாக:" என்று மோஹம் ஹேதுவாக விடில் என்று விசேஷிக்கையாலே, நாஸ்திக்யநிபந்தனமான த்யாகத்தை தாமஸமென்கிறது. "பலஸங்காதித்யாகபூர்வகமாக அநுஷ்டிக்கை ஸாத்விகம்" என்று சொன்னதுவும் நாஸ்திகவ்யாவ்ருத்திபரம்; அங்ஙனன்றாகில் ஜ்ஞாநயோகநிஷ்டாதிகளுக்கும் ஸாத்விகத்வமின்றியிலே ஒழிய வேண்டுகையாலே. பகவத்ப்ரீணநகர்மத்தை நிச்சேஷமாக விடுகை பக்ஷமல்லாமையாலே, கரணங்கள் குர்வத்ரூபங்களாகையாலே வரும் விரோதமில்லை. "த்யாஜ்யம் தோஷவதித்யேகே" என்று ராகத்வேஷாதிகளோபாதி இந்த கர்மம் ஆத்மாவுக்கு பந்தகம் என்கிறவர்களை வ்யாவர்த்திக்கிறதாகையாலே, "கர்த்தவ்யாநி" என்கிறத்தோடும் விரோதியாது. "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே" என்று கர்மாங்கமான ஜ்ஞாநந்தன்னை கர்மத்துக்கு அங்கியாக விதித்தவோபாதி அங்காங்கிவிரோதமுமில்லை. "தப: கர்மாத்மகாநி வை, யாநி தேஷாமசேஷாணும் க்ருஷ்ணாநுஸ்மரணம் பரம்" என்று தப:கர்மாதிஸாத்யமான பாபநிவ்ருத்தி, க்ருஷ்ணாநுஸ்ம்ருதிமாத்ரத்தாலே பிறக்கும் என்றெழுதுகையாலே ப்ராபல்யதௌர்பல்யவிரோதமில்லை. ஸாதநமான கர்மத்தை துஷ்கரத்வாதிபயத்தாலே விட்டு, தத்ஸாத்யமான ஜ்ஞானத்தை ஆசைப்படில் அது கிட்டாது என்கையாலே, "நைவ த்யாகபலம் லபேத்" என்கிறத்தோடும் விரோதியாது. முமுக்ஷுவுக்கு பலார்த்தமாக விஹிதமான கர்மங்களினுடைய த்யாகம் ஸ்வாதிகாராநுரூபமாகையாலே ஸ்வரூபஹாநி

யல்லாதவோபாதி, இவனுக்கும் ஸ்வாதிகாரவ்யதிரிக்தவிஷயமான விதிநிஷேதங்கள் அநுஷ்டிக்கில் ஸ்வரூபஹாநியாகையாலும், ஸ்வாதிகாராநுரூபமான விதிநிஷேதசாஸ்த்ரத்தை அநுஷ்டிக்கையாலும், விதிநிஷேதசாஸ்த்ரவையர்த்யம் பிறக்கும் என்னவொண்ணாது. "மா சுசஸ் ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ" என்கிறவிடத்தில் "மாசுச:" என்று சோகநிவ்ருத்தியைப் பண்ணக்காண்கையாலே, "தேவாஸுரவிபாகச்ரவணத்தாலே சோகம் பிறந்ததாகாதே" என்று அநுமித்துக்கொண்டவோபாதி, இங்குமப்படியே அநுமிக்கலாயிருக்கையாலே சோகம் அப்ரஸ்துதமென்கிறவிதுவும் தூஷணமாகாது. இச்லோகந்தான் நிகமனமாகவும் மாட்டாது. தர்மசப்தம் தர்மகதமான ஸ்வாதந்த்ர்யத்தை வசிக்கமாட்டாமையாலும், ஸ்வபலமான பகவத்ப்ரீதியை ஸ்வதந்த்ரமாக ஸாதிக்கையாலும், கர்மத்துக்கங்கமாக இப்ரபத்திவிசேஷத்தைச் சொல்லி, "இப்ரபத்தியோடே கூட கர்மத்தை அநுஷ்டி" என்னவேண்டியிருக்க, இப்ரபத்தியை ஸ்வதந்த்ரமாக விதிக்கையாலும், "அஹம்ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச" என்று கீழே "எனக்கு ப்ரீதிஸாதனமாகக் கடவது இந்தக் கர்மாதிகள்; இதுக்கு பலப்ரஸாதகன் நான்" என்று உக்தமாகையாலும், ஏகபதத்துக்கு வ்யாவ்ருத்தி ஸித்தியாமையாலும், தேவதாந்தரவ்யாவ்ருத்தி "யாந்தி மத்யாஜிநோபி மாம்" "போக்தாரம் யஜ்ஞதபஸாம் ஸர்வலோகமஹேச்வரம்" "யேப்யந்யதேவதாபக்தா: தேபி மாமேவ கௌந்தேய யஜந்தி" என்று ஏவமாதிகளாலே கீழே ஸாதிக்கையாலும், "நாநுசோசிதுமர்ஹஸி" "நைவம் சோசிதுமர்ஹஸி" "ந த்வம் சோசிதுமர்ஹஸி" என்று கீழே சோகிக்கக்கடவையல்லையென்று சொல்லுகையாலும், "யத் த்வயோக்தம் வசஸ் தேந மோஹோயம் விகதோ மம" என்று "அத்யாத்மவிஷயமாக நீ திருவுள்ளமான வார்த்தைகளாலே என்னுடைய மோஹம் போயிற்று" என்று அவன் சொல்லுகையாலும், நிகமனத்தில் ப்ரயோஜநமில்லாமையாலும், அதுவும் அர்த்தமன்று.

ஆகையாலே, "தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ" என்று, கர்மம் உனக்கு அநுஷ்டேயமென்று சில ஹேதுக்களாலே சொல்லச் செய்தேயும் கர்மத்திலே கோரப்ரதிபத்தி பிறக்கையாலும், "சஞ்சலம் ஹி மந: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம், தஸ்யாஹம் நிக்ரஹம் மந்யே வாயோரிவ ஸுதுஷ்கரம்" என்று மநநபரிகரமான மனஸ்ஸை மீட்கவொண்ணாதென்று பயப்படுகையாலும், "அப்ராப்ய யோகஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி, கச்சிந் நோபயவிப்ரஷ்டச் சிந்நாப்ரமிவ நச்யதி" என்று யோகப்ரஷ்டனானவன் மேகசகலம் போல் இவன் நசிக்குமோவென்று பயப்படுகையாலும், இவ்வோ இவ்வோ முகங்களாலே "பஹூநாம் ஜந்மநாமந்தே ஜ்ஞாநவாந் மாம் ப்ரபத்யதே" என்கிறபடியே அநேகஜந்மஸாத்யமான ஸாதநாந்தரங்களினுடைய துஷ்கரத்வாதிநிபந்தனமான பயம் அநுவர்த்திக்கையாலும், "யததோ ஹ்யபி கௌந்தேய புருஷஸ்ய விபச்சித:, இந்த்ரியாணி ப்ரமாதீநி ஹரந்தி ப்ரஸபம் மந:" என்று இந்த்ரியஜயத்தைப் பண்ணவேணுமென்று யத்னம் பண்ணாநின்றாலும், இந்த்ரியங்கள் விஷயங்களிலே வலிய இவனை இழுக்குமென்பது, "தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா" என்று எனக்கு லீலோபகரணபூதையான இந்த ப்ரக்ருதி, ஸ்வயத்னத்தால் கடக்கவொண்ணாதென்பது, "ஈச்வரஸ் ஸர்வபூதாநாம் ஹ்ருத்தேசேர்ஜுந திஷ்டதி, ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடாநி மாயயா" என்று ஈச்வராதீனங்காண் ஜகத்து; தன்னால் செய்யலாவதில்லைகாணென்பது, "மத்தஸ் ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநஞ்ச"

என்று "ஜ்ஞாநாபோஹநாதிகளும் என்னாலே காண்; ஆகையாலே சேதநவ்யாபாரைகஸாத்யமாய் இருப்பதொன்று இல்லைகாண்" என்பது, தத்தத்பரிஹாரமாக "தாநி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்பர:" "மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே" "தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே" "தமேவ சரணம் கச்ச ஸர்வபாவேந பாரத" என்று தன் திருவடிகளில் பண்ணும் ப்ரபத்தியை விதிப்பதாய்ப் போருகையாலே ப்ரபத்திவைலக்ஷண்யஜ்ஞாநம் பிறக்கையாலும், ஸுகரமான இது கிடக்க, துஷ்கரத்வாதிதோஷபஹுளமான ஸாத்ய தர்மங்களிலே அந்வயிப்பியாநின்றால், "அவையோ என்னால் அநுஷ்டித்துத் தலைக்கட்டலாம்படியாயிருக்கிறதில்லை" என்று இவன் சோகாவிஷ்டனாக, இப்படி உக்தமான ஸாதநங்களிலே சோகம் பிறக்கும்படி பக்வனான பின்பு, "மோக்ஷஸாதநதயா மயோக்தமான ஸாதநங்களை ஸாங்கமாகவும் ஸவாஸநமாகவும் விட்டு, அவற்றுக்கும் என்னைக்கொண்டு கார்யம் கொள்ளவேண்டும்படியுமாய், ஸ்வயம் நிரபேக்ஷனாய், நிருபாதிகவாத்ஸல்யாதிகுணவிசிஷ்டனான என்னையே அவ்வோ ஸாதநஸாத்யமான அநிஷ்டநிவ்ருத்திக்கும் இஷ்டப்ராப்திக்கும் உபாயமாக த்ருடாத்யவஸாயத்தைப் பண்ணுமிதுவே உனக்குச் செய்யவேண்டுவது; பின்பு த்வத்ஸ்வீக்ருதனாய் த்வதபிமதஸாதநயோக்யனும்படி ஜ்ஞாநசக்த்யாதிகுணபூர்ணனான நான், என் கையிலே ந்யஸ்தபாரனான உன்னை மத்ப்ராப்திவிரோதிகளான ஸகலபாபங்களும் தானே விட்டுப்போம்படி பண்ணக்கடவேன்; ஆனபின்பு உக்தமான ஸாதநதுஷ்கரத்வாதிகளாலே சோகிக்கக்கடவையல்லை" என்கிற இவ்வர்த்தமே சரமச்லோகத்துக்கு சரிதமான அர்த்தமாகக்கடவது.

அவதாரிகை முற்றிற்று.



வியாக்யானம்:— (ஸர்வதர்மாநித்யாதி) ஸ்வீகாராங்கமான த்யாகத்தைச் சொல்லக்கடவதாய்க் கொண்டு, த்யாஜ்யாம்சத்தை உபாதானம் பண்ணுகிறது. இதில் தர்மசப்தம், ஸாமாந்யேந பலஸாதனமான உபாயத்தைச் சொல்லுகிறது; அங்ஙனன்றியிலே, தர்மசப்தம் "தர்மேண பாபமபநுததி" என்கிறவிடத்தில் தர்மசப்தம் போலே க்ரியாமாத்ரவாசியாமன்று, ஜ்ஞாநயோகாதிகளுக்கு தர்மத்வமின்றியிலே ஒழியும்; இனி, "சோதநாலக்ஷணோர்த்தோ தர்ம:" என்கிறபடியே ஸ்வஸாத்யதயா விஹிதமான கர்மஜ்ஞாநாதிமாத்ரவாசியாமன்று, "க்ருஷ்ணம் தர்மம் ஸநாதநம்" என்கிற ஸித்ததர்மத்திலே ஏறப்பெறாது; ஆகையாலே இத்தர்மசப்தம், யாதொன்று சாஸ்த்ரீயமாய் பலஸாதனமாயிருக்கிறது, அத்தை வசிக்கக்கடவது. ஆக, பலஸாதனதர்மந்தான், 'தர்ம', 'பரதர்ம', 'பரமதர்ம' என்கிற பேதத்தாலே மூன்று வகைப்பட்டிருக்கும்; இதில் அதர்மவ்யாவ்ருத்தமான ஸ்வர்க்காதிக்ஷுத்ரபுருஷார்த்த ஸாதனம் தர்மமாகிறது. பரதர்மமாகிறது:— விமோசகமாகையாலே, பந்தகமான இதிற்காட்டில் விலக்ஷணமான பரமபுருஷார்த்தலக்ஷணமோக்ஷஸாதனம். பரமதர்மமாகிறது:— தர்மம் போலே க்ஷுத்ரபுருஷார்த்தத்தையே ஸாதித்தல், பரதர்மம் போலே சேதநஸாத்யமாதலாகையன்றிக்கே ஸித்தமாகையாலும், பரமப்ரயோஜநஸாதநமாகையாலும், தனக்கவ்வருகில்லாத பகவத்விஷயம். இந்த தர்மசப்தத்துக்கு இவை மூன்றும் அர்த்தமேயாகிலும், இப்போது பரதர்மத்திலே நோக்காகக்கடவது. இங்ஙன் ஒதுக்கித் தருவாரரென்னில்: அடியிலே முமுக்ஷுவானபோதே க்ஷுத்ரபலஸாதநமான தர்மம் கழிகையாலும், பரமதர்மத்தை

கோபலீவர்த்தந்யாயத்தாலே மேலே ஸ்வீகார்யமாக விசேஷிக்கையாலும், த்யாஜ்யதயா பரதர்மத்தையே உபாதானம் பண்ணுகிறது. அங்ஙனன்றியிலே பரதர்மத்துக்கு அங்கதயா அந்விதமான பரமதர்மமும் த்யாஜ்யமாகையாலே அத்தையுங்கூட உபாதானம் பண்ணுகிறதென்னவுமாம்.

(தர்மாந்) என்கிற பஹுவசனத்தாலே ஸ்வஸாத்யத்தை ஸாதித்துத் தருமிடத்தில், பரஸ்பரஸாபேக்ஷமான ஸாதனஸமூஹத்தையும், தத்தத்ஸாதாரணமான அங்கவிசேஷங்களையும் சொல்லுகிறது. அவையாவன:— "கர்மணைவ ஹி ஸம்ஸித்திமாஸ்திதா ஜநகாதய:" என்று ஸ்வதந்த்ரஸாதனமாக உக்தமான கர்மமும், "ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞாநே பரிஸமாப்யதே" "ந ஹி ஜ்ஞாநேந ஸத்ருசம் பவித்ரமிஹ வித்யதே, ஜ்ஞாநாக்நிஸ் ஸர்வகர்மாணி பஸ்மஸாத் குருதே ததா" என்று கர்மஸாத்யமான ஜ்ஞாநமும், "உபாப்யாமேவ பக்ஷாப்யா-மாகாசே பக்ஷிணாம் கதி:, ததைவ ஜ்ஞாநகர்மாப்யாம் ப்ராப்யதே புருஷோத்தம:" என்று "ஒரு பக்ஷி தன் பக்ஷத்வயங்களாலும் ஆகாசத்தேறப் பறக்குமோபாதி, ஸ்வஸாதிதமான கர்ம ஜ்ஞானங்களாலே பரமாகாசநிலயமான வஸ்துவைச் சென்று ப்ராபிக்கும்" என்று, பகவத்ப்ராப்திஸாதனமாகச் சொல்லப்பட்ட கர்மஜ்ஞாநஸமுச்சயமும், "பக்த்யா த்வநந்யயா சக்ய:," "ஸ்வதர்மஜ்ஞாநவைராக்யஸாத்யபக்த்யேககோசர:" என்கிறபடியே, கர்மஜ்ஞாநஸஹக்ருதையாய், பகவத்ப்ராப்திஸாதனமான பக்தியும், "ஜந்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்வத:, த்யக்த்வா தேஹம் புநர் ஜந்ம நைதி மாமேதி ஸோர்ஜுந" என்று, விரோதிநிவ்ருத்தி பூர்வகமாக பகவத்ப்ராப்திஸாதனமான அவதாரரஹஸ்யஜ்ஞாநமும், "ஏதத் புத்வா புத்திமாந் ஸ்யாத் க்ருதக்ருத்யச்ச பாரத" என்று அபிமதபலலாபத்தாலே க்ருதக்ருத்யனாக்குமென்கிற புருஷோத்தமவித்யையும், "தேசோயம் ஸர்வகாமதுக்" என்று, ஸர்வகாமபலப்ரதமாகச் சொல்லுகிற புண்யக்ஷேத்ரவாஸமும், "ஸர்வபாபவிசுத்தாத்மா யாதி ப்ரஹ்ம ஸநாதநம்" என்று, ஸர்வபாபவிமோசனபூர்வகமாக பகவத்ப்ராப்தியை பலமாகச் சொல்லுகிற திருநாம ஸங்கீர்த்தனம் தொடக்கமாய், வர்ணபேதத்தாலும், ஆச்ரமபேதத்தாலும், பாகபேதத்தாலும், ருசிபேதத்தாலும் வந்த அதிகாரிபேதத்தாலும் அத்யந்தபின்னமாய், ஆத்மபேதத்தோபாதி அஸங்க்யாதமான உபாயவிசேஷங்கள். ஆக, "தர்மாந்" என்கிற பஹுவசனத்தாலே பகவத்வ்யதிரிக்தஸகலஸாத்யதர்மங்களையும் சொல்லிற்றாயிற்று.

ஆக, பஹுவசனத்தாலே மோக்ஷஸாதநதயா ப்ரதானமான தர்மங்களை எடுக்கையாலே, தர்மவிசேஷணமான ஸர்வசப்தம் த்ரைவர்ணிகஸாதாரணமாய், "ஸந்த்யாஹீநோ-சுசிர் நித்யமநர்ஹஸ் ஸர்வகர்மஸு." "தேத்வகம் புஞ்ஜதே பாபா யே பசந்த்யாத்மகாரணாத்" என்று யோக்யதாபாதகமான ஸந்த்யாவந்தனபஞ்சமஹாயஜ்ஞாதிகளைச் சொல்லுகிறது. ப்ரதானமான கர்மாதிகளைச் சொன்னபோதே, இவற்றுக்கு யோக்யதாபாதகமான அவையும், "ஸாத்யாபாவே மஹாபாஹோ ஸாதநை: கிம் ப்ரயோஜநம்" என்று ப்ரயோஜநாபாவத்தாலே தன்னடையே கழியும்படியாயிருக்க, த்யாஜ்யதயா ப்ருதங்நிர்தேசம் பண்ணுகைக்கு ஹேது வென்னென்னில்: "ஸர்வகர்மபலத்யாகீ" என்று ஒரு கர்மத்துக்கும் அர்ஹனல்லன் என்கையாலே, மேல் வக்ஷ்யமாணமான ஸ்வீகாராநுஷ்டானத்துக்கும் யோக்யதாபாதகமான இவை அபேக்ஷிதமாகாதோ? என்று உதிக்கிற சங்கையை வ்யாவர்த்திக்கைக்காக, ப்ருதங்நிர்தேசம் பண்ணுகிறது. அந்த ஸ்வீகாரத்துக்கு சைதந்யமாத்ரமேயிறே அபேக்ஷிதம்.

அங்ஙனன்றியிலே, யோக்யதாபாதகமான இந்த ஸந்த்யாவந்தனாதிகள் அபேக்ஷித மாகில், இந்த ஸந்த்யாவந்தனாதிகள்தன்னையும் அநுஷ்டேயதயா ஸ்வீகரிக்கக் கூடாதே; அந்த ஸந்த்யாவந்தனாதிஸ்வீகாரத்திலே இழிகைக்கு யோக்யதாபாதகமான ஸந்த்யாவந்தனம் வேண்டுகையாலே. அவை அநபேக்ஷிதமாகையிறே, “ துராசாரோபி ஸர்வாசீ க்ருதக்நோ நாஸ்திக: புரா, ஸமாச்ரயேதாதிதேவம் ச்ரத்தயா சரணம் யதி, நிர்த்தோஷம் வித்தி தம் ஜந்தும் ப்ரபாவாத் பரமாத்மந: ” என்று ஸர்வாதிகாரிகளுக்கும் ஆச்ரயணத்திலே அதிகாரமுண்டென்கிறது. அதுக்குமேலே அநுஷ்டிக்கப்புகுகிற ஸ்வீகாரம் அதிக்ருதாதிகாரமுமாம். ஆக, அநுஷ்டிக் கப்புகுகிற ஸ்வீகாரத்துக்கு ஸந்த்யாவந்தனம் அநபேக்ஷிதமென்கைக்காக ப்ருதங்நிர்த்தேசம் பண்ணிற்று.

ஸாதநாந்தரங்களடைய த்யாஜ்யமாயறுமாகில், “ சாந்தோ தாந்த உபரதஸ் திதிக்ஷுஸ் ஸமாஹிதோ பூத்வா ஆத்மந்யேவாத்மாநம் பச்யேத் ” என்று ஸாதநாந்தரங்களுக்கும் அங்கமாக எழுதப்படுகிற சமதமாத்யாத்மகுணங்களும், ஸந்த்யாவந்தனாதிகளோபாதி த்யாஜ்யதயா ஸர்வசப்தத்திலே உபாத்தமானுலோவென்னில்: அவை ஆத்மகுணமாய், இவ்வதிகாரிக்கு ஸம்பாவிதஸ்வபாவங்களாய் வருமவையாகையாலே, த்யாஜ்யகோடியிலே புகாது; ப்ராப்ய கோடியிலே புகுமித்தனை. குணபூதமான இதுவும் த்யாஜ்யகோடியிலே புகுமாகில், ஆத்மகுணபூதமான சேஷசேஷிபாவஜ்ஞாநாதிகளும் த்யாஜ்யமாகவேண்டிவரும்.

இந்த ஸர்வசப்தந்தன்னிலே “ லோகஸங்க்ரஹமேவாபி ஸம்பச்யந் கர்த்துமர்ஹஸி ” என்று லோகஸங்க்ரஹார்த்தமாகக் கர்த்தவ்யமான கர்மங்களும், புத்ரார்த்தமாகப் பண்ணும் பும்ஸவநாதிவ்யாபாரங்களும் த்யாஜ்யதயா அநுஸந்தேயம். என்றியமென்னில்: “ தஸ்ய கார்யம் ந வித்யதே ” என்கிறபடியே கர்மயோகபலமான ஜ்ஞாநயோகத்தைப்பெற்று, பின்பு, தத்ஸாதநமான கர்மயோகத்தில் நிரபேக்ஷனாயிருப்பானொருவன், நைரபேக்ஷ்யத்தாலே அந்தக் கர்மத்தை அநுஷ்டியாதொழியில், ஜ்ஞாநயோகத்தில் இழிகைக்கு வேணும் பாகமின்றியிலே இருப்பானொருவனும், “ யத் யதாசரதி ச்ரேஷ்டஸ் தத் ததேவேதரே ஜநா: , ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் ததநுவர்த்ததே ” என்கிற ந்யாயத்தாலே, “ விலக்ஷணனான அவனுடைய ஆசாரமிறே நமக்கும் ஆசாரமாயறுவது ” என்று இவனுடைய ஆசாரத்தைக் கணிசித்து, இவனோபாதி கர்மாநுஷ்டானத்தில் நின்றும் நிவ்ருத்தனாம். ஜ்ஞாநயோகத்துக்கு அநதிகாரி யாய் வைத்து கர்மயோகத்தை விட்டவனாகையாலே இவன் நின்ற படியிலே ஏறமாட்டான்; அதிலே மூட்டும் கர்மயோகத்தை விட்டான்; ஆக, இரண்டுக்கும் ஆளன்றியிலே உபயப்ரஷ்டனாய் விநாசத்தோடே தலைக்கட்டிவிடும். அவனுடைய நாசத்துக்கு ஹேது, இந்த ஜ்ஞாநாதிகாரியினுடைய கர்மாநநுஷ்டானமாகையாலே, தந்நாசஜநிதமான பாபம், இவனை வந்து பற்றி இவனுடைய ஜ்ஞாநயோகத்துக்கு ப்ரதிபந்தகமாம்; அது செய்யாமைக் காகவிறே, லோகஸங்க்ரஹார்த்தாதிப்ரவ்ருத்தியில் இழிகிறது. ஸித்தமான ஸாதனத்தைப் பற்றினவனுக்கு அந்த பயமில்லாமையாலும், இவ்வதிகாரி நிற்கிற நிலை ஜ்ஞாநயோகத்தைப் போலே அநநுஷ்டானமில்லாமையாலும் த்யாஜ்யமாகக் கடவது; இனி ஆந்ருசம்ஸ்யமே இவற்றினுடைய அநுஷ்டானத்துக்கு ஹேதுவாகக்கடவது. ஆக, இப்படி “ ஸர்வதர்மாந் ” என்று ஸாத்யமான ஸகலஸாதனங்களையும் உபாதானம் பண்ணிற்று.

அனந்தரம் "பரித்யஜ்ய" என்று அதினுடைய த்யாகப்ரகாரத்தைச் சொல்லுகிறது. இங்கு த்யாகசப்தத்தாலே சொல்லுகிறது, தர்மஸ்வரூபத்யாகத்தையோ? தர்மபலாதி த்யாகத்தையோ? தர்மத்தில் உபாயத்வபுத்தித்யாகத்தையோ? என்னில்: இவ்வதிகாரிக்கு, யாவச்சரீரபாதம் காலக்ஷேபத்துக்காக பகவத்தோஷஹேதுபூதமானவை அநுஷ்டேயமாகை யாலே, தர்மஸ்வரூபத்யாகமாகமாட்டாது. பலாதிகள், ஸாதகனுக்குங்கூட த்யாஜ்யமாகக் கீழே உக்தமாகையாலே, பலாதித்யாகத்தைச் சொல்லுகிறதாகவொண்ணாது. ஆக, இங்கு தர்மங்களினுடைய உபாயத்வபுத்தித்யாகத்தைச் சொல்லுகிறது. அந்த உபாயத்வபுத்தி த்யாகமாவது:— ஸாபேக்ஷஹேதுவான பகவத்ப்ரீதிக்கு ஸாதனமென்கிற ப்ரதிபத்தியைத்தவிருகை. ஆகையாலே ஸ்வரூபத்யாகத்தால் வரும் குறையும், பலாதித்யாகத்தைச் சொல்லுகிற தென்கிறத்தால் வரும் புநருக்தியுமின்றியிலே ஒழியும்.

உபாயத்வபுத்தித்யாகபூர்வகமாக போகபுத்யா இவ்வதிகாரிக்கு அநுஷ்டேயமான இத்தர்மம், பலாபிஸந்திஸம்யுக்தமான ஜ்யோதிஷ்டோமாதிகளோ ஜ்ஞாநாந்தர்க்கதமானல், "தூரேண ஹ்யவரம் கர்ம புத்தியோகாத் தநஞ்சய" என்கிறபடியே கர்மாந்தரமாகிறவோபாதி, அந்த மோக்ஷஸாதநகர்மந்தானேயாகிலும், புத்திவிசேஷத்தாலே கர்மாந்தரமாகக்கடவது. ஆக, அநுபாயத்வபுத்தியுக்தமான இந்ததர்மத்திற்காட்டில், உபாயத்வபுத்தியுக்தமான அந்த மோக்ஷஸாதநமான தர்மம் தர்மாந்தரமாகையாலே, தர்மஸ்வரூபத்யாகத்தைச் சொல்லுகிற தென்னவுமாம்.

அவன் உபாயத்வபுத்யா அநுஷ்டிக்கும்; இவன் போகபுத்யா அநுஷ்டிக்கும். அவன் விதிப்ரேரிதனாய் அநுஷ்டிக்கும்; இவன் ராகப்ரேரிதனாய் அநுஷ்டிக்கும். அவனுக்கு வர்ணாச்ரமதர்மம் நியமேந அநுஷ்டிக்கவேணும்; இவனுக்கு வர்ணாச்ரமதர்மாநுஷ்டான மாகவுமாம்; வைஷ்ணவகிஞ்சித்காரமாகவுமாம்; ப்ராதிகூல்யநிவ்ருத்தியிலே நியமம். ஆநுகூல் யங்களில் ஏதேனுமாம். ஆகையிறே நம்மாசார்யர்கள் இவற்றை அநுஷ்டிப்பாரும் அநுஷ்டியாதாருமாய்ப் போருகிறது. அந்த நியமமில்லாமையிறே ஸாதகனை அக்ரூரன் ஸாத்யவஸ்து ஸந்நிஹிதமாயிருக்கச்செய்தேயும், தன்னுடைய க்ருத்யத்திலே அந்வயித்தது. ஆகையிறே, "ஆநுகூல்யஸ்ய ஸங்கல்ப: ப்ராதிகூல்யஸ்ய வர்ஜநம்" என்று ஆநுகூல்ய ஸங்கல்பத்தோபாதி, ப்ராதிகூல்யநிவ்ருத்தியையும் ஸம்பாவிதஸ்வபாவமாகச் சொல்லுகிறது. ஆக, காம்யகர்மத்தோபாதி மோக்ஷஸாதநதர்மமும், இவனுக்கு த்யாஜ்யமாகையாலே, ஸாங்கமான அந்த தர்மத்யாகத்தை த்யாகசப்தத்தாலே சொல்லிற்றாயிற்று.

த்யாகவிசேஷணமான "பரி" சப்தம் "பரி-ஸாகல்யே" என்கிறபடியே ஸாகல்ய வாசியாய்க் கிடக்கிறது. கீழே "ஸர்வதர்மாந்" என்று, த்யாஜ்யதர்மங்களுடைய எடுத்து த்யாகத்தைச் சொல்லுகையாலே, இஸ்ஸாகல்யசப்தத்துக்கு "ஸகலதர்மங்களையும் விட்டு" என்கிறவிது அர்த்தமாகவொண்ணாது. ஆகையாலே கீழ் த்யாஜ்யதயா உபாதானம் பண்ணப் படாதே, அவச்யம் த்யாஜ்யமாயிருப்பதொன்று இதுக்கர்த்தமாகவேணும்.

அதில் "ந ஹிம்ஸ்யாத் ஸர்வா பூதாநி" "ந ஸுராம் பிபேத்" "ந களஞ்ஜம் பக்ஷயேத்" என்றாப்போலே சொல்லுகிற நிஷேதவிதிகள் கீழ் த்யாஜ்யமாக எடாமையாலும், அந்த நிஷேதவிதியை அநுஷ்டிக்கில் தன்னுடைய பாபவிமோசனத்துக்குத் தான்

ப்ரவர்த்தித்தானென்கிற ஸ்வரூபஹாநி வருகையாலே, அவச்யம் இவ்வதிகாரிக்கு த்யாஜ்யமாகையாலும், அது ஸாகல்யசப்தத்துக்கு அர்த்தமாளுலோவென்னில்: அதுவும் அர்த்தமாகமாட்டாது. நிஷேதவிதித்யாகமாகிறது, நிஷித்தாநுஷ்டானமாகையாலே, நிஷித்தாநுஷ்டானபலமான பாபம், ஈச்வரனுடைய நிக்ரஹமாகையாலே, அந்த நிக்ரஹம் இந்த அதிகாரிக்கு அபுருஷார்த்தமாகையாலே அது அர்த்தமன்று. நிக்ரஹஹேதுவானவை த்யாஜ்யமன்றாகில், பகவதபசாரபாகவதாபசாராதிகளும் த்யாஜ்யமன்றியிலே ஒழியும். பூர்வார்ஜிதபாபவிமோசனத்துக்கு யத்னம் பண்ணினுகில், ஸ்வரூபஹாநியாமோபாதி, ஜ்ஞானம் பிறந்தபின்பு நிக்ரஹஹேதுக்களிலே இழிகையும் ஸ்வரூபஹாநியாகக்கடவது. இந்த நிஷித்தாநுஷ்டானந்தான் பகவந்நிக்ரஹஹேதுவாகையாலே, இவ்வதிகாரிக்கு ஸ்வரூபமல்லாமையாலும், பற்றுகிற ஸாதனத்துக்கு ஸஹகாரியல்லாமையாலும், அந்த தர்மங்களைபாதி த்யாஜ்யமாகக்கடவது.

ஆகையாலே, ஸாகல்யசப்தவாச்யம் வாஸனையாய், ஸவாஸநத்யாகத்தைச்சொல்லுகிறது. அதாகிறது:— லஜ்ஜாபுரஸ்ஸரத்யாகம். ஸ்வரக்ஷணார்த்தையான ஸ்வப்ரவ்ருத்தி ஸ்வரூபஹாநியென்றறிந்தால், "நெடுநாள் ஸ்வரூபஹாநியானவற்றையாகாமே உபாயமாக நினைத்திருந்தது!" என்று லஜ்ஜை பிறக்கக்கடவதிறே. பர்த்ருபோகத்தை உதரபோஷணத்துக்கு உறுப்பாக்குகையாகிறது, பதிவ்ரதைக்கு ஸ்வரூபஹாநியாமாப்போலேயிறே, போகரூபமான ப்ரவ்ருத்தியை ஸாதனமாக்குகையாகிறது.

"த்யஜ்ய" என்கிற "ல்யப்" பாலே, தர்மத்யாகம் ஸ்வீகாரத்துக்கு அங்கமானவன்று கர்த்தவ்யம்; அல்லாதபோது அயுக்தமென்னுமிடத்தைக் காட்டுகிறது. தர்மத்தை விட்டு ஸ்வீகாரத்தில் இழியாதேயிருக்குமாகில், உபயப்ரஷ்டனுகையாலே நாசமே பலமாயறுமே. இத்தைப்பற்றவிறே நஞ்சீயர், "ஒன்றில் நாஸ்திகர்களுக்கு மூர்த்தாபிஷிக்தனுதல்; இல்லையாகில் பரமபதம் என் கிற முறிப்படியே செல்லுதல் செய்யும்படியிறே நான் நிற்கிற நிலை" என்றருளிச்செய்தது. அதாகிறது:— தர்மத்யாகபலமான பாபம் மேலிட்டு நரகம் வஸ்தவ்யபூமியாதல்; த்யாகபூர்வகமாக ஸ்வீக்ருதமான உபாயம் பலித்து, பரமபதம் வஸ்தவ்யபூமியாதலாயித்தனையிறே என்கை. ஆக, "ல்யப்" பாலே மேல் சொல்லப்புகுகிற ஸ்வீகாரம் த்யாகாங்ககமென்னுமிடம் சொல்லிற்றாயிற்று.

ஸ்வஸ்வரூபத்தைப்பார்த்தாலும், ஸாதனாந்தரங்களை விடவேண்டிவரும். அவற்றினுடைய ஸ்வரூபங்களைப்பார்த்தாலும், ஸாதனாந்தரங்கள் த்யாஜ்யமாயறும். பற்றப்புகுகிற உபாயஸ்வரூபத்தைப்பார்த்தாலும் ஸாதனாந்தரங்கள் த்யாஜ்யமாயறும். ஸ்வஸ்வரூபத்தைப் பார்த்தால் நமச்சப்தத்தில் சொல்லுகிறபடியே ஸ்வரக்ஷணவ்யாபாரத்திலே இழிகை, ஸ்வரூபஹாநியாம்படி அத்யந்தபாரதந்த்ரமாயிருக்கும். அவைதன்னைப் பார்த்தால், பஹுயத்னஸாத்யமாகையால் துஷ்கரமுமாய், "ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபோஜ்ஞாநஸமாதிபி:" என்று சிரகாலஸாத்யமுமாய், இந்த்ரியஜயாதிகள் அபேக்ஷிதமாகையாலும், ஆநிபாதாதிகள் ப்ரஷ்டராகக்காண்கையாலும் ஸாபாயமுமாய் ப்ராரப்தகர்மாவஸாநாபேக்ஷமாகையாலே, விலம்ப்ய பலப்ரதமுமாயிருக்கும். உபாயத்தைப்பார்த்தால், நித்யாநபாயிநியான பிராட்டியும் ஸஹகாரியாக ஸஹியாதபடி சணற்கயிறுகண்ட ப்ரஹ்மாஸ்த்ரம் போலே

நிரபேக்ஷமாயிருக்கும். ஆக, தான் அநந்யஸாதநனாகையாலும், அவை துஷ்கரத்வாதி தோஷதூஷிதமாகையாலும், உபாயம் ஸஹகாரிநிரபேக்ஷமாகையாலும் தர்மத்யாகம், உபாயஸ்வீகாரத்துக்கு அங்கமாகக்கடவது.

அனந்தரம், த்யாகாங்ககமான ஸ்வீகாரத்தைச் சொல்லக்கடவதாகக்கொண்டு, தத்ப்ரதிஸம்பந்தியை "மாம்" என்று உபாதானம் பண்ணுகிறது. (மாம்) உனக்கு ஸாரதியாயிருக்கிற என்னை. இந்நிலையிலே ஆச்ரயணத்துக்கு ஏகாந்தமான ஸௌசீல்ய ஸௌலப்யவாத்ஸல்யஸ்வாமித்வங்களும் விலக்ஷணவிக்ரஹயோகமும் தோற்றுகிறது. "அவாப்ய-காதர:" என்கிறபடியே, தன்னுடைய குணசீகரங்களில் ஸூரிஸங்கங்களைக் குமிழிநீருட்டி, தான் நிஸ்தரங்கஜலதி போலே ஸ்வாநுபவானந்தவைபவத்தாலே அவிகாரியாயிருக்கும்படியான பெரிய வைபவத்தையுடையனாயிருக்கச் செய்தேயும், க்ஷுத்ரஸம்ஸாரிசேதநனை அர்ஜுநன், "ரதம் ஸ்தாபய மேச்யுத" என்று "தேரை நிறுத்து" "புரவியை விட்டுக் குளிப்பாட்டு" என்று ஏவிக் காரியம் கொள்ளலாம்படி எளியனாய்ப் பரிமாறுகையாலே, ஸௌசீல்யம் தோற்றிற்று. "ந ஸந்த்ருசே திஷ்டதி ரூபமஸ்ய ந சக்ஷுஷா பச்யதி கச்சநைநம்" என்றும் "யஸ்யாவதாரரூபாணி ஸமர்ச்சந்தி திவௌகஸ:, அபச்யந்த: பரம் ரூபம்" என்றும் சொல்லுகிறபடியே, கனத்த ஜ்ஞாநசக்த்யாதிகளையுடைய ப்ரஹ்மாதிகள் கண்ணுக்கும் அவிஷயமாம்படி தன் வடிவழகை ஆச்ரிதரான அர்ஜுநாதிகள் கண்ணுக் கிலக்காக்கி ஒதுங்குகைக்கும், ப்ரதிகூலரான துர்யோதனாதிகள் இலக்குக்குறிச்செய்கைக்கும் ஏகாந்தமாம்படி தன் வடிவைக் காட்டிக்கொண்டு நிற்கையாலே ஸௌலப்யம் தோற்றிற்று. தர்மத்திலே அதர்மபுத்தி பண்ணி யுத்தாந்நிவ்ருத்தனான அர்ஜுநனை அக்குறை பாராதே தன் பேறாக மேல் விழுந்து ஹிதம் சொல்லி மீட்கையாலே வாத்ஸல்யம் தோற்றிற்று. அர்ஜுநனுக்கு இழிதொழில் செய்கிற தசையிலே ஸ்வவைபவேவாக்திபூர்வகயாக வைச்வரூப்யத்தைக் காட்டுகையாலே ஸ்வாமித்வம் தோற்றிற்று. ஸேநாதூளிதூஸரிதமாய் அலைகிற திருக்குழல்கற்றையும், ஸ்வேதபிந்துஸ்தபகிதமான திருமூக்கும், ஆச்ரிதவிரோதிதர்சனத்தால் சிறிச்சிவந்து, சீதளமாய்ச் சிதற அலர்ந்த தாமரைத்தடாகம் போலே கண்டவிடமெங்கும் அலையெறிகிற திருக்கண்களும், காளமேகம்போலே இருண்ட குளிர்ந்த திருமேனியும், அதுக்குப் * பரபாகமாம்படி சாத்தின திருப்பீதாம்பரமும், தேருக்குக்கீழே நாற்றின திருவடிகளும், அதிலே சாற்றின சிறு சதங்கைகளும், தூக்கின உளவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறுமாய் நிற்கிற நிலையைக்காட்டுகையாலே விலக்ஷணவிக்ரஹயோகமும் தோற்றுகிறது. தன் சிறுமை கண்டு இறாய்க்கவேண்டா; அவன் ஸுசீலனாகையாலே. துர்லபனென்றிறாய்க்கவேண்டா; அவன் ஸுலபனாகையாலே. தன் தோஷங்கண்டு இறாய்க்க வேண்டா; அவன் வத்ஸலனாகையாலே. அப்ராப்தனென்று இறாய்க்கவேண்டா; ஸர்வஸ்வாமியாகையாலே. ஆச்ரயிக்கைக்கு கபாச்ரயமேதென்று கண்கலங்கவேண்டா; விலக்ஷணவிக்ரஹயுக்தனாகையாலே. இந்த விலக்ஷணவிக்ரஹயோகத்தைச் சொன்னபோதே, அந்த விக்ரஹத்துக்கு நிரூபகபூதையாய், "அகலகில்லேனிறையும்" என்று திருமார்பிலே எழுந்தருளியிருக்கிற பிராட்டியையும் சொல்லிற்றாயறுகையாலே, இவனுடைய பூர்வாபராதத்தைப் பொறுப்பித்துச்சேரவிடுகைக்குப் புருஷகாரயோகமும் சொல்லிற்றாயிற்று.

* பரபாகம்:— மாறுபட்ட நிறங்களின் சேர்த்தியினால் ஏற்படும் சோபை.

"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாம்" என்கையாலே, பதர்க் கூட்டை விட்டு ஒரு மணிபர்வதத்தை ஆச்ரயணீயமாகச்சொன்னாப்போலே இருக்கிறது. ஸாதனாந்தரங்களாகிறன:- பதர்க்கூடு போலே ஸாத்யமுமாய், பலவுமாய், உள்வாயில் ஈச்வரஸஞ்சாரமில்லாதவன்று அநுபஜீவ்யமாயிறே யிருப்பது. அங்ஙனன்றியிலே இவ்விஷயம், ஸித்தமுமாய், அத்விதீயமுமாய், கட்டங்க உபஜீவ்யமுமாயிருக்கும்.

ஏகபதம், "த்வமேவோபாயபூதோ மே பவ" "த்வாமேவ சரணம் ப்ராப்ய" "மாமேவ யே ப்ரபத்யந்தே" "தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே" "தமேவ சரணம் கச்ச" என்று ஸ்வீகார்யவஸ்துவை நிர்தேசித்து, அனந்தரம் அவதாரணத்தை எழுதிப்போருகிற ஸ்தான ப்ரமாணத்தாலே, அவதாரணார்த்தமாகிறது. இந்த அவதாரணத்தால் வ்யாவர்த்திக்கப் படுகிறது என்னென்னில்: "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்று ஸாதனாந்தரத்யாகம் கீழே உக்தமாகையாலே, அது வ்யாவர்த்யமாகமாட்டாமையாலும், "மாம்" என்கிற ஏகவசனத்தாலும், "மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்சய" என்று கீழுடையத் தன்னுடைய ஸர்வஸ்மாத் பரத்வத்தைச் சொல்லுகையாலும், தேவதாந்தரவ்யாவ்ருத்திக்கு அவகாசமே பிடித்தில்லாமையாலும், இந்த அவதாரணத்தால் வ்யாவர்த்திக்கப்படுகிறது:— "வ்ரஜ" என்று விஹிதமான ஸ்வீகாரத்தினுடைய அங்கபாவம்.

இதில் அங்கபுத்தி பிறக்கைக்கு ஹேதுவென்னென்னில்: "யதநந்தரம் யத் பவதி தத் தஸ்ய காரணம்" என்று "யாதொன்றுண்டானவனந்தரத்திலே யாதொன்றுண்டாம், அதுக்குக் கீழிலது காரணமாகக்கடவது;" என்கிற ந்யாயத்தாலே, ஸ்வீகாரத்தையொழிய அவனுடைய உபாயபாவம் ஜீவியாமையாலே, ஸ்வீகாரத்திலே அங்கபுத்தி பிறக்கைக்கு யோக்யதையுண்டு. யோக்யதையுண்டாகில், அங்கபாவம் கழிகிறபடியென்னென்னில்: அங்கமாவது, அங்கிக்கு கிஞ்சித்காரமாவதிறே. அந்த கிஞ்சித்காரந்தான் ஸ்வரூபோத்பாதக த்வாரத்தாலேயாதல், உத்பன்னமான ஸ்வரூபத்துக்கு வர்த்தகமாயாதல், வர்த்தித்ததுக்கு பலப்ரதானசக்திமுகத்தாலேயாதலாயிருக்கும். அதில் பக்திக்கு, ஸாத்யமாகையாலே உத்பத்த்யபேக்ஷையுண்டு; அஹரஹராதேயாதிசயமாகையாலே, வ்ருத்த்யபேக்ஷை உண்டு; தான் சேதநமல்லாமையாலே பலப்ரதானவேளையிலே சேதனாபேக்ஷை உண்டு. ஆகையாலே அதுக்கு கர்மஜ்ஞாநாத்யங்கங்கள் அபேக்ஷிதமாகக்கடவது. இந்த உபாயம் ஸித்தமாகையாலே உத்பத்த்யபேக்ஷையில்லை; ஏகரூபமாகையாலே வ்ருத்த்யபேக்ஷையில்லை; பரமசேதநமாகையாலே பலப்ரதானத்தில் அந்யஸாபேக்ஷதையில்லை. ஆக, அங்கங்களைக்கொண்டு கொள்வதொரு கார்யம் இவ்வுபாயத்துக்கு இல்லாமையாலே, இந்த ஸ்வீகாரம் அங்கமாகமாட்டாது.

ஸ்வரூபோத்பத்த்யாதிகளிலே அங்கநிரபேக்ஷமாகில், இவ்வுபாயம் என்றுமொக்க ஜீவிக்கையாகாதொழிகைக்கு ஹேதுவென்னென்னில்: உபாயத்வமாவது, ஒருவனுடைய அநிஷ்டத்தைக் கழிக்கையும், இஷ்டத்தைக் கொடுக்கையுமாகையாலே, ஒரு அதிகாரி அபேக்ஷிதம்; அது பெறாமையாலே உபாயத்வம் ஜீவிக்கையாகாதொழிந்தது. அதிகாரியாகில பேக்ஷிதம், ஸ்வீகாரம் செய்கிற கார்யமென்னென்னில்: ஐச்வர்யார்த்தியிலும், கைவல்யார்த்தியிலும், பகவச்சரணார்த்தியாய் ஸாதநாநுஷ்டானம் பண்ணுமவனிற்காட்டிலும், இவ்வதிகாரியை வ்யாவ்ருத்தனாக்குகிறது பகவல்லாபார்த்தமான இந்த ஸ்வீகாரமாகையாலே, "அருணயைகஹாயந்யா பிங்காக்ஷ்யா ஸோமம் க்ரீணாதி" என்கிறவிடத்தில்,

அருணத்வபிங்காக்ஷத்வாதிகள் ஸோமக்ரயத்துக்கு உறுப்பான பசுவுக்கு பச்வந்தரத்திற் காட்டில் வ்யாவர்த்தகவிசேஷணமானாப்போலே, இதுவும் அதிகாரிக்கு வ்யாவர்த்தக விசேஷணமாய்க் கிடக்கிறது. இனி அதிகாரி அங்கமாமன்று, தத்விசேஷணமான இந்த ஸ்வீகாரமும் அங்கமாகக்கடவது. க்ஷுத்து அன்னத்துக்கு ஸாதனமாமன்றிறே, இந்த ஸ்வீகாரத்துக்கு ஸாதனத்வமுண்டாவது. ஸ்வீகாரத்துக்கு அங்கதயா உபாயத்வம் கொள்ளப்பார்க்கில், "த்வமேவோபாயபூதோ மே பவேதி ப்ரார்த்தநாமதி:, சரணாகதி:" என்று "அவனையே நிரபேக்ஷோபாயமாகப் பற்றுகை ப்ரபத்தி" என்கிற லக்ஷணவாக்யத்தோடு விரோதிக்கும். ஆகையாலே ஈச்வரன் கார்யம் செய்கைக்கு ஆபிமுக்யஸூசகமாய்க் கிடக்கிறது.

சரணசப்தம் "உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம், வர்த்ததே ஸாம்ப்ரதஞ்சைஷ உபாயார்த்தைகவாசக:" என்கிறபடியே இப்போது சரணசப்தம் உபாயவாசகமாய், "மாம்" என்று ஸௌசீல்யாதிவிசிஷ்டமாகச் சொன்ன வஸ்துவுக்கு "ஸோச்நுதே ஸர்வாந் காமாந் ஸஹ ப்ரஹ்மணா விபச்சிதா" "ஸதா பச்யந்தி" "ச்ரியா ஸார்த்தம்-ஆஸ்தே" என்கிற படியே, உபேயபாவத்திலும் அந்வயமுண்டாகையாலே அத்தை வ்யாவர்த்தித்து உபாய பாவத்திலே ஒதுக்கித்தருகிறது.

கீழ் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய" என்கிறவிடத்தில் ப்ரஸ்துதமான ஸாதனாந்தரங்களை இத்தை உபாயபாவத்திலே ஒதுக்கித்தாராதோ? என்னில்: அர்த்தஸித்தமாய் வருகிறதிற் காட்டில், சப்தஸித்தமாய் வருமது அழகியதாகையாலும், "ஏதம் ஹ வாவ ந தபதி; கிமஹம் ஸாது நாகரவம். கிமஹம் பாபமகரவமிதி" என்றும், "தஸ்ய கார்யம் ந வித்யதே" என்றும், "க்ஷேத்ரஜ்ஞ: கரணீ ஜ்ஞாநம் கரணம் தஸ்ய வை த்விஜ, நிஷ்பாத்ய முக்திகார்யம் வை க்ருதக்ருத்யம் நிவர்த்ததே" என்றும் சொல்லுகிறபடியே, ஆற்றுக்கு அக்கரைப்பட்டால் அதுக்கு நிஸ்தரணபரிகரமான தெப்பம் அநபேக்ஷிதமாமாப்போலே, "ஸாத்யாபாவே மஹாபாஹோ ஸாதநை: கிம் ப்ரயோஜநம்" என்று ஸாத்யம் ஸித்தித்தால் ஸாதனத்தைக் கொண்டு அபேக்ஷயில்லாமையாலே ஸாதனத்யாகமும் ப்ராப்யாம்சத்திலே அந்விதமாகை யாலும், உபாயத்வத்தில் ஒதுக்கித்தரமாட்டாது.

"வ்ரஜ" என்று மஹாவிச்வாஸபூர்வகமாய் ப்ரார்த்தநாகர்ப்பமாய், அத்யவஸாயாத்மகமாய், தான் உபாயசரீரத்திலும், உபேயசரீரத்திலும் அந்வயியாதே அதிகாரிவிசேஷணமாய், உபாயத்தில் ஒதுக்கித்தர அந்வயியாதே கீழ்ச்சொன்ன த்யாகத்தை அங்கமாகவுடைத்தாய், "மாம்" என்கிற வஸ்துவை விஷயமாகவுடைத்தாய், "ப்ரபத்யே" என்கிற க்ரியாபதத்திலே உக்தமான ஸ்வீகாரத்தை விதிக்கிறது. "கதௌ" என்கிற தாதுவிலே கத்யர்த்தமாய், கரணத்ரயங்களிலே அந்யதமமாயிருப்பதொரு கரணத்தினுடைய கதிமாத்ரத்தைக்காட்டி பகவத்வைபவப்ரகாசகமாதல்; அங்ஙனன்றியிலே கரணத்ரயங்களினுடையவும் கதியைக்காட்டி பூர்ணப்ரபத்தியைச் சொல்லுகிறதாகவுமாம். ஆக, தர்மத்யாகம், ஸ்வீகாரத்துக்கு அங்கமாகக் கடவது. த்யாகவிசிஷ்டமான ஸ்வீகாரம், அதிகாரிவிசேஷணமாகக்கடவது. ஸ்வீகார விசிஷ்டனை அதிகாரிக்கு வாத்ஸல்யாதிகுணவிசிஷ்டவஸ்து உபாயமாகக்கடவது. ஆக, இப்படி பூர்வார்த்தம் அதிகாரியினுடைய க்ருத்யாம்சத்தைச் சொல்லிற்று.

அனந்தரம், உத்தரார்த்தம் உபாயத்தினுடைய க்ருத்யாம்சத்தைச் சொல்லி, அதிகாரியினுடைய க்ருத்யாம்சமிசைத்தையும் சொல்லுகிறது. இதில் "அஹம்" சப்தம் வ்ரஜவில்

ஆர்த்தமாகப் புகுந்த அதிகாரியினுடைய மஹாவிச்வாஸத்துக்கு ஊற்றாய், மேல் சொல்லப்புகுகிற பாபவிமோசனத்துக்குப் பரிகாரமான ஜ்ஞாநசக்த்யாதிகுணவிசேஷங்களை, இங்கு "மாம்" என்று ஆச்ரயணீயமாக உக்தமான வஸ்துவுக்கு ப்ரகாசிப்பிக்கிறது. ஆச்ரயிக்கைக்கு வாத்ஸல்யாதிகள் வேணும்; கார்யம் செய்கைக்கு ஜ்ஞாநசக்த்யாதிகள் வேணும். "நிவர்த்யாம்சம் இன்னது; நிவர்த்தனப்ரகாரம் இன்னது; நிவர்த்தனதிகாரி இன்னான்." என்றறிகைக்கு ஸர்வஜ்ஞனாகவேணும். ஜ்ஞானம் பிறந்தால் ப்ரயோஜனமில்லையே, பங்குகல்பனாய் அசக்தனாயிருக்குமாகில். ஆகையாலே ஜ்ஞாநாநுகுணமாகக் கார்யம் செய்கைக்கு ஸர்வசக்தியாக வேணும். ஸர்வசக்தியானாலும் இவனிடும் பச்சைகொண்டு குறைதீரவேண்டும்படி அபூர்ணனாயிருக்குமாகில், அவனுக்கீடாக இவனால் இடலாவதொன்றில்லாமையாலே, அவையிரண்டும் அகிஞ்சித்கரமாமிறே. அங்ஙனன்றியிலே ஒழியும்போது அவாப்தஸமஸ்தகாமனாகவேணும். ஸர்வஜ்ஞனையும், ஸர்வசக்தனையும், அவாப்தஸமஸ்தகாமனையும், இச்சேதநனோடு ஒரு ஸம்பந்தமில்லாதவன்று அவை மூன்றும் கார்யகரமாகாதே; அதுக்காக ஸர்வஸ்வாமியாக வேணும். இவை நாலும் விபரீதபலமாகாதே, இவனுடைய ரக்ஷணத்துக்கு உறுப்பாம் போதைக்கு பாதுக்காஸஹத்வலக்ஷணமான பரமதயையை உடையனாகவேணும். இல்லாதவன்று ஸர்வஜ்ஞத்வம் இச்சேதநன் பண்ணின குற்றங்களைத் தப்பாமல் கணக்கிடுகைக்கு உறுப்பாயறும்; ஸர்வசக்தித்வம் அக்குற்றங்களுக்கீடாக நரகாதிகளில் தள்ளி அறுத்தறுத்துத் தீற்றுகைக்கு உறுப்பாயறும்; தீற்றுகின்றால் கண்பார்த்து நெகிழாமைக்கு உறுப்பாயறும், அவாப்தஸமஸ்தகாமத்வநிபந்தனமான நைரபேக்ஷ்யம்; இங்ஙன் செய்யாநின்றால் கடவதல்லவென்று நியமிப்பாரில்லாமைக்கு ஹேதுவாமித்தனை, ஸர்வஸ்வாமித்வப்ரயுக்தமான நிரங்குசஸ்வாதந்த்ர்யம்; ஆகையாலே ஸர்வஜ்ஞத்வத்தை ரக்ஷணவிதயா விஷயமாக்குகைக்கும், ஸர்வசக்தித்வத்தை ரக்ஷணவ்யாபாரத்திலே ஆக்குகைக்கும், அவாப்தஸமஸ்தகாமதையை ப்ரயோஜநநிரபேக்ஷமாக ரக்ஷிக்கைக்கு உறுப்பாக்குகைக்கும், ஸர்வஸ்வாமித்வத்தைத் தன்பேறாகக் கார்யம் செய்கைக்கு உறுப்பாக்குகைக்கும் தயை வேணும். ஆகையாலே இக்கார்யம் செய்கைக்கு உறுப்பான இவ்வைந்து குணங்களும் 'அஹம்' சப்தத்திலே அநுஸந்தேயம். ஆக, ஸர்வஜ்ஞனுமாய், ஸர்வசக்தியுமாய், அவாப்தஸமஸ்தகாமனுமாய், ஸர்வஸ்வாமியுமாய், பரமதயாவானுமான நான் என்கிறதாயிற்று.

(த்வா) அஜ்ஞனுமாய், அசக்தனுமாய், மஹாவிச்வாஸபூர்வகமாக என் பக்கலிலே ந்யஸ்தபரனான உன்னையென்று, அதிகாரியைச் சொல்லுகிறது. 'அஹம்' சப்தத்தாலே பாபசத்ருவையும் (த்வா) என்கையாலே பாபாச்ரயத்தையும் சொல்லிற்றாயிற்று.

அனந்தரம் (ஸர்வபாபேப்ய:) என்று, நிரஸ்யமான பாபஸ்வரூபத்தைச் சொல்லுகிறது. அதில் பாபசப்தத்தாலே, பகவத்ப்ராப்திவிரோதியைச் சொல்லுகிறது. ஏதேனுமாக அபிமத விரோதியிறே, பாபமாவது. (பாபேப்ய:) என்கிற பஹுவசனத்தாலே, பாபங்களினுடைய பாஹுல்யத்தைச் சொல்லுகிறது. அவையாவன:— ஜ்ஞாநாபாவரூபமாயும், அந்யதா ஜ்ஞாநரூபமாயும், விபரீதஜ்ஞாநரூபமாயும், மூன்று வகைப்பட்ட அஜ்ஞானமும், புண்யபாப ரூபமாய், பாதகம், அதிபாதகம், மஹாபாதகம், உபபாதகமுள்ளிட்ட பேதங்களாலே நாநாவிதமாய், பூர்வோத்தராகரூபமான கர்மங்களும், தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவராத்மகமான சதுர்விதசரீரஸம்பந்தமும், "அஜ்ஞாநவாஸனை, கர்மவாஸனை, ப்ரக்ருதிஸம்பந்தவாஸனை"

என்றுப்போலே சொல்லுகிற வாஸனைகளும், விஷயபேதத்தால் விவிதபேதையான ருசியும், இவைபடியாகப் பிறக்கவும் கடவதாய், இவற்றுக்கு வர்த்தகமான ராகத்வேஷாதிகளும். ஆக, (பாபேப்ய:) என்று ஸாதகனுக்குங்கூட ஸாதாரணமாக நிவர்த்யமான பாபங்களைச் சொல்லிற்று.

'ஸர்வ' சப்தத்தாலே இந்த அதிகாரிக்கு ஈச்வரன் விசேஷித்துக்கழிக்கும் பாபத்தைச் சொல்லுகிறது. அதாவது:— "போகேந த்விதரே க்ஷபயித்வாத ஸம்பத்ஸ்யதே" என்கிறபடியே பூர்வாகோத்தராகங்களையொழிய, ப்ராரப்தகார்யமான புண்யபாபரூபகர்மம் ஸாதகனுக்கு அநுபவவிநாச்யமாயிருக்கும். அதில் இவனுக்கு சரீராரம்பகமான கர்மாம்சமொழியநீக்கி, கர்மசேஷமும் நிவர்த்யகோடியிலே புகும். ஜ்ஞானம் பிறந்த பின்பு வாஸநாபலத்தாலே புத்திபூர்வகமாகப் பண்ணின பாபமுண்டாகிலும், அதுவும் ஸர்வசப்தவாச்யமாகக்கடவது. காலக்ஷேபார்த்தமாகப் பண்ணும் அநுகூலவ்ருத்திகளில் ஸாதனத்வபுத்தி பிறந்ததாகிலும், அதுவும் ஸர்வசப்தவாச்யமாகக்கடவது. புத்ராதிகள் பக்கல் பண்ணும் ப்ம்ஸவநாதிகளில் ஆந்ருசம்ஸ்யப்ரேரிதனாய் இழிகையொழிய, பாபபயப்ரேரிதனாய் இழியில் அதுவும் ஸர்வசப்தவாச்யமாகக்கடவது.

(ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி) ஆக, இப்படிப்பட்டிருக்கிற பாபங்களினின்றும் விடுவிக்கக்கடவேன். இந்த 'ணிச்' சாலே, நெடுநாள் உன்னைப்பற்றி விடாதே கிடக்கிற பாபங்கள் தானே "நமக்கு ஆச்ரயமல்ல" என்று விட்டுப்போம்படி பண்ணுகிறேன். "நெடுநாள் பாபதர்சனத்தாலே உனக்குப் பிறந்த பயம் உன்னைக்கண்டு அதுக்குப் பிறக்கும்படி பண்ணக்கடவேன்" என்னுமிடம் தோற்றுகிறது. கீழ் ச்லோகத்தில், "மாமேவைஷ்யஸி" என்று, ப்ரஸ்துதமான பகவத்ப்ராப்திக்கு ஒரு ஸாதனவிசேஷத்தை விதித்ததாகையாலே, இங்குச்சொல்லுகிற பாபவிமோசனம், பகவத்ப்ராப்திவிரோதிபாபவிமோசனமாகக்கடவது. ஆகையாலே, "ததா ஹேயகுணத்வம்ஸாதவபோதாதயோ குணா:, ப்ரகாச்யந்தே ந ஜந்யந்தே நித்யா ஏவாத்மநோ ஹி தே" என்கிறபடியே, மலயோகத்தாலே மழுங்கின மாணிக்கத்தை அழுக்கறக்கடைந்தால் தன்னடையே தத்கதமான ஒளி ப்ரகாசிக்குமோபாதி, இவனுக்கும் அவித்யாதிகளாகிற திரோதானங்கள்டையக் கழிகையாலே, ஸ்வாச்ரயமான அபஹதபாப்மத்வாதிகளடையத் தன்னடையே ப்ரகாசிக்குமிறே. ஆகையாலே விரோதிநிவ்ருத்தியிறே அபேக்ஷிதம். அந்த ப்ராதான்யம் தோற்ற விரோதிநிவ்ருத்தியைச் சொல்லுகிறது. ஆகையிறே, "ஆவிஸ்ஸ்யுர் மம ஸஹஜகைங்கர்யவிதய:" என்று பட்டர் அருளிச்செய்தது. ஆக, (அஹம்) என்று சொன்ன உபாயவஸ்துவினுடைய கார்யம் சொல்லிற்று.

அனந்தரம் (த்வா) என்று நிர்தேசித்த அதிகாரியினுடைய க்ருத்யாம்சத்தைச் சொல்லுகிறது (மாசுச:) என்று. நிரபாயோபாயபூதனான நான் உன்னுடைய விரோதிநிவ்ருத்திபூர்வகமான அபிமதஸித்தியை ஸாதித்துத்தரக்கடவனாக ஏறிட்டுக்கொண்ட பின்பு ஸாபாயமான ஸாதநாந்தரங்களினுடைய துஷ்கரத்வாதிகளை அநுஸந்தித்து சோகிக்கக்கடவையல்லை; அந்த ஸாதனவிசேஷங்களையொழிய நிரபாயோபாயம் இல்லாதவன்றன்றோ உனக்கு சோகிக்கவேண்டுவது. அவற்றை விட்டு என்னை ஆச்ரயிக்கையாலும், சோகிக்கவேண்டா. ஆச்ரயணீயனான நான் வத்ஸலனாகையாலே, உன்னுடைய தோஷங்கண்டு சோகிக்கவேண்டா. ஸுலபனாகையாலே, துர்லபனென்று சோகிக்கவேண்டா. ஸுசீலனாகையாலே, உன்னுடைய

திறுமை கண்டு சோகிக்கவேண்டா. ஸர்வஸ்வாமியாகையாலே, அப்ராப்தனென்று சோகிக்க வேண்டா. அவாப்தஸமஸ்தகாமனாகையாலே, உன்னுடைய அபூர்த்தி கண்டு சோகிக்க வேண்டா. ஸர்வசக்தியாகையாலே, உன்னுடைய அசக்தி கண்டு சோகிக்கவேண்டா. நிருபாதிகபந்துவாகையாலும், பரமதயாவானாகையாலும், "கார்யம் செய்யுமோ? செய்யானோ?" என்று சோகிக்கவேண்டா. ஸர்வபாபவிமோசகனாகையாலும் சோகிக்க வேண்டா. உன்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; என்னைப் பார்த்தாலும் சோகிக்க வேண்டா; விரோதியைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா. நீ என் பக்கல் ஸர்வபரந்யாஸம் பண்ணுகையாலே, உன்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; நான் ஸர்வஜ்ஞத்வாதிகுண விசிஷ்டனாகையாலே, என்னைப் பார்த்தாலும் சோகிக்கவேண்டா; விரோதியாகிறது, என்னுடைய நிக்ரஹரூபமாகையாலே "பொறுத்தோம்" என்னத்தீரும்; ஆகையாலே விரோதியைப்பார்த்தாலும் சோகிக்கவேண்டா. நீயும் இப்படி என்பக்கலிலே ந்யஸ்தபரனாய், விரோதியும் இப்படி துர்லபமான பின்பு சோகம் அநுவர்த்திக்குமாகில், நீயும் எனக்கன்றி யிலே, நானும் உனக்கன்றியிலே, உன்னையும் "ந நமேயம்" என்னப் பண்ணி என்னையும் "க்ஷிபாமி" "ந க்ஷமாமி" என்னப்பண்ணின பாபம் மூர்த்தாபிஷிக்தமாயிருக்க, சோகியாதே அநாதிகாலம் ஆனைக்கழுத்திலே இருக்கிறயாய்ப்போந்த அஜ்ஞானத்தோபாதி போரும். கிம் பஹுநா; நான் உன் கார்யத்துக்குக் கடவனாயிருக்க நீ சோகிப்புதியாகில் உன் கார்யத்துக்கு நீயே கடவையாமித்தனை.

ஆக, ஸ்வீகாராங்கதயா த்யாஜ்யமான தர்மவிசேஷங்களையும் அந்த தர்மங்களி னுடைய த்யாகப்ரகாரத்தையும், அந்த தர்மத்யாகபூர்வகமாகப் பற்றும் விஷயத்தினுடைய ஸௌலப்யாதிகுணயோகத்தையும், அந்த குணவிசிஷ்டவஸ்துவினுடைய ஸஹாயாஸஹத்வ லக்ஷணமான நைரபேக்ஷ்யத்தையும், நிரபேக்ஷவஸ்துவினுடைய உபாயபாவத்தையும், அத்தை உபாயத்வேந ஸ்வீகரிக்கையும், ஸ்வீக்ருதமான உபாயத்தினுடைய ஜ்ஞாநசக்த்யாதிகுண யோகத்தையும், அந்த குணவிசிஷ்டவஸ்துவின் பக்கலிலே ந்யஸ்தபரனான அதிகாரியையும், அந்த அதிகாரியினுடைய விரோதிபாபஸமூஹத்தையும், அந்த பாபவிமோசனப்ரகாரத்தை யும், பாபவிமோசகனைப்பற்றின அதிகாரியினுடைய நைர்ப்பர்யத்தையும் சொல்லிற்றாயிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

சரமச்லோகப்ரகரணம் ஸம்பூர்ணம்.

பரந்த ரஹஸ்யம் முற்றிற்று.

*——————*



Edited, Printed & Published by K. SRINIVASA IYENGAR, at Srinivasam Press, No. 8, Puthur Agraharam, Trichinopoly.



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# மாணிக்கமாலை.

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபஸ் ஸ்ரீதரஸ் ஸதா.

"தைவாதீநம் ஜகத் ஸர்வம் மந்த்ராதீநந்து தைவதம், தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம் தஸ்மாத் ப்ராஹ்மணதைவதம்" என்கிறபடியே உபயவிபூதியும் ஈச்வரனிட்ட வழக்காயிருக்கும். ஈச்வரன் திருமந்த்ரம் இட்ட வழக்காயிருக்கும். திருமந்த்ரம் ஆசார்யனிட்ட வழக்காயிருக்கும். ஆகையாலே, உபயவிபூதிக்கும் நிர்வாஹகனை ஈச்வரனும் அவனை ப்ரதிபாதிக்கிற திருமந்த்ரமும் ஆசார்யனிட்ட வழக்காகையாலே திருமந்த்ரத்தால் பிரதிபாதிக்கிற ப்ராப்ய ப்ராபகங்களிரண்டும் ஆசார்யனாலே என்னத்தட்டில்லை.

ஆசார்யனாவான்: "ஆசார்யோ வேதஸம்பந்நோ விஷ்ணுபக்தோ விமத்ஸர:, மந்த்ரஜ்ஞோ மந்த்ரபக்தச்ச ஸதா மந்த்ராச்ரயச் சுசி:" "குருபக்திஸமாயுக்த: புராணஜ்ஞோ விசேஷத:, ஏவம் லக்ஷணஸம்பந்நோ குருரித்யபிதீயதே." என்கிறபடியே வைதிகாக்ரேஸரனாய், பகவத்பக்தியுக்தனாய், மாத்ஸர்யவியுக்தனாய், ஸகலவேதஸாரபூதமாய் ஸகலமந்த்ரங்களுக்கும் காரணமாய் இரண்டுபங்குக்கு ஒரு கையோலை போலே எம்பெருமானோடு இவ்வாத்மாவுக்கு உண்டான அவிநாபூதஸம்பந்தத்தைக் காட்டக்கடவதாய் முமுக்ஷுவுக்கு எய்ப்பினில் வைப்பான திருமந்த்ரத்தை பக்திச்ரத்தைகளோடே அர்த்தஸஹிதமாக அநுஸந்தித்துப் பெரிய மதிப்பனாய், அர்த்தகாமோபஹதனன்றிக்கே லோகபரிக்ரஹம் உடையவனாயிருப்பானொருவன் ஆசார்யனாகக்கடவன்.

கூரத்தாழ்வான் எம்பெருமானார் திருவுள்ளத்திலே சீறியருளினாரென்று கேட்டு "இவ்வாத்மா அவருக்கே சேஷமாயிருந்ததாகில் அவருடைய இஷ்டவிநியோகப்ரகாரம் கொண்டு கார்யமென்" என்றார். தன்னை ஆச்ரயித்து வைத்துத் தன் திறத்திலே தீங்கு நினைத்த த்ரோஹியான நாலூரானைப் பெருமாள் "ந க்ஷமாமி" என்று முனிந்தருள, பெருமாளோடே எதிரிட்டு "அவன் நான் பெற்ற லோகம் பெறவேணும்" என்று விண்ணப்பம் செய்தார். ஆக, இவ்விரண்டர்த்தத்தாலும் சிஷ்யாசார்யக்ரமத்துக்கு ஸீமாபூமி கூரத்தாழ்வானென்று அருளிச்செய்வர். வடுகநம்பி "ஆசார்யபதமென்று தனியே ஒரு பதம்; அதுள்ளது எம்பெருமானாருக்கேயாயிற்று; ஆகையால் எம்பெருமானார் திருவடிகளே சரணமென்று விச்வஸித்திருங்கோள்" என்றாயிற்று, தம்முடைய சிஷ்யர்களுக்கு அருளிச்செய்வது.

நல்லடிக்காலத்தில் நம்மாசார்யர்கள் அதிகாரிகளைப் பெற்றாலல்லது பகவத்ஸம்பந்தம் இருக்கும்படி சொல்லக்கடவதாயிராது. அதிகாரிகளாவார்: கருந்தரையில் தாங்கள் நின்ற நிலையை அநுஸந்தித்து "இந்நின்ற நீர்மையினியாமுறாமை" என்றும், "இன்றொடு நாளை

யென்றே எத்தனை காலமும் போய்க்கிடப்பட்டேன்" என்றும், "ஏஹி பச்ய சரீராணி" என்றும் "இன்னம் கெடுப்பாயோ" என்றும் "இவையென்ன உலகியற்கை" என்றும் "நாட்டுமானிடத்தோடெனக்கரிது" என்றும், "நாட்டாரோடியல்வொழிந்து" என்றும் "ஓ! ஓ! உலகினதியல்வே" என்றும், கூவி வெருவி இந்நிலத்திற்பொருந்தாமை தோற்றத் துவண்ட சேதனனுக்காயிற்று பகவத்ஸம்பந்தம் சொல்லுவது. அங்ஙனன்றிக்கே, வாய்க்கரையிலே பொரிபுறந்தடவின ஆநுகூல்யம் கண்டாதல், த்யாஜ்யமான அர்த்தகாமங்களிலே நசையாலேயாதல், நிலை நில்லாத ஒரு ப்ரபாவத்தை நச்சியாதல், ஒன்றாலே வந்ததுவும் துவட்சியில்லாக் கழனிமுண்டர்க்கு ஒரு நல்வார்த்தை சொன்னுனுகில் தன் மதிப்பும் கெட்டு, தன் கூற்றிலே ஒதுங்கின பகவத்ப்ராப்தியும் நழுவவிட முடிந்து, கேட்கிறவனையும் நாஸ்திகனுக்குகிறானித்தனை.

ஆசார்யபேதமும் ஆத்மபேதத்தோபாதி. பிதாவை, மாதுலனை, மாமனாரை, ஸாவித்ர்யுபதேசம் பண்ணினவனை, அத்யயனம் பண்ணுவித்தவனை, ஒரு மந்த்ரம் உபதேசித்தவனை, பகவந்மந்த்ரம் உபதேசித்தவனை இப்படி ஆராய்ந்து பார்த்தால் அனேகராயிருப்பர்கள். இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். "இதுவென்? பகவந்மந்த்ரம் சொல்லுவித்தவனையும் அப்படிச் சொல்லலாமோ?" என்னில்: பகவதவதாரங்களும் பகவத்குணங்களும் எல்லையை என்றும் இறந்திருக்கும். பகவதவதாரங்கள் தோறும் பகவத்குணங்கள் தோறும் திவ்யசேஷ்டிதங்கள் தோறும் திருமந்த்ரங்களும் உளவாயிருக்கும். ஸம்ஸாரத்தில் ஸ்த்ரீபுமான்கள் ஸம்ச்லேஷவிச்லேஷரூபமான ஸ்ரீகோபாலமந்த்ரத்தை உபதேசிப்பாரும், புத்ரப்ரதமான மந்த்ரத்தை உபதேசிப்பாரும், ஐச்வர்யமென்ன, ஆரோக்யமென்ன, விஜயார்த்தமென்ன, சத்ருநிரஸனமென்ன, இவற்றுக்குத் தக்க மந்த்ரங்களையும் உபதேசிப்பாரெல்லாம் ஸம்ஸாரத்தை அர்த்திப்பார்களாகையாலே ஆசார்யர்களாக மாட்டார்கள். இவ்வர்த்தம் திருமந்த்ரத்தைக் குறித்தன்று; விநியோகம் கொள்ளுகிற சேதனனுடைய நினைவைப் பற்ற. விபரீதஸ்பர்சமுடைய எம்பெருமான், நீசஸ்பர்சமுடைய மந்த்ரம், நீசஸ்பர்சமுடைய ஆசார்யன் இவர்களுடைய முமுக்ஷுக்களுக்கு த்யாஜ்யர்கள். விபரீதஸ்பர்சமுடைய எம்பெருமானாவான்:— இதரதேவாலயங்களில் இருக்குமவன். நீசஸ்பர்சமுடைய மந்த்ரமாவது:— பகவத்பாகவதகைங்கர்யப்ராப்திக்கு அவ்வருகுண்டான ஆபாஸங்களுடையச் சொல்லுமது. நீசஸ்பர்சமுடைய ஆசார்யனுவான்:— இதுக்குப் புறம்பு சில ஸம்ஸாரத்தில் மினுக்கங்களைத் தோன்றச் சொல்லுமவன்.

இனி, ஆசார்யன் ஆரென்னில்: பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபாரநிவ்ருத்திரூபமான ப்ரபத்தியை உபதேசிக்கிறவன் ஆசார்யனுவான்; "ச்ரிய:பதியான எம்பெருமானையே ரக்ஷகனென்று விச்வஸித்து நிர்ப்பரனுயிரும்" என்று அருளிச்செய்யுமவன். ஸதாசார்யன் ஸச்சிஷ்யனை பகவத்ப்ரஸாதத்தாலே திருந்தின ஸ்ரீவைஷ்ணவனென்று மிகவும் ஆதரித்துக்கொண்டு போரும். ஸச்சிஷ்யனும் ஸதாசார்யனுடைய ஆதரத்தைக் கண்டு இறுமாவாதே தன் கருந்தரையை உணர்ந்து "பகவத்விமுகனுய் சப்தாதிவிஷயங்களிலே மண்டி உருமாய்ந்து கைகழிந்து நின்ற என்னை முதலடியிலே அத்வேஷம் பற்றாசாகக் கொண்டு தன்னுடைய நிரவதிகக்ருபையாலே ரக்ஷித்தருளின மஹோபகாரகன்" என்றும் "ஆசார்யனாலே இப்பேறுபெற்றேன்" என்றும் "என்னைத் தீமனங்கெடுத்தாய்" "மருவித்

தொழும் மனமே தந்தாய்" என்றும் "உனக்கென் செய்கேன்" என்றும் ஆசார்யன் பண்ணின மஹோபகாரத்துக்கு ப்ரத்யுபகாரம் தேடிக் காணாமல் தடுமாறி, "குருரேவ பரம் ப்ரஹ்ம குருரேவ பரா கதி:, குருரேவ பரா வித்யா குருரேவபரம் தநம், குருரேவபர: காம: குருரேவ பராயணம், யஸ்மாத் ததுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:" என்கிறபடியே இஹபர லோகங்களிரண்டும் ஆசார்யன் திருவடிகளே என்றும் த்ருஷ்டாத்ருஷ்டங்களிரண்டும் அவனே என்றும் நினைத்திருக்கும். ஆசார்யன் சிஷ்யனுடைய ஹிதத்தைச் செய்யுமவன்; சிஷ்யன் ஆசார்யனுடைய ப்ரியத்தைச் செய்யுமவன். "ஆசார்யன் சிஷ்யனுடைய ஆத்மயாத்ரையைத் தனக்கு தேஹயாத்ரையாக நினைத்திருக்கும்" என்று விச்வஸித்திருக்கிறதற்கு மேலில்லை. சிஷ்யனும் அப்படியே ஆசார்யனுடைய தேஹயாத்ரையைத் தனக்கு ஆத்மயாத்ரையாக நினைத்திருக்கும். ஆசார்யனானவன், சிஷ்யனுடைய உயிரை நோக்கும். சிஷ்யன் ஆசார்யனுடம்பை நோக்கும். சிஷ்யவஸ்துவை ஆசார்யன் விநியோகம் கொள்ளக்கடவனல்லன். "சிஷ்யவஸ்துவை விநியோகம் கொள்ளுகிறான்" என்றிருக்கும் ஆசார்யனுடைய அறிவையும் சங்கிக்க அடுக்கும். ஆசார்யனுக்குத் தன் வஸ்துவை உபகரிக்கிறேன் என்றிருக்கும் சிஷ்யனுடைய அறிவையும் சங்கிக்க அடுக்கும். "சரீரமர்த்தம் ப்ராணஞ்ச ஸத்குருப்யோ நிவேதயேத்" என்றும் "உற்று எண்ணில் "அதுவுமற்றாங்கவன்றனது" என்றும் சிஷ்யனுக்கு ப்ரதிபத்தியாகையாலும், இந்த ருசியை விளைப்பித்தான் ஆசார்யனாகையாலும் ஆசார்யனுக்கும் சிஷ்யனுக்கும் ஒரு நினைவேயாகவேணும். ஆசார்யன் பொறைக்கு இலக்கான சிஷ்யனுக்கு பகவத்ஜ்ஞானமே கைவந்தென்ன ஒண்ணாது. ஆசார்யன் கண்வட்டத்தில் வர்த்திக்கிற ஸச்சிஷ்யனுக்கும் ஆசார்யன் ப்ரியமே செய்கையாலே கோபத்துக்கு ஹேது வில்லை. ஆகையால் ஆசார்யன் பொறை குமரிருந்து போமித்தனை. ஆசார்யன் அர்த்த காமங்களில் நசையற்றவனாகையாலே த்யாஜ்யமான அர்த்தகாமங்கள் ஹேதுவாகப் பொறுக்கவும் வெறுக்கவும் ப்ராப்தியில்லை. இனி இவனுடைய ஹிதரூபமாக வெறுத்தானாகிலும் அதுவும் ப்ராப்யாந்தர்க்கதமாகக்கடவது.

பட்டியூரரங்கத்தானும், மணிக்கையோசைப்பிள்ளானும், பெற்றியும், நஞ்சீயருமாக எழுந்தருளியிருக்கச்செய்தே நஞ்சீயரைப் பார்த்து "ஒரு வைஷ்ணவன் ஓராசார்யன் ஸ்ரீபாதத்திலே பகவத்ஸம்பந்தத்தைப் பண்ணி வேறோராசார்யன் ஸ்ரீபாதத்திலே ஸ்வரூப சிக்ஷையாயிருந்தது. இருவர் பக்கலிலும் இவன் அநுவர்த்திக்கும்படி எங்ஙனே?" என்று விண்ணப்பஞ்செய்ய "ஆரைத்தான் நீர் விடப்பார்க்கிறீர்? முற்படக் கருந்தரையிலே ஒரு நல்வார்த்தையைச் சொல்லுமவர் 'ச்ரிய:பதியான எம்பெருமானுடைய திருவடிகளையே விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்' என்று அருளிச்செய்யுமவர்.; பின்பு அவனைக்குறித்து ஒரு நல்வார்த்தை சொல்லுமவன் 'நீரார் ஸ்ரீபாதத்திலே உடையார்?' என்று கேட்டு இவனை ரக்ஷித்த ஆசார்யனுக்கு ஒரு ப்ரியம் செய்தானுமாய், இவன் ஹிதத்தின் மேலெல்லை நிலத்தைப் பிடித்து 'உன் ஆசார்யன் திருவடிகளையே விச்வஸித்து நிர்ப்பரனாயிரும்' என்றாயிற்று வார்த்தை சொல்லுவது. ஆகையால் இருவரும் உபாதேயதமர்" என்று அருளிச்செய்தார். "ஏகாக்ஷரப்ரதாதாரம் ஆசார்யம் யோவமந்யதே, ச்வாநயோநிசதம் ப்ராப்ய சண்டாளேஷ்வபிஜாயதே" என்னக்கடவதிறே. "முமுக்ஷுக்களுக்கு மாதாபிதாக்கள் ஆர்?" என்று கேட்க "சரீரமேவ மாதாபிதரௌ ஜநயத:" என்கிற மாதாபிதாக்களும்,

'த்வம் மாதா ஸர்வலோகாநாம் தேவதேவோ ஹரி: பிதா' 'பிதா மாதா ச மாதவ:' என்று பொதுவான மாதாபிதாக்களும் இவனுக்கன்று. அவர்களுமல்ல. இனியாரென்னில், திருமந்த்ரம் மாதாவாயும் பிதா ஆசார்யனும்" என்று அருளிச்செய்வர். இத்தை நினைத்திறே நஞ்சீயரை அனந்தாழ்வான் "திருமந்த்ரத்திலே பிறந்து த்வயத்திலே வளர்ந்து த்வயநிஷ்டராவீர்" என்று வாழ்த்திற்றும். "உத்பாதகப்ரஹ்மபித்ரோ: கரீயாந் ப்ரஹ்மத: பிதா" என்றும் உண்டு.

"முமுக்ஷுக்களுக்கு ஸம்ஸாரத்திலே இருக்கும் நாள் உசாத்துணையார்? பொழுது போம்படி என்?" என்று நஞ்சீயரைப் பிள்ளை கேட்க, "முமுக்ஷுவென்று ஒரு ஜாதியன்று; ஒரு ஆச்ரமமன்று; மோக்ஷத்திலே இச்சையுடையவனை முமுக்ஷுவென்றதித்தனை; இவனுக்கு உசாத்துணையும் இவனோடே சேர்ந்து போதுபோக்குமுள்ளதும் விரஜைக்கு அக்கரையிலே போனாலிறே. இவ்விருப்பிலே ஓராசையுடையவனுக்கன்றோ துணைவேண்டுவதும் போதுபோக்குமுள்ளதும். இருக்கும் நாள் பிராட்டிக்கு லங்கையில் உசாத்துணையுண்டாகில் இவனுக்கும் ஸம்ஸாரத்தில் துணையுண்டு. அறிவு நடையாடின முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரம் பிராட்டிக்கு லங்கையோபாதியிறே. அவளுக்கு ராவணன் அபிமானித்த அசோகவனிகையோபாதி, இவனுக்கு இவ்வுடம்பு. அவளுக்கு மாரீசனுடைய தோற்றரவோபாதி இவனுக்கு விஷயப்ராவண்யம். 'அகற்ற நீ வைத்த மாயவல்லைம்புலன்கள்' என்னக்கடவதிறே. அவளுக்கு ராவணன் தோற்றரவோபாதி இவனுக்கு ஸம்ஸாரத்தின் தோற்றரவு. அவளுக்குத் தர்ஜனபர்த்ஸனாதிகளைப் பண்ணும் ராக்ஷஸிகளோபாதி இவனுக்குப் புத்ரமித்ராதிகள். ஏகாக்ஷி, ஏககர்ணிகைகளோபாதி இவனுக்கு அஹங்காரமமகாரங்கள். அவளுக்கு ஸ்ரீவிபீஷணாழ்வானும் பெண்மகளும் போலே இவனுக்கு ஸ்ரீவைஷ்ணவர்கள் உசாத்துணையாயிருக்கும்படி. அவளுக்குத் திருவடி தோற்றரவோபாதி இவனுக்கு ஆசார்யன் தோற்றரவும். அவளுக்குத் திருவடி வர்ஷித்த ஸ்ரீராமகுணங்களோபாதி இவனுக்கு ஆழ்வார்கள் அருளிச்செயல்களும், ஸ்ரீராமாயணமஹாபாரதாதிபகவத்கதைகளும். அவளுக்குத் திருவடி கொடுத்த திருவாழி மோதிரத்தோபாதி இவனுக்கும் ஆசார்யன் திருவுள்ளமான திருமந்த்ரம். அவளுக்குத் திருவாழி மோதிரம் சாற்றின மணிவிரலை நினைப்பது, அணைத்த திருத்தோளை நினைப்பது, அவ்வழியாலே திருமேனியை முழுக்க நினைப்பதாய் இலங்கையில் தனியிருப்பையும் மதியாதே பெருமாளோடே ஒரு படுக்கையிலே இருந்தாற்போலே இவன் திருமந்த்ரத்தில் ப்ரதமாக்ஷரத்தில் சொல்லுகிற ரக்ஷகத்வசேஷித்வங்களை நினைத்து அந்த ரக்ஷகத்வசேஷித்வங்களுக்கு இடைச்சுவரான அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யநிஷேதத்தைப் பண்ணித் தன்னை அநந்யார்ஹசேஷமாக்கின அவதாரணத்தை நினையா, அவ்வநந்யார்ஹசேஷவஸ்துவுக்கு உஜ்ஜீவனம் க்ருபாதிகசேஷியானவனுக்குக் கிஞ்சித்கரிக்கையென்கிற அர்த்தத்தைக் காட்டும் நாராயணபதத்தை நினையா, இப்படித் திருமந்த்ரத்தில் அர்த்தாநுஸந்தானத்தாலே ஸம்ஸாரத்தில் இருப்பையும் மதியாதே பாமருமூவுலகத்துள்ளே தெளிவுற்ற சிந்தையராய் வர்த்திப்பர்கள். பிராட்டிக்கு லங்கையிலே பொழுதுபோக்கு போலே முமுக்ஷுவுக்கு ஸம்ஸாரத்திலே பொழுதுபோக்கு. ஸம்ஸாரிகளிற்காட்டில் முமுக்ஷுவுக்கு *. லங்கையிலுள்ளார், தன்னிலமான வாகி தோன்ற உண்பாருறங்குவாராய், ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளோடே போதுபோக்காய்,

* இவ்விடத்தில் சில வார்த்தைகள் விட்டுப்போயிருக்கின்றன.

பிராட்டி ஊணுமுறக்கமுமின்றிக்கே, பத்துக்கோடி செந்நாய்க்கு நடுவே ஒரு மான் பேடை இருந்தாற்போலே, பெருமாள் தோள் வீரத்தை அநுஸந்தித்து, அவ்வீரத்துக்கு ஒரு இறையான ப்ரவ்ருத்திநிவ்ருத்திகளுக்கு க்ஷமையின்றிக்கே துரும்பு நறுக்காதே இருந்தாற்போலே முமுக்ஷுவுக்கும் 'உண்ணுநாள் பசியாவதொன்றில்லை' என்றும், 'நாட்டு மானிடத்தோடெனக்கரிது' என்றும், 'நாட்டாரோடியல்வொழிந்து' என்றும், 'கூவிக் கொள்ளும் காலம் இன்னம் குறுகாதோ' என்றுமிருக்கை. ஸம்ஸாரிகளுக்கு வாஸஸ்தானம் ஒரு க்ராமமாத்ரமாய், ஆச்ரயம். க்ஷேத்ரஜ்ஞனையிருப்பானோர் எலியெலும்பனாய், ப்ரயோஜனமும் வயிறு வளர்க்கையாயிருக்கும். முமுக்ஷுவுக்கு இருப்பிடம் எம்பெருமானேயாய், ஆச்ரயம் எம்பெருமானேயாய், ப்ரயோஜனமும் கைங்கர்யமேயாயிருக்கும். 'வைத்த பரிசிது காண்மின்' என்று இந்நிலத்துப் பொருந்தாமையும், பொருந்தின நிலத்தில் புகப்பெறாமையும் வடிவிலே தோற்றும்படியாய் கண்கள் அசிம்பொழுக 'நினைந்திருந்தே சிரமம் தீர்ந்தேன்' என்றிருப்பர்கள்." *

இவ்விருப்பில் பொருந்தாமை விளைப்பித்து இரும்பைப் பொன்னாக்குவாரைப்போலே கருந்தரையிலே புகுந்து பகவத்விஷயத்தை உபகரித்த ஆசார்யனுக்கு சிஷ்யன் பண்ணும் உபகாரமேதென்னில்: ஆசார்யவிஷயீகாரத்துக்கு இவ்வருகு சிஷ்யன் நல்வழிக்கு உறுப்பாக நடக்கும் நடக்கைகளடைய ஆசார்யனுக்கு உபகரித்தானாகவாயிற்று, ஆசார்யன் திருவுள்ளத்தில் அநுஸந்தித்திருக்குமது. அவையாவன:— தன் முன்னடி பார்த்து நடக்கையும்; பிறருடைய குணகுணநிரூபணம் பண்ணுதொழிகையும்; ஸ்வதோஷத்தில் ஸர்வஜ்ஞனாயிருக்கையும்; பரதோஷத்தில் அஜ்ஞனாயிருக்கையும்; அந்யசேஷத்வம், ஸ்வஸ்வாதந்த்ர்யம், தேஹாத்மாபிமானம், ஆத்மஸ்துதி, பரநிந்தை என்கிற எல்லை மயக்குக்கள் பரிஹரித்து நடக்கையும்; எம்பெருமானுடைய வாய் புகு சோற்றைப் பறியாதொழிகையும்; அதாவது: எம்பெருமானுடைய வருத்த ரக்ஷகத்வத்தைத் தான் தனக்கு ரக்ஷகனென்றிருக்கை; ஆசார்யனையும், திருமந்த்ரத்தையும், எம்பெருமானையும், அவமானம் பண்ணுதொழிகையும்; ஆசார்யனை அவமானம் பண்ணுகையாவது:— தன் முன்னடி பார்த்து நடவாதொழிகையும், அவன் அருளிச்செய்த திருமந்த்ரத்தைத் தரையில்லாத்தரையிலே சிந்தி இழக்கையும்; திருமந்த்ரத்தை அவமானம் பண்ணுகையாவது:— திருமந்த்ரத்தை மறக்கையும், திருமந்த்ரம் அருளிச்செய்த ஆசார்யனை அநாதரிக்கையும், திருமந்த்ரத்தால் ப்ரதிபாதிக்கிற அர்த்தத்தின்படியொழிய அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யதேஹாத்மாபிமானாதிகளிலே மொத்துண்டு கிட்டம் தின்ற மாணிக்கம் போலே உருமாய்ந்து போகையும்; எம்பெருமானை அவமானம் பண்ணுகையாவது:— அவனுடைய ரக்ஷகத்வத்துக்கு இடைச்சுவரான க்ஷேத்ரஜ்ஞரை ரக்ஷகராக நினைத்து அவர்கள் வாசல்கள் தோறும் நுழைந்து ஸர்வேச்வரனை ஸ்துதிக்கிற நாக்கை இட்டு புரோடாசத்தை நாய்க்கிடுமாப்போலே க்ஷேத்ரஜ்ஞரை ஸ்துதிக்கையும்.

எம்பெருமானுக்கும் ஆத்மாவுக்கும் ப்ராப்தி அவிநாபூதமாயிருக்க புருஷகாரம் வேண்டுவானென்னென்னில்: இருக்கிற ஸம்ஸாரமும், எடுத்த உடம்பும், இந்த ப்ராப்திக்கு இடைச்சுவரான அந்யசேஷத்வஸ்வஸ்வாதந்த்ர்யதேஹாபிமானாதிகளை விளைப்பித்துத் தன்னை மறந்து உருமாயப்பண்ணுமதாகையாலே ஸாபராதனை தன் படியையும், அபராதத்தையும்

* என்று நஞ்சீயர் அருளிச்செய்தார் என்று இவ்விடத்தில் கூட்டிக்கொள்வது.

அறிகைக்கு ஸர்வஜ்ஞனுமாய், அறிந்தபடி அநுபவிப்பிக்கைக்கு ஸர்வசக்தியுமாய், தான் ஸ்வதந்த்ரனுமாயிருக்கையாலே இவன் அபராதத்தைக் கண்டு அழியச்செய்யாமைக்குப் புருஷகாரம் வேணும். ஆனால் பிராட்டிக்கும் எம்பெருமானுக்கும் ப்ராப்தி ஒத்திருக்குமாகில் பிராட்டியைப் புருஷகாரமாகச் சொல்லுவானென்னென்னில்: இருவர்க்கும் இரண்டு குணமுண்டாகையாலே. எம்பெருமானுக்கு ஸ்வஸ்வாதந்த்ர்யமும் நீர்மையுமுண்டு. பிராட்டிக்கு வெறும் நீர்மையே வடிவாயிருக்கும். எங்ஙனேயென்னில்: மத்யராத்ரியிலே காதகரும் கூட இரங்கும்படியான சரணாகதியை முன்னிட்டுக்கொண்டு வந்த ஸ்ரீவிபீஷணாழ்வானையுங்கூட "வத்யதாம் பத்யதாம்" என்ன ஒரு நிலை நின்று கைக்கொண்டது பெருமாள் ப்ரக்ருதி; தன்னை நலிந்த ராக்ஷஸிகளைத் திருவடி நலியப்புக, பெருமாள் பரிகரமென்று மதியாதே "ந கச்சிந் நாபராத்யதி" என்று பிராட்டி ப்ரக்ருதி.

ஆனால் பிராட்டியும் ஆசார்யனும் இரண்டு புருஷகாரம் வேண்டுவானென்னென்னில்: "சரண்யன் குறையும் சரணாகதன் குறையும் தீர்ந்து இருவர்க்கும் ஸ்வரூபம் பெறுகைக்காக" என்று அருளிச்செய்தார். குருபரம்பரையை முன்னிடவே சரணாகதன் குறை தீரும். பிராட்டியை முன்னிடவே சரண்யன் குறை தீரும். சரண்யனுக்குக் குறையுண்டோ? என்னில்: நித்யவிபூதி போலே தெளிவிசும்பன்றிக்கே இருள் தருமாஞாலமான ஸம்ஸாரத்திலே வர்த்திக்கிற சேதநனை இந்நிலத்தின் தன்மை பாராதே பிழை எழுதும் ஸ்வாதந்த்ர்யம் சரண்யனுக்குக் குறை. அக்குறை பிராட்டியை முன்னிடவே தீரும். எம்பெருமான் இவ்வாத்மாவைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. ஆத்மா எம்பெருமானைப் பற்றும்போது பிராட்டியையும் ஆசார்யனையும் முன்னிட்டாயிற்றுப் பற்றுவது. இவ்வர்த்தம் இளையபெருமாள், ஸ்ரீவிபீஷணப்பெருமாள், ஸ்ரீகுஹப்பெருமாள், திருவடி, மஹாராஜருள்ளிட்டார் பக்கலிலும் காணலாம். எம்பெருமானுக்கு ரக்ஷித்தே ஸ்வரூபம் பெறவேணும். பிராட்டிக்கு ரக்ஷிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும். ஆசார்யனுக்கும் இவ்வர்த்தம் அறிவிப்பித்தே ஸ்வரூபம் பெறவேணும். இவ்வர்த்தமறிந்து அத்யவஸித்தபோதே ஸ்வரூபஸித்தி. சேதனனுக்கு அர்த்தகாமத்தில் நசையறவே ஆச்ரமம் நிறம் பெறும். அஹங்காரமமகாரமற வைஷ்ணவத்வம் நிறம் பெறும். இவைதான் பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகங்களாயிருக்கும்.

பகவத்ப்ராப்திக்கு ப்ரதிபந்தகமான ஸ்வவ்யாபாரநிவ்ருத்தி ப்ரபத்தி. "ப்ரபத்தியாவது, ஒன்றை விட்டு ஒன்றைப் பற்றுகை" என்று ஆழ்வான் பணிக்கும். அதாவது:— அஜ்ஞனாய், அசக்தனாய், அப்ராப்தனான தன்னை விட்டு ஸர்வஜ்ஞனாய் ஸர்வசக்தியாய் ப்ராப்தனுமான எம்பெருமானைப் பற்றுகை. ப்ரபத்திக்கு ஸ்வரூபம் ஏது? அங்கம் ஏது? ப்ரமாணம் ஏது? அதிகாரிகள் ஆர்? என்னில்: திருவடியைக் கட்டின ப்ரஹ்மாஸ்த்ரம் சணற்கயிறு காண விட்டுப்போனாப்போலே தன்னையொழிந்த உபாயாந்தரங்களைப் பொருதொழிகை ஸ்வரூபம். இதரோபாயத்யாகம் அங்கம். ஸகலப்ரமாணப்ரதிபாத்யனான எம்பெருமான் தானே "மாமேவ யே ப்ரபத்யந்தே" என்று அருளிச்செய்கையாலே அது தானே ப்ரமாணம். தானும் பிறரும் தஞ்சமென்றிருக்கும் நன்மைக்கு, எம்பெருமானுக்கு அவ்வருகு இல்லையென்றிருக்கையும், பிறருடைய அநர்த்தாப்யுதயங்கள் தன்னதென்

றிருக்கையும் இவை தொடக்கமானவை *. அர்த்தசாஸ்த்ரத்தை பிறந்தபோது தேஹாத்மாபிமானம் போயிற்றில்லையாகக்கடவது. தன்னையுள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குணகுண நிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. எம்பெருமானை உள்ளபடி ஆராயுமன்றும் பிறருடைய குணகுணநிரூபணம் பண்ண அவஸரமில்லை; ப்ராப்தியுமில்லை. சைதன்யம் நடையாடினவன் தன்னைப் பார்த்துத்தளர்தல் எம்பெருமானைப் பார்த்துத் தேறுதல் செய்யுமித்தனையொழிய பொழுதைப் பழுதே போக்கான். இனி, பிறருடைய குணகுணநிரூபணம் பண்ணுகிறது, பகவத்ஜ்ஞானம் நெஞ்சிற்படாமையாலே. உணர்த்தியற்றவன் உறங்குகிறானேயிருப்பது. "மந ஜ்ஞாநே" என்கிற தாது.

அசித்துக்கும் ஒரு குணமுண்டு. ஈச்வரனுக்கும் ஒரு குணமுண்டு. அசித்து தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டாது. தேஹாத்மாபிமானி பிறர் காலில் துவளான். "ந நமேயம்" என்றிருக்குமதொழிய ஸ்ரீவைஷ்ணவர்களையாதல் வணங்கானே. எம்பெருமானும் தன்னை அபிமானித்தாரைப் பிறர் காலில் துவளவொட்டான். திருமந்த்ரநிஷ்டன் அஸத்துக்கள் காலில் வணங்கான். ஆத்மா ப்ரக்ருதியை அண்டைகொண்டு எம்பெருமானை உறுமுதல், எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை உறுமுதல் செய்யுமதொழிய ஒன்றில் நில்லாது. ஹிரண்யன் ப்ரக்ருதியை அண்டைகொண்டு எம்பெருமானோடே எதிரிட்டு முடிந்து போனான். ஸ்ரீப்ரஹ்லாதாழ்வான் எம்பெருமானை அண்டைகொண்டு ப்ரக்ருதியை எதிரிட்டு வாழ்ந்து போனான். ப்ரக்ருதியைச் செறியச்செறிய அந்தகாரம் மிகும். எம்பெருமானைச் செறியச்செறிய வெளிச்செறிப்பு மிகும். ஹிரண்யராவணாதிகள், கைகேயி, கூனி பக்கலிலே காணலாம். த்ரிஜடை, விபீஷணாழ்வான் பக்கலிலேயும் காணலாம். ப்ரக்ருதியினுடைய அஸ்திரத்வாதிதோஷங்களை ஆசார்யன் காட்டக்கண்ட சேதநனுக்கு இவ்வர்த்தம் நெஞ்சிற்படாதாகில் பகவத்ப்ராப்தியளவும் பயங்கெட்டிருக்க விரகில்லை. "தேறேலென்னை உன் பொன்னடிச்சேர்த்தொல்லை வேறே போக எஞ்ஞான்றும் விடல்" என்பது, "மங்கவொட்டு" என்பது, "இந்நின்ற நீர்மை" என்பது, "இது கண்டாய்" என்பதாய், "வழித்தங்கு வல்வினையை மாற்றானோ" என்பதாய், "நடுவேயோருடம்பிலிட்டு" என்று அஞ்சிக் கூப்பிடாநிற்பர்கள். பகவத்ஸம்பந்தம் பண்ணின பின்பு இவ்வுடம்பைக் கண்டுவைத்து அஞ்சாதே இருந்தவனுடைய ஜ்ஞானத்தை சோதிக்கவடுக்கும்.

ஆத்மா அச்சேத்யனாய், அதாஹ்யனாய், அக்லேத்யனாய், அசோஷ்யனாய், ஸர்வகதனாய், ஜ்ஞானானந்தஸ்வரூபனாய், பகவச்சேஷபூதனாயிருந்துவைத்து ப்ரக்ருதிஸம்பந்தத்தாலே மக்னனாய்க்கொண்டு உருமாய்ந்து "அஸந்நேவ ஸ பவதி" என்று உண்டாயிருக்கச்செய்தே இல்லாதார் கணக்காய் நின்ற நிலையை ஆசார்யன் காட்டக்கண்ட அனந்தரம் விரோதி கழிந்து ப்ராப்யதேசத்திலே புகுருமளவும், ராக்ஷஸிகள் மத்யையிலிருந்த பிராட்டியுடைய தனியிருப்பைப்போலவும் காலாக்னி மத்யையிலகப்பட்டாரைப் போலவும் ஹாலாஹலவிஷத்தினிடையகப்பட்டாரைப்போலவும் இதனுடன் பொருந்தாமை தோற்றப் பெருங்கூப்பீடாகக் கூப்பிட்டு இத்தை விடுவிக்கவல்ல மஹாபாகவதர்களான ஸத்துக்களுடைய ஸஹவாஸங்களால் பெற்ற பகவத்க்ருபையாலும், ஸ்வரூபயாதாத்ம்யத்தாலும் வெளிச்செறிப்புப் பிறந்து

* அதிகாரி ஸ்வரூபம் என்று சேர்த்துக்கொள்ளவேணும்.

இவ்விரோதியை விடுவித்துக்கொள்ளுகையிலே த்வரை விஞ்சிச் செல்லாநிற்கும். "ஜ்ஞாநாந் மோக்ஷ:" "அஜ்ஞாநாத் ஸம்ஸார:" என்கிறது. ஜ்ஞாநமாகிறது ஜ்ஞேயமாகிற பகவத் ஸம்பந்தத்தை அறிந்து, ஸம்பந்தத்துக்கு விரோதியான ஸம்ஸாரஸம்பந்தம் போரு தொழிகையிறே. அஜ்ஞாநாத் ஸம்ஸாரமாகிறது: பகவத்ஸம்பந்தத்துக்கு விரோதியான ப்ரக்ருதிப்ராக்ருதங்களோட்டைச்செறிவு. ஸம்ஸாரம் ஆபத்தென்றபடி. அநாத்மநி ஆத்ம புத்தியும், அஸ்வே ஸ்வம்புத்தியும், கர்மபரம்பரையும் ஸம்ஸாரஹேது. பகவத்ப்ரஸாத பரம்பரை மோக்ஷ ஹேது.

சேதநனுடைய அநர்த்தமறியலாவது, தேஹாத்மாபிமாநிகளோடொத்த தனக்குத் தான் தேடும் நன்மைகளையடையத் தனக்கு நாசமென்றிருக்கை. நஞ்சீயர் ஸ்ரீபாதத்திலே யுடையாரொரு ஸ்ரீவைஷ்ணவர் தம்முடைய அந்திமதசையில் "இவ்வவஸ்தையில் எனக்குத் தஞ்சமாக நீ வைத்திருக்கலாவது ஏது?" என்று விண்ணப்பம் செய்ய "இப்போது இந் நினைவும் கூட அறுகை" என்று அருளிச் செய்தார். அதாவது: ஜ்ஞானம் பிறந்த பின்பு ஜ்ஞாநகார்யமான கைங்கர்யம் கைபுகுரும் தேசவிசேஷத்திலே செல்லுமளவும் அறிவு நடையாடின சேதநனுக்கு ஆபத்தென்றபடி. "ஆத்மநோ தூர்தசாபத்திம் விம்ருச்ய ச ஹரேர் குணந்" என்கிறபடியே. ஆதலால், தன்னுடைய நினைவு மாறினாலல்லது "ஸ்மராமி" யும் "நயாமி" யும் பலியாதென்று அருளிச்செய்வர். இவ்வளவு உபாயத்தை ஒடவைத்தது ஏகபதம். உபேயத்தை ஒடவைத்தது மேலில் நமஸ்ஸு. உபாயத்தை நிலையிட்டார்கள், பிராட்டி, த்ரௌபதி, திருக்கண்ணமங்கையாண்டானுள்ளிட்டார்கள். உபேயத்தை நிலையிட் டார்கள், இளையபெருமாள், பெரிய உடையார், சிந்தயந்தி, பிள்ளைதிருநறையூரரையர். எங்ஙனேயென்னில்: "சீதோ பவ" என்னவல்லவள் தன்னுடைய தனியிருப்பையும் மாற்ற வல்லளாயிருக்க பெருமாளுடைய வீரத்துக்குக் கொத்தையாமென்று துரும்பு நறுக்கா திருந்தபடியாலும், லஜ்ஜையில்லாத கோஷ்டியிலே, லஜ்ஜையை உடையவன் கையிலே தன்னுடைய லஜ்ஜையைப் போகட்டு நிர்லஜ்ஜையாயிருந்தபடியாலும், தன் பரபரப்பை மாற்று, வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கினபடியாலும், உபாயத்துக்கு ஸீமாபூமி அவர்கள். 'நில்' என்ன "குருஷ்வ" என்றபடியாலும், "அஹம் ஸர்வம் கரிஷ்யாமி" என்றபடியாலும், "க்ரியதாமிதி மாம் வத" என்றபடியாலும், "லக்ஷ்மணேந கதாம் கதிம்" என்கிறபடியான ப்ராப்தியாலும், "ஸஹஜகைங்கர்யவிதய:" என்கிற அர்த்தம் கைப்பட்டது அவர்க்கேயாகையாலும், பெரிய உடையாரும், சிந்தயந்தியும், பிள்ளைதிருநறையூரரையரும் வருத்த விஷயத்தைப் பிரித்துத் தந்தாமுடைய உடம்பைப்பேணுதபடியாலும், வருத்த விஷயத்தைக் கண்ட மாத்ரத்திலே விரோதியான உடம்பை விடுகையாலும், உபேயத்துக்கு ஸீமாபூமி இவர்கள்.

இதரோபாயத்யாகபூர்வகமாக 'அவனே உபாயமாகவேணும்' என்னும் உபேய ப்ரார்த்தனையை "த்வயம்" என்கிறது. இவ்வர்த்தம் நெஞ்சில் பட்டவர் பிராட்டியைப்போலே துரும்பு நறுக்காதே ஒழியும். த்ரௌபதியைப்போலே தன்னுடைய லஜ்ஜையைப்போகட்டிருக் கும். திருக்கண்ணமங்கையாண்டானைப்போலே பரபரப்பற்று வருத்தவன் வாசலிலே தன்னைப் பேணாது ஒதுங்கும். இளையபெருமாளும், பெரியவுடையாரும், பிள்ளைதிருநறையூரரையரும், சிந்தயந்தியும் போலே தந்தாமை முடித்தும் ஸ்வரூபமழியாமல் நோக்கி நிற்பர்கள்.

ஆசார்யாங்கீகாரானந்தரத்திலே குருபரம்பரையையும், திருமந்த்ரத்தையும், சரமச்லோகத்தையும் அநுஸந்தித்து இருந்த இடமறியாமல் தன்னை ஒருங்கவிட்டுக்கொண்டு, தன்னைக் கரையேற்றவல்லனாய், அர்த்தகாமோபஹதனல்லாதானொரு பரமஸத்வநிஷ்டன் கையிலே தன்னைப் பொகட்டு நிர்ப்பரனாயிருக்கைக்கு மேலில்லை. இவனுக்குப் பரிஹரிக்க வேண்டுவது: தேவதாந்தரபஜநம் பண்ணுவாரோட்டை ஸம்பந்திகளுடைய ஸஹவாஸம் விநாசமென்றஞ்சித் தவிரவும், பகவத்ஸ்வத்தை வருந்தியாகிலும் அபஹரித்து ஜீவியாதொழிகையும், பகவத்ப்ராப்திக்கு விரோதியான விஷயப்ராவண்யம் தன்னை முடிக்குமென்று அஞ்சிப்போரவும், ஆசார்யனளவில் ப்ரக்ருதிப்ராக்ருதங்கள் நிமித்தமாக வரும் அநர்த்தம் பரிஹரித்துப்போரவும், நிலைநின்ற பகவதபசாரம் வருந்தியும் பரிஹரித்துப்போரவும் வேணும்.

“ ஓரோரவதாரங்களிற்செய்த ஆனைத்தொழில்களெல்லாம் ஓரோ பாகவதாபசாரம் பண்ணின பலம் அநுபவிப்பிக்கைக்காக ” என்று ஜீயர் அருளிச்செய்வர். நல்லடிக்காலத்தில் நம்மாசார்யர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களைத் தங்களோபாதி ப்ரக்ருதிமான்களாக நினைத்திருக்கும் புல்லிமையின் நிக்ஷேபமாயிற்று இருப்பது. ‘ திருவுடைமன்னர் ’, ‘ செழுமாமணிகள் ’, ‘ நிலத்தேவர் ’, ‘ தெள்ளியார் ’, ‘ பெரு மக்கள் ’, ‘பெருந்தவத்தர்’, ‘உருவுடையாரிளையார்’, ‘ ஒத்து வல்லார் ’, ‘ தக்கார் மிக்கார் ’, ‘ வேதம் வல்லார் ’, ‘ வேதவிமலர் ’, ‘ சிறுமாமனிசர்’, ‘ எம்பிரான்றன சின்னங்கள் ’ என்று நம் குலநாதரான ஆழ்வார்கள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு இப்படித் திருநாமம் சாற்றுகையாலே, கேவலம் தன்னேடொக்க ஒரு மனுஷ்யரென்று ஸ்ரீவைஷ்ணவர்களை நினைத்திருக்கை பாகவதாபசாரம். பகவதபசாரம் பண்ணுகையாவது: எம்பெருமானுடைய நற்சீவனான ஸ்ரீவைஷ்ணவர்கள் திறத்துப் பண்ணுமபசாரம். பாகவதாபசாரம் பண்ணுகையாவது: ஸ்ரீவைஷ்ணவர்களுடைய உயிர்நிலையான எம்பெருமான் திறத்துப் பண்ணுமபசாரம். பாகவதஸம்ச்லேஷம் பகவத்ஸம்ச்லேஷத்தையும் பிறப்பிக்கும். பகவத்ஸம்ச்லேஷம் பாகவதஸம்ச்லேஷபர்யந்தமாயல்லது இராது. அபாகவதஸம்ச்லேஷம் பாகவதவிச்லேஷத்தையும் பிறப்பித்து, பகவத்விச்லேஷத்தையும் பிறப்பித்து, இவனையும் முடித்துவிடும். பாகவதஸம்ச்லேஷம் பகவத்ஸம்ச்லேஷத்தையும் பிறப்பித்து, அபாகவதவிச்லேஷத்தையும் பிறப்பித்து இவனையும் எடுத்துக் கரைமரம் சேர்த்துவிடும்.

இவ்வெல்லைமயக்கு ஆசார்யன் கண்வட்டத்திலே வர்த்திக்குமவனுக்கு வாராது. ஆசார்யன் கண்வட்டம் விட்டால், நித்யஸம்ஸாரியாய்ப் போமித்தனை. ஆசார்யனாவான், ஒட்டை ஓடத்தோடே ஒழுகலோடமாய், தன்னைக்கொண்டு முழுகுமவனன்று. தன்னைக் கரையேற்ற வல்லனாய், தன்னையடைந்தாரையும் கரையேற்றவல்லனான ஜ்ஞாநாதிபரிபூர்ணனாயிருப்பானொருவன். ஆசார்யனுடைய ஜ்ஞானம் வேண்டா சிஷ்யனுக்கு; விக்ரஹமே அமையும். “ கருடத்யானத்துக்கு விஷம் தீருமாப்போலே ஆசார்யனை த்யானித்திருக்கவே ஸம்ஸாரமாகிற விஷம் தீர்த்துக்கொள்ளலாம்” என்று அருளிச்செய்வர்கள். “குரோரவஜ்ஞயா ம்ருத்யு: மந்த்ராவஜ்ஞா தரித்ரதா, குருமந்த்ரபரித்யாகீ ரௌரவம் நரகம் வ்ரஜேத்” என்றுமுண்டு.

அத்ருஷ்டமே தஞ்சமென்றிருப்பர்கள் நித்யமுக்தர்கள். த்ருஷ்டமே தஞ்சமென்றிருப்பர்கள் நித்யஸம்ஸாரிகள். முமுக்ஷுவுக்கு த்ருஷ்டாத்ருஷ்டங்கள் செல்லாநிற்கச் செய்தே அத்ருஷ்டத்தை மறையவருவதொரு த்ருஷ்டமுண்டானால், த்ருஷ்டத்தை விட்டு

அத்ருஷ்டத்தைப் பற்றுமவன் முமுக்ஷு. அத்ருஷ்டத்தை மறையவருவதொரு த்ருஷ்டமுண்டானால் அத்ருஷ்டத்தை விட்டு த்ருஷ்டத்தைப் பற்றுமவன் நித்யஸம்ஸாரி. இப்போது தன்னுடைய அஹமர்த்தமறியலாவதிவ்விரண்டர்த்தமும், ஒரு எல்லை வந்தாலல்லது காணவொண்ணாது. அல்லாதபோது இருந்தே குடியாகவென்றிருக்கையும் வைஷ்ணவர்கள் தாங்களும் தங்கள்படியாலே வைஷ்ணவர்களென்றிருக்கவும் ஒருதட்டில்லை.

பரத்வாபஹாரிகள் சைவர். போகாபஹாரிகள் விஷயப்ரவணர். குணாபஹாரிகள் மாயாவாதிகள். தானும் எம்பெருமானும் அறிய வைஷ்ணத்வமுண்டென்று அறியலாவது, த்யாஜ்யமான சிலவற்றில் வந்தால் தானும் எம்பெருமானும் அறிய நசையற்றிருக்கையும், உபாதேயம் யாதொன்று, அதிலும் வந்தால் தானும் எம்பெருமானும் அறிய நசையுண்டாயிருக்கையும். தேசாந்தரமும், தேஹாந்தரமும் உண்டென்று அறிந்து பயத்தோடே கூட வர்த்திக்க அடுக்கும்.

நம் முதலிகளுக்கு ஒரு மூர்த்திநியதியும், ஒரு மந்த்ரநியதியும், ஓர் ஆசார்யநியதியும் உண்டு. அவையாவன:— பெருமாளும், த்வயமும், த்வயத்தை முதலடியிலே அருளிச்செய்த மஹோபகாரகனான ஆசார்யனும்.

எம்பெருமான் முதலடியிலே "க்ஷிபாமி" என்னும். புருஷகாரத்தை முன்னிடவே "ததாமி" என்னும். பின்பு "நயாமி" என்னும். அவன் ரக்ஷிக்கைக்குப் பரிகரம் ஆர்த்தியல்லதில்லை. இது குறைவற இருவர் ஸ்வரூபமும் குறைவறும். "படைப்பொடு கெடுப்புக் காப்பவன்" இத்யாதி. இத்தால் ருசிஜனகன் எம்பெருமானென்னுமத்தையும் ஸ்வவ்யதிரிக்த ஸகலபதார்த்தமும் அவனாலே ஐக்யமென்றும் சொல்லிற்றாயிற்று. "இடைப்புக்கோர்" என்கையாலே ஸ்ருஷ்டிஸம்ஹாரங்களுக்கும் "நான் நான்" என்கிற ப்ரஹ்மாதிகளன்றியே, மாதாபிதாக்களாக ப்ரமிக்கிறவர்களையும் சொல்லுகிறது.

ஆஹாரத்வாரம் உபாதேயம். விஹாரத்வாரம் த்யாஜ்யம். ஆகையாலே, லஜ்ஜாபுரஸ்ஸர நிவ்ருத்தியைச் சொல்லுகிறது. காலத்துக்கும், கர்மத்துக்கும், வேதத்தில் பூர்வபாகத்திற் சொல்லப்பட்ட நாமத்துக்கும் ப்ரபன்னன் குடிமகனல்லன். "ஆத்மவிச்வாஸமும், அத்யவஸாயமும் உடையராய், க்ருதஜ்ஞராயிருப்பார்க்கல்லது பகவத்விஷயம் சொல்லலாகாது" என்று பலகாலும் அருளிச்செய்வர். ஆசார்யவிச்வாஸமும், அத்யவஸாயமும், தேவதாந்தரபஜனஸம்பந்தமறுகையும், நிலைநின்ற பாகவதாபசாரம் பரிஹரித்துப்போரவும் வேணும். ஆசார்யனுக்கு இவனுபகரிக்குமதாவது:— அவன் தந்த வஸ்துவை நாற்சந்தியிலே வையாதொழிகை. பகவத்ப்ரஸாதம் பாகவதருசியைப் பிறப்பிக்கும். பாகவதருசி ஆசார்யாங்கீகாரத்தைப் பிறப்பிக்கும். ஆசார்யாங்கீகாரம் பகவத்ஸ்வீகாரத்தைப் பிறப்பிக்கும். பகவத்ப்ராப்தி தத்கைங்கர்யத்தைப் பிறப்பிக்கும். தத்கைங்கர்யம் விரோதிநிவ்ருத்தியை அபேக்ஷித்திருக்கும். ஸச்சிஷ்யன் ஸதாசார்யன் பக்கல் பண்ணும் விசதச்ரவணம் "ஸதா பச்யந்தி"க்கே அந்வயிக்கும். இவ்வர்த்தம் ஸதாசார்யன் ஸந்நிதியுண்டாகத் தோற்றும்.

மாணிக்கமாலை முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*————*

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# ஸகலப்ரமாணதாத்பர்யம்.

---

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபச் ஸ்ரீதரஸ் ஸதா.

---

ச்ரிய:பதியாய், விஷ்ணுவாஸுதேவ நாராயணாதிசப்தவாச்யமான ப்ரஹ்மமொன்றுமே முமுக்ஷுவுக்கு ஜ்ஞாதவ்யமென்று ஸகலப்ரமாணதாத்பர்யம். அந்த ப்ரஹ்மந்தான் விசேஷணமென்றும் விசேஷ்யமென்றும் த்விவிதமாயிருக்கும். விசேஷணமாகிறது:— விசேஷ்யத்தோடே பிரிந்திராத தர்மம். விசேஷ்யமாகிறது:— ஸ்வவிசேஷணத்தோடே பிரிந்திராத தர்மி. விசேஷணமும், போகோபகரணமென்றும், லீலோபகரணமென்றும் த்விவிதமாயிருக்கும். போகமாகிறது, இஷ்ட பலாநுபவம். லீலையாகிறது, காலாந்தரத்திலே ஒரு பலமன்றிக்கே தாத்காலிகரஸஹேதுவான வ்யாபாரம். போகோபகரணமும், சேதநமென்றும், அசேதநமென்றும் த்விவிதம். சேதநமாகிறது, ஜ்ஞாநாச்ரயவஸ்து. அசேதநமாகிறது, ஜ்ஞாநசூந்யவஸ்து. அதில் சேதநஜாதி, நித்யவர்க்கமென்றும், முக்தவர்க்கமென்றும் த்விவிதம். நித்யவர்க்கமாகிறது:— ஒருநாளும் ஸம்ஸாரத்தை ஸ்பர்சியாதே பகவந்நித்யகைங்கர்யநிரதராயிருந்துள்ள அநந்தவைநதேயவிஷ்வக்ஸேநாதி ஸூரிஸங்கம். முக்தவர்க்கமாகிறது:— பகவத்க்ருபையாலே அநாதியான அசித்ஸம்பந்தத்தில் நின்றும் விடப்பட்டு, நித்யவர்க்கத்தோடே கலந்து, அதுமுதலாக யாவதாத்மபாவி பகவத்கைங்கர்யபரராயிருக்குமவர்கள். அசேதநமாகிறது, சுத்தஸத்வாத்மகமாய், தன்னோடே ஸம்பந்தித்த சேதநர்க்கு ஸ்வரூபப்ரகாசகமாய், நித்யமாய், ஸ்வயம்ப்ரகாசமாய், கர்மநிரபேக்ஷமான பகவதிச்சையாலே திவ்யவிக்ரஹங்களாய், திவ்யாபரணங்களாய், திவ்யாயுதங்களாய், சத்ரசாமராதிபரிச்சிந்நங்களாய், திவ்யநகரங்களாய், திவ்யஜநபதங்களாய், அபரிச்சிந்நமாய், நித்யர்க்கும், முக்தர்க்கும், பகவானுக்கும் கைங்கர்யபோகபரிகரமாயிருக்கும். இனி, லீலோபகரணமும், சேதநமென்றும், அசேதநமென்றும் த்விவிதமாயிருக்கும்; அதிலே சேதநஜாதியும், ஸம்ஸாரிகளென்றும், முமுக்ஷுக்களென்றும் த்விவிதம். ஸம்ஸாரிகளாகிறார்:— அநாதியான அசித்ஸம்பந்தத்தாலே திரோஹிதங்களான ஸ்வரூபஸ்வபாவங்களை உடையராய், அதடியாக அந்யதாஜ்ஞாநவிபரீதஜ்ஞாநங்களையுடையராய், தத்கார்யங்களான ராகத்வேஷாதிஜந்யங்களான புண்யபாபரூப நாநாவிதகர்மங்களையுடையராய், அதுமூலமாக தேவதிர்யங்மநுஷ்யஸ்தாவரரூபமான சதுர்விதநாநாசரீரங்களிலே நிரந்தரமாக ப்ரவேசியாநின்றுகொண்டு, அந்த சரீரங்களிலும், சரீராநுபந்திகளிலுமுண்டான அஹங்காரமமகாரங்களாலே வருகிற துக்கங்களிலே ஸுகபுத்தி பண்ணாநின்றுகொண்டு, சப்தாதிவிஷயப்ரவணராய், தாபத்ரயதஹ்யமாநராய், நிரந்தரதுக்கஸாகர நிமக்நராயிருக்குமவர்கள். முமுக்ஷுக்களும், ஆத்மப்ராப்திகாமரென்றும், பகவத்ப்ராப்திகாமரென்றும் த்விவிதராயிருப்பர்கள். ஆத்மப்ராப்திகாமராகிறார்:— ராஜபதமளவாகவுடைத்தான ஐஹிகைச்வர்யமும், ப்ரஹ்மபதமளவாகவுடைத்தான ஆமுஷ்மிகைச்வர்யமும் அஸ்திரமாய் துக்கமிச்ரமாகையாலே, விவேகித்து, ஆத்மா ப்ரக்ருதே:பரனாய், நித்யனாய், ஜ்ஞாநாநந்தஸ்வரூபனாயிருக்கையாலே, ஆத்மபோகமே புருஷார்த்தமென்று தத்ப்ராப்திக்கு யத்நம் பண்ணுமவர்கள். இவர்கள்

தததிகமான பகவத்ப்ராப்திஸுகத்தை விமர்சியாதவர்கள். பகவத்ப்ராப்திகாமராகிறார்:— ப்ரக்ருதே:பரனாய், நித்யனாய், நிர்மலனாய், ஜ்ஞாநாநந்தமயனுமாய், அபரிச்சிந்நஜ்ஞான குணகனுமாய், பகவதநந்யார்ஹசேஷமாகையாலே அநந்யபோக்யமான ஆத்மாவுக்கு, ஸ்வாநுபவம் அணுவாய், ஸ்வதந்த்ரமாகையாலே ஸ்வரூபவிருத்தமென்று விஷம்போலே அநாதரித்து; நித்யமாய், நிர்மலமாய், அபரிச்சிந்நஜ்ஞாநாநந்தமயமான ஸ்வரூபத்தையுடையனாய், ஸர்வசேஷியாய், ஸர்வசரண்யனாய், ஸர்வப்ராப்யனான ச்ரிய:பதியினுடைய திருவடிகளிலே நித்யகைங்கர்யத்தைப் பரமபுருஷார்த்தமாக நிச்சயித்து, ஒரு தேசவிசேஷத்திலும், தேஹவிசேஷத்திலுமன்றியே ஸித்திப்பதாகையாலே, தத்ப்ராப்திக்கு விரோதியான தேசஸம்பந்தமும், தேஹஸம்பந்தமும் விடவேணுமென்று ஆசைப்படுமவர்கள். இவர்களும், உபாஸகநிஷ்டரென்றும், ந்யாஸநிஷ்டரென்றும் த்விவிதம். உபாஸகநிஷ்டராகிறார்:— பலஸங்கபரித்யாகபூர்வகமாக யஜ்ஞதாநாதிகர்மங்களை அநுஷ்டிக்க விபரீதஜ்ஞாநஹேதுவான ரஜஸ்தமஸ்ஸுக்கள் நன்றாக நசித்து, யதாஜ்ஞாநஹேதுவான ஸத்வப்ரகாசத்து, அதனாலே பகவத்ஜ்ஞாநமுண்டாய், அது ஸாக்ஷாத்காரஸமானமாய், அநவரதபாவனையுண்டாய், பக்திரூபாபந்நமாய், ஸம்ச்லேஷவிச்லேஷங்களிலே ஸுகதுக்கங்களைப் பண்ணுவதாய், சாஸ்த்ரத்திலே மோக்ஷஸாதநதயா விஹிதையான பக்தியை உபாயமாக அவலம்பித்தவர்கள். ந்யாஸநிஷ்டராகிறார்:— உபாஸநமும் அநேகஜந்மஸாத்யமாகையாலே துஷ்கரமென்றும், தேசகாலாதிகாரிப்ரந்ருத்யநேகநியமாபேக்ஷமாகையாலே ஸாபாயமென்றும், ப்ராரப்தகர்மாவஸாநபலமாகையாலே விளம்பமென்றும், அசேதநமாகையாலே அஸமர்த்தமென்றும், ஸ்வயத்நஸாத்யமாகையாலே ஸ்வரூபவிருத்தமென்றும், பின்னையுஞ் சொல்லப்படுகிற உபாயாபாஸங்களெல்லாவற்றையும் ஸாங்கமாகவும் ஸவாஸநமாகவும் விட்டு, அந்த உபாயங்கள்போலன்றிக்கே நிவ்ருத்திஸாத்யமாகையாலும், ஸக்ருதநுஷ்டேயமாகையாலும், ஸுகரமுமாயும், ஒரு நியமமும் வேண்டியிராமையாலே நிரபாயமாயும், தேஹாவஸானபலிதமாகையாலே சீக்ரபலப்ரதமாயும், பரமசேதநமாகையாலே பலப்ரதாநத்தில் ஸ்வயம் ஸமர்த்தமாயும், நிருபாதிகமாகையாலே ஸ்வரூபாநுரூபமான ச்ரிய:பதியினுடைய திருவடிகளையே விலக்ஷணோபாயமாக நிச்சயித்து, அதிலே ந்யஸ்தபரராயிருக்குமவர்கள். இந்த ந்யாஸநிஷ்டரும், ஸ்வயம் ந்யஸ்தபரரென்றும், பரந்யஸ்தபரரென்றும் த்விவிதம். ஸ்வயம் ந்யஸ்தபரராகிறார்:— ஸதாசார்யக்ருபையாலே லப்தஜ்ஞாநராய், ஸ்வதோஷத்தை அநுஸந்தித்து, ஹிதபரனான ஸர்வேச்வரன் ஸ்ரீபாதத்தைத் தாங்களே ஆச்ரயிக்கவஞ்சி, ஸர்வேச்வரனுக்குப் பத்நியாய், வல்லபையாய், ஸர்வாத்மாக்களுக்கும் ஸ்வாமினியாய், மாதாவாய், அவனோடே நித்யஸம்யுக்தையான பிராட்டி ப்ரஸாதத்தாலே பயங்கெட்டு, வாத்ஸல்யாதிஸமஸ்தகல்யாணகுணகணவிசிஷ்டனான ச்ரிய:பதியினுடைய திருவடிகளைத் தம்முடைய அநிஷ்டநிவ்ருத்திக்கும், இஷ்டப்ராப்திக்கும் உபாயமாக ஆச்ரயிக்குமவர்கள். பரந்யஸ்தபரராகிறார்:— தங்களுக்காக ஆசார்யனாலே அநுஷ்டிக்கப்பட்ட ஏதாத்ருசந்யாஸத்தையுடையவர்கள். இவரும் ஸநிபந்தநபரந்யஸ்தபரரென்றும், நிர்நிபந்தநபரந்யஸ்தபரரென்றும் த்விவிதமாயிருப்பர்கள். ஸநிபந்தநபரந்யஸ்தபராகிறார்:— தன்னுடைய அநுவர்த்தநாதிகளாலே மந்த்ரப்ரதனான ஆசார்யனாலே அநுஷ்டிக்கப்பட்ட பரந்யாஸத்தை உடையவர்கள். நிர்நிபந்தனபரந்யஸ்தபரராகிறார்:— தனக்கு ப்ராப்தமான புருஷார்த்தத்தினுடைய உக்தவைலக்ஷண்யத்தை அநுஸந்தித்து, அது இவர்களுக்கு

இல்லாதமாத்ரமன்றிக்கே, இவர்கள் படுகிற துர்க்கதியைக் காணப்பொறுத கேவலக்ருபையாலே ப்ரீதனான ஆசார்யனாலே அனுஷ்டிக்கப்பட்ட பரந்யாஸத்தை உடையவர்கள். இவர்களில், ஸம்ஸாரிகள், ஈச்வரனுடைய சிக்ஷைக்கு விஷயமானவர்கள். கேவலர், உபேக்ஷைக்கு விஷயமானவர்கள். உபாஸகர், அநுக்ரஹத்துக்கு விஷயமானவர்கள். ப்ரபன்னர், க்ருபைக்கு விஷயமானவர்கள். ப்ரபன்னரெல்லாருக்கும் தேஹாவஸாநத்திலே பலமேயொக்கும். உத்தரோத்தராதிகாரிகள் பாக்யாதிகாரிகள். இவர்கள் ஆர்த்தாதிகாரிகளென்றும், த்ருப்தாதிகாரிகளென்றும் த்விவிதம். ஆர்த்தாதிகாரிகளாகிறார்:— பகவத்ப்ராப்திக்கு விரோதியான வர்த்தமானசரீரத்தில் ஸ்திதியும், அக்நிஜ்வாலாபஞ்ஜரத்திலிருப்புப்போலே அத்யந்தது:ஸ்ஸஹமாய்த் தோற்றித் தந்நிவ்ருத்திக்கு த்வரிக்குமவர்கள். த்ருப்தராகிறார்:— பகவத்ப்ராப்திக்கு விரோதியான தேஹாந்தரஸம்பந்தமும், ஸ்வர்க்கநரகாதிப்ரவேசத்தில் விரக்தியும், பீதியுமுண்டாய், தந்நிவ்ருத்திக்கு பகவானை ஆச்ரயித்து, வர்த்தமான சரீர வியோகத்துக்கு த்வரியாதவர்கள். இவரும், ஸ்வதேஹஸம்பந்தத்ருப்தரென்றும், ஸ்வதேஹிஸம்பந்தத்ருப்தரென்றும் த்விவிதராயிருப்பர்கள். ஸ்வதேஹஸம்பந்தத்ருப்தராகிறார்:— சரீராவஸாநத்தில் போகமெத்தனையேனும் விலக்ஷணமானாலும், ருசிவாஸனைகளாலே இத்தைவிட த்வரியாதவர்கள். ஸ்வதேஹிஸம்பந்தத்ருப்தராகிறார்:— தனக்கும் அவனுக்கும் உண்டான நிருபாதிகசரீரசரீரிஸம்பந்தத்தை அநுஸந்தித்து, அவனுடைய கார்யமென்று த்வரியாதே ஐஹிகபோகதாஸ்யத்தில் மண்டியிருக்குமவர்கள். ஆர்த்தராகிறார்:— பகவத்ப்ராப்திக்கு விரோதியான வர்த்தமானசரீரத்தில் ஸ்திதியும் அக்நிஜ்வாலாபஞ்ஜரத்திலிருப்புப்போலே அத்யந்ததுஸ்ஸஹமாய்த் தோன்றி, தந்நிவ்ருத்திக்கு த்வரிக்குமவர்கள். இவரும், ப்ரதிகூலபோகார்த்தரென்றும், அநுகூல போகார்த்தரென்றும் த்விவிதம். ப்ரதிகூலபோகார்த்தராகிறார்:— ப்ரத்யக்ஷஸித்தமான தாபத்ரயதுக்கம் அதிதுஸ்ஸஹமாய்த்தோன்றி, அதுக்கு ஹேதுவான தேஹஸம்பந்தத்தையும், தேசஸம்பந்தத்தையும், தேசிகருடைய ஸஹவாஸத்தையும் பொறுதே சாஸ்த்ரத்ருஷ்டிகளாலும் ஆசார்யர்களுடைய வசநங்களாலும் அறியப்படுமதாய், அந்த துக்கந்தமின்றிக்கே, நிரதிசயமான பகவத்ப்ராப்திரூபஸுகத்துக்கு த்வரைப்படுமவர்கள். அநுகூலபோகார்த்தராகிறார்:— நிரந்தரமான த்யாநாநுஸந்தானத்தாலே தனக்கு ப்ராப்யமான பரமபதத்தில் நித்யவாஸத்தினுடைய வைலக்ஷண்யம் விசதமாக ப்ரகாசிக்க, அதில்லாத க்ஷணகாலமும் கல்பஸஹஸ்ரமாய்த் தோன்றும்படி ஆர்த்தராய், ஏதத்ப்ராப்திக்கு த்வரிக்கிறவர்கள். இந்த ப்ரபன்னவிஷயமான உபாயக்ருத்யம், அநிஷ்டநிவ்ருத்தியும், இஷ்டப்ராப்தியுமென்று த்விவிதமாயிருக்கும். அநிஷ்டந்தான், பூர்வாகமென்றும், உத்தராகமென்றும் த்விவிதமாயிருக்கும். அகமாகிறது, புண்யபாபரூபமான கர்மம். ஸ்வர்க்காதிஸாதநமாக புண்யமும் பாபம்போலே பேற்றுக்கு ப்ரதிபந்தகமாகையாலே அகமெனப்பட்டது. இதிலே பூர்வாகமாகிறது:— ஆச்ரயணத்துக்கு முன்பு அநாதிகாலம் பண்ணப்பட்ட கர்மம். இதுவும் ஸஞ்சிதமென்றும், ப்ராரப்தமென்றும் த்விவிதமாயிருக்கும். ஸஞ்சிதமாகிறது:— பலப்ரதானத்துக்கு உத்யோகியாமலிருக்கிறது. ப்ராரப்தமாகிறது, பலப்ரதானத்துக்கு உத்யோகிக்கிறது. ப்ராரப்தமும், வர்த்தமான சரீராரப்தமென்றும், சரீராந்தராரப்தமென்றும் த்விவிதம். உத்தராகமாகிறது, ஆச்ரயணத்துக்கநந்தரம் தேஹாவஸாநபர்யந்தம் வாஸநாபலத்தாலே செய்யப்பட்ட கர்மம். இதுவும், ஜ்ஞாநக்ருதமென்றும், அஜ்ஞாநக்ருதமென்றும், த்விவிதமாயிருக்கும். இதுவும் ஸாநுதாப

மென்றும், நிரநுதாபமென்றும் ஒரொன்றே த்விவிதமாயிருக்கும். இப்படிப்பட்ட பேதங்களை
யுடைத்தான அநிஷ்டத்தை இவனிடத்தில் ப்ரீத்யதிசயத்தாலே உபாயபூதனான ஈச்வரன்
போக்கும்படியென்னென்னில்:— வர்த்தமானசரீராரப்தத்தையொழித்து, பூர்வாகத்தில்
புண்யாம்சத்தை இவனை ஸ்நேஹித்தவர்களை அநுபவிப்பிக்கும். பாபாம்சத்தை த்வேஷித்த
வர்களை அநுபவிப்பிக்கும். சரீராரப்தத்தை சரீரத்தோடே போக்கும். இவனுக்கு எப்போதும்
அநுகூலபோகார்த்தியுண்டாம். அந்த ஆர்த்திரூபமான மஹாதுக்கத்தினாலும், தத்தேஹது
வான அநுபவாஹ்லாதரூபமான மஹாஸுகத்தினாலும், சரீராநுபாவ்யத்தையெல்லாம்
அப்போதே போக்கும். உத்தராகத்தில் அஜ்ஞாநக்ருதமும், அவனுடைய வாத்ஸல்யத்தினாலே
திருவுள்ளத்துக்கு விஷயமன்றிக்கே போம். ஸாநுதாபமாக ஜ்ஞாநக்ருதமும், அவனுடைய
க்ஷமைக்கு விஷயமாம்; அது பகவத்விஷயமானால் பகவத்விஷயமான அநுதாபத்திலே போம்.
பாகவதவிஷயமானால் பாகவதவிஷயத்தில் அநுதாபத்திலே போம். நிரநுதாபஜ்ஞாநக்ருதமும்,
சரீராநுபாவ்யம்போலே அநுபவித்துப் போக்குவன். ஸாமாந்யநிஷித்தாநுஷ்டாநமும்,
பகவந்நிக்ரஹஹேதுவாகையாலும், இஷ்டஜநகர்ஹிதமாகையாலும் க்ரூரம். பகவத்விஷயமான
அநுதாபசூந்யமும் க்ரூரதரம். பாகவதவிஷயமான அநுதாபசூந்யமும் க்ரூரதமம்.
ஆகையாலே ப்ரபன்னன் பகவத்பாகவதப்ரஸாதத்துக்கொழிய க்ஷமைக்கு விஷயமாகை
அநுரூபமல்லாமையாலே ஸாவதாநத்தோடே நடக்கவேணும். ஆகையாலே, ஜ்ஞாநக்ருதமான
ஸாநுதாபமும் உதிக்கைக்கு அவகாசமில்லாமையாலே அநுதாபசூந்யமும் தூரதோ நிரஸ்தம்.
ஆனாலும் சத்ருசகடிநப்ராக்ருதிகளுண்டாகுவரோ என்று சாஸ்த்ரம் சொல்லிற்றாயிற்று.
இப்படி ஸர்வமான கர்மங்களும் நிவர்த்யங்களாகையாலே தத்கார்யமான தேஹஸம்பந்த
மில்லை. தேஹஸம்பந்தமில்லாமையாலே தத்கார்யமான அவித்யையில்லை. இம்மூன்று
மில்லாமையாலே தத்தத்வாஸநாருசிகளில்லை. ஆகையாலே, ப்ரபன்னனுக்கு சரீராவஸாநத்
திலே தேசகாலாதிகாரிநியமங்களும், உத்தரக்ரியைகளுமுபாயமன்று. ஆனாலும் உத்தரக்ரியை
களும், ஆந்ருசம்ஸ்யத்தாலும், பகவத்ப்ரீதிஜநகங்களாகையாலும் செய்யப்படுமத்தனை. இனி,
இஷ்டப்ராப்தியும், ஐஹிகமென்றும், ஆமுஷ்மிகமென்றும் த்விவிதம். ஐஹிகம் பகவத்
கைங்கர்யமென்றும் பாகவதகைங்கர்யமென்றும் த்விவிதம். கைங்கர்யமாகிறது:— இஷ்டம்
செய்கை. அதுதான் ஸாமாந்யவிஹிதாநுஷ்டாநமும், பகவத்ஸந்தோஷஹேதுவாகையாலே,
கைங்கர்யமென்னக்கடவதிறே. பகவானுக்கு இஷ்டம் சாஸ்த்ரமுகத்தாலே அறியவேணும்.
பாகவதர்களுக்கிஷ்டம் அவர்கள் நினைவிலே அறியவேணும். ஆக கைங்கர்யமும் மாநஸ
மென்றும் காயிகமென்றும் த்விவிதம். மாநஸமாகிறது:—அந்யபரமாகாமல் தத்பரமாக்குகை.
அதுவும், செய்த உபகாரத்தை ஸ்மரிக்கையும், செய்யக்கடவ உபகாரத்தை அபேக்ஷிக்கையு
மென்று த்விவிதம். இதில் ஈச்வரன் செய்த உபகாரமாகிறது:— ஸதாசார்யனை ஆச்ரயிப்
பிக்கையும், ததர்த்தமான அதிகாரி ஸம்பத்தும். செய்யத்தக்க உபகாரமாகிறது:— பரம
பதத்தில் நித்யகைங்கர்ய ப்ராப்தியும், ததர்த்தமான அதிகாரிஸம்பத்தும். ஆமுஷ்மிகமான
கைங்கர்யமும் இதுவே. அந்த கைங்கர்யமும், வாசிகமென்றும், காயிகமென்றும் த்விவிதம்.
வாசிகமாகிறது:— ஸ்துதி, நாமஸங்கீர்த்தநாதிகள். காயிகமாகிறது:— ஸம்மார்ஜநமாலா
பந்தநாதிகள். பாகவதகைங்கர்யமும், ஆசார்யகைங்கர்யமென்றும் தத்துல்யரான பாகவத
கைங்கர்யமென்றும் த்விவிதம். ஆசார்யரும், மந்த்ரப்ரதரென்றும், மந்த்ரார்த்தப்ரதரென்றும்

த்விவிதம். இவர்கள் பக்கல் செய்யும் ப்ரதிபத்தி ஸமமாயிருக்கும். பகவானுடைய திருவடிகளிரண்டிலும் வைஷம்யமுண்டாகிலிறே ஆசார்யவிஷயத்தில் வைஷம்யமுண்டாவது? இப்படிப்பட்ட ஆசார்யர்கள் செய்த உபகாரமாகிறது:— அநாதிகாலம் விமுகனான சேதனனை பகவத்விஷயத்தில் அபிமுகனாகச் செய்கையும், மந்த்ரார்த்தமுகத்தாலே அஜ்ஞாநத்தை நிரஸித்து, ஜ்ஞாநத்தை உண்டாக்கி, ததநுரூபமான வ்ருத்தியிலே நியமித்து, ததீயாந்தர்ப்பாவத்தை உண்டாக்குகையும், கைங்கர்யங்கொள்ளுகையும். இனி பாகவதர் செய்த உபகாரமாவது:— குணலேசமின்றிக்கே தோஷங்களினாலே பூர்ணனான தன்னை, ஆசார்ய ஸம்பந்தத்தையே பார்த்து ஸ்வரூபானுரூபமான போகத்திலே கூட்டிக்கொண்டு கைங்கர்யத்துக்கு விஷயமாக்குகை. இனி லீலோபகரணமான அசேதநமும், ப்ரக்ருதியென்றும் காலமென்றும் த்விவிதம். ப்ரக்ருதியாகிறது:— ஸத்வரஜஸ்தமோகுணாத்மகமாய், நித்யமாய், தன்னோடே ஸம்பந்தித்த சேதநருக்கு தத்தத்கர்மாநுகுணமான தேஹேந்த்ரியாதிரூபமாய், அநேகவிகாரங்களையுடைத்தானதாய், சப்தாதிவிஷயப்ராவண்யத்தையும், பகவத்விஷய வைமுக்யத்தையும் பிறப்பிக்குமதாயிருக்கும் அசித்விசேஷம். காலமாகிறது:— நித்யமாய், நிமேஷகாஷ்டாதிரூபமான பஹுவிகாரங்களை உடைத்தாய், சேதநருடைய கர்மத்துக்கும் ததநுகுணரூபமான போகத்துக்கும் ஹேதுவாயிருக்கும். இனி லீலாபரிகரமும் போகபரிகரமுமான சேதநாசேதநவர்க்கம், ஸ்வவிசேஷ்யமான ப்ரஹ்மத்துக்கு வ்யாப்யமாய், தார்யமாய், நியாம்யமாய், சரீரமாய், சேஷமாயிருக்கும். இனி விசேஷ்யமும், அகிலஹேயப்ரத்யநீகமாய், கல்யாணைகதாநமாய், ஸதைகரஸமாய், விபுவாய், நித்யமாய், ஜ்ஞாநாநந்தங்களை ஸ்வரூபமாகவுடையதுமாய், ஜ்ஞாநசக்த்யாத்யநந்தகுணகணபூஷிதமாய், ஸ்வவிசேஷணமான ஸகலசேதநாசேதநங்களுக்கும் வ்யாபகமாய், தாரகமாய், நியாமகமாய், சரீரியாய், சேஷியாய், விலக்ஷணவிக்ரஹயுக்தமாய், லக்ஷ்மீபூமிநீளாஸமேதமாய், நித்யமுக்தாநுபாவ்யமாய், ஸகலஜகத்ஸ்ருஷ்டிஸ்திதிஸம்ஹாரகர்த்தாவாய், ஸர்வலோகசரண்யமாய், ஸகலபலப்ரதமாய், ப்ரஹ்மருத்ராதிதேவதைகளுக்கும், ஸநகஸநந்தநாதியோகிகளுக்கும் அவாங்மநஸகோசரமாய், ச்ருத்யேகஸமதிகம்யமாய், ஸமாச்ரிதைகஸுலபமாய், ததுஜ்ஜீவநைகப்ரயோஜநமாய், பரவ்யூஹவிபவாந்தர்யாம்யர்ச்சாவதாரரூபங்களை உடைத்தாயிருக்கும். இப்படிப்பட்ட ஸமஸ்தவிசேஷணவிசிஷ்டமான ப்ரஹ்மமொன்றையுமறிந்த அதிகாரி வேறொன்றையுமறியவேண்டாத க்ருதக்ருத்யன். இந்த அதிகாரியே ஜ்ஞாநாதிகரான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் நித்யமுக்தர்களுக்கும், ஆசார்யனுக்கும், பிராட்டிக்கும், ச்ரிய:பதிக்கும் அத்யந்தப்ரியதமன்.

ஸகலப்ரமாணதாத்பர்யம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*——————*

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# ரஹஸ்யத்ரய தீபிகை.

---

ஸ்ரீமத்க்ருஷ்ணஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபச் ஸ்ரீதரஸ்ஸதா.

---

"ப்ராப்யஸ்ய ப்ரஹ்மணோ ரூபம் ப்ராப்துச்ச ப்ரத்யகாத்மந:, ப்ராப்த்யுபாயம் பலம் ப்ராப்தேஸ் ததா ப்ராப்திவிரோதி ச, வதந்தி ஸகலா வேதாஸ் ஸேதிஹாஸபுராணகா:, முநயச்ச மஹாத்மாநோ வேதவேதாந்தவேதிந:" என்கிறபடியே ஸகலவேதாந்தப்ரதிபாத்யமான அர்த்த பஞ்சகத்தைத் திருமந்த்ரத்தில் விவரிக்கிறபடி எங்ஙனேயென்னில்: ப்ரணவத்தில் அர்த்த பஞ்சகத்தை விவரிக்கிறபடி எங்ஙனேயென்னில்: மகாரத்தாலே ஸ்வஸ்வரூபம் சொல்லிற்று. அகாரத்தாலே பரஸ்வரூபம் சொல்லிற்று. உகாரத்தாலே விரோத்யுபாயங்களைச் சொல்லிற்று. அகாரத்தில் சதுர்த்தியாலே புருஷார்த்தஸ்வரூபம் சொல்லிற்று.

அகாரத்தில் அர்த்தபஞ்சகத்தை விவரிக்கிறபடி எங்ஙனேயென்னில்: அகாரத்தால் பரஸ்வரூபமும், அதில் சதுர்த்தியாலே ஸ்வஸ்வரூபபுருஷார்த்தஸ்வரூபங்களையும், அதில் 'அவ-ரக்ஷணே' என்கிற தாதுவினாலே விரோத்யுபாயங்களையும் சொல்லிற்று. ப்ரணவத்தில் லுப்தசதுர்த்தியாலே சேஷத்வத்தைச்சொல்லி, அகாரத்தாலே சேஷத்வப்ரதிஸம்பந்தியைச் சொல்லி, மகாரத்தாலே சேஷத்வாச்ரயஞ்சொல்லி, அவதாரணத்தாலே சேஷத்வத்தினுடைய அநந்யார்ஹதையைச்சொல்லி, ஸ்வஸ்வரூபம் சொல்லிற்று. அகாரத்தாலே ரக்ஷகனைச் சொல்லி மகாரத்தாலே ரக்ஷ்யவஸ்துவைச்சொல்லி, சதுர்த்தியாலே ரக்ஷ்யரக்ஷகபாவத்துக்கு வேண்டும் உறவு சொல்லி, அவதாரணத்தாலே ரக்ஷ்யரக்ஷகங்களினுடைய லக்ஷ்யலக்ஷணம் சொல்லுகையாலே உபாயம் சொல்லிற்று. ப்ரணவத்தாலே ஆத்மஸ்வரூபம் சொல்லிற்று. "நாராயண" பதத்தாலே பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று. சதுர்த்தியாலே புருஷார்த்த ஸ்வரூபம் சொல்லிற்று. நமஸ்ஸில், (ம:) என்கிற இத்தாலே விரோதிஸ்வரூபம் சொல்லிற்று. (நம:) என்கிற இத்தாலே உபாயஸ்வரூபம் சொல்லிற்று. ஆகையாலே, ஸகலவேதார்த்த ப்ரதிபாத்யமான அர்த்த பஞ்சகம் சொல்லிற்றாயிற்று.

"இவ்வாத்மாவுக்கு எம்பெருமான் கட்டின ஸூத்ரம் திருமந்த்ரம்" என்று பிள்ளை திருநறையூரரையர் அருளிச்செய்வர். ஸம்ஸாரவர்த்தகமான தாலிக்கயிறு பதினறிழையாய், இரண்டு சரடாயிருக்கும். கைங்கர்யவர்த்தகமான மங்களஸூத்ரம் எட்டிழையாய் மூன்று சரடாயிருக்கும். ஸ்வரூபத்தினுணர்த்தியைப்பற்றியிருப்பதொரு சரடும்; ஸ்வரக்ஷணத்தில் அசக்தியைப்பற்றியிருப்பதொரு சரடும்; ஸ்வரூபத்தினுணர்த்தியாலும், ஸ்வரக்ஷணத்தில் அசக்தியாலும், பலித்த அர்த்தம் ஈச்வரனைப் பேறுகை; இதை வெளியிட்டிருப்பதொரு சரடுமாயிருக்கும். சேஷத்வஜ்ஞாநமில்லாதார்க்கு ப்ரணவத்தில் அந்வயமில்லை. தேஹாத்மாபிமானிகளுக்கு நமஸ்ஸில் அந்வயமில்லை. கைங்கர்யருசியில்லாதார்க்கு நாராயணபதத்தில் அந்வயமில்லை. சேஷத்வஜ்ஞானமிருக்கும்படியை இளையபெருமான் ஆசரித்துக்காட்டினார்; ஈச்வரசேஷபூதன் அந்யசேஷத்வநிவர்த்தகனென்றும், விலக்ஷணநிரூபகனென்றும், அஹங்காரநிவர்த்தகனென்றும், ததீயபாரதந்த்ரனென்றும், தத்ஸம்பந்தயுக்தனென்றும், கிங்கரத்வபாலனென்றும் தன்னை அநுஸந்திப்பான்.

ப்ரமாணப்ரமேயப்ரமாதாக்களைச் சேர அநுஸந்திக்கும்படி:— ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அநந்யார்ஹசேஷத்வம்; ஏதத்ப்ரகாசகம் ப்ரணவம்; அநந்யார்ஹசேஷத்வப்ரதிஸம்பந்தி பெருமாள் பொருந்தவிட்ட திருவடிகள். ஆத்மாவுக்கு ஸ்வரூபம் அநந்யசரணத்வம்; ஏதத்ப்ரகாசகம் நமஸ்ஸு; அநந்யசரணத்வப்ரதிஸம்பந்தி, பெருமாளமைத்த திருக்கை. ஆத்மாவுக்கு ஸ்வரூபம், அநந்யபோக்யத்வம்; ஏதத்ப்ரகாசகம் நாராயணபதம்; அநந்யபோக்யத்வப்ரதிஸம்பந்தி பெருமாள் திருமுறுவல். இதுக்குக் கருத்து:—தானறிகை, சேதநமறிகை, ஸாராந்தரமறிகை. அதாவது:— பேறறிகை, வ்யாபாரமறிகை, விஷயாந்தரமறிகை. ஸ்வாதந்த்ர்யம் மேலிட்டால் ப்ரணவத்தில் ப்ரதமாக்ஷரத்தின் அர்த்தத்தை அநுஸந்திப்பான். இதரர் பக்கல் சேஷத்வப்ரதிபத்தி நடையாடிற்றாகில், உகாரார்த்தத்தை அநுஸந்திப்பான். 'தேஹோஹம்' என்றிருந்தானாகில், மகாரார்த்தத்தை அநுஸந்திப்பான். ஸ்வரக்ஷணவிஷயத்தில் கரைந்தானாகில், நமச்சப்தார்த்தத்தை அநுஸந்திப்பான். ஈச்வரவிபூதிகளோடே கலங்காநின்றானாகில், நாரசப்தார்த்தத்தை அநுஸந்திப்பான். ஆபாஸபந்துக்கள் பக்கல் பந்துத்வம் நடையாடிற்றாகில், அயநசப்தார்த்தத்தை அநுஸந்திப்பான். சப்தாதிவிஷயங்களிலே போக்யதாபுத்தி நடையாடிற்றாகில், 'ஆய' சப்தார்த்தத்தை அநுஸந்திப்பான்.

ப்ரமாணம் பதத்ரயாத்மகமாயிருக்கும். ப்ரமேயம் பர்வத்ரயாத்மகமாயிருக்கும். அதிகாரி ஆகாரத்ரயாத்மகமாயிருக்கும். ப்ரமாணம் பதத்ரயாத்மகமாகையாவது:— ப்ரதமபதம், மத்யமபதம், த்ருதீயபதம். ப்ரமேயம் பர்வத்ரயாத்மகமாகையாவது:— பொருந்தவிட்ட திருவடிகளும், அஞ்சலென்ற திருக்கையும், சிவந்த திருமுகமண்டலமும். அதிகாரி ஆகாரத்ரயாத்மகமாகையாவது:— அநந்யார்ஹசேஷபூதனாய், அநந்யசரணனாய், அநந்யபோக்யனாயிருக்கை. ப்ரதமபதம் அநந்யார்ஹசேஷத்வப்ரகாசகம். பொருந்தவிட்ட திருவடிகள் அநந்யார்ஹத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியாயிருக்கும். மத்யமபதம் அநந்யசரணத்வத்துக்கு ப்ரகாசகமாயிருக்கும். அஞ்சலென்ற திருக்கை அநந்யசரணத்வத்துக்கு ப்ரதிஸம்பந்தியாயிருக்கும். த்ருதீயபதம் அநந்யபோக்யத்வப்ரகாசகமாயிருக்கும். சிவந்த திருமுகமண்டலம் அநந்யபோக்யத்வப்ரதிஸம்பந்தியாயிருக்கும். திருமந்த்ரத்தாலே திருவபிஷேகத்தை அநுஸந்திப்பான். சரமச்லோகத்தாலே திருமார்பில் நாச்சியாரோட்டைச் சேர்த்தியை அநுஸந்திப்பான். த்வயத்தாலே திருவடிகளை அநுஸந்திப்பான்.

அர்த்தபஞ்சகத்தையும் ரஹஸ்யத்ரயத்திலே சொல்லுகிறபடி எங்ஙனேயென்னில்: திருமந்த்ரத்தில் நாராயணபதத்தாலே பரமாத்மஸ்வரூபம் சொல்லி, ப்ரணவத்தாலே ஆத்மஸ்வரூபம் சொல்லி, சதுர்த்தியாலே புருஷார்த்தஸ்வரூபம் சொல்லி, "நம:" என்று உபாயஸ்வரூபம் சொல்லி, நமச்சப்தத்திலே ஷஷ்ட்யந்தமான மகாரத்தாலே விரோதிஸ்வரூபம் சொல்லிற்று. சரமச்லோகத்தில் "மாம்" "அஹம்" என்கிற பதங்களாலே பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று. "வ்ரஜ" என்கிற மத்யமனாலும், "த்வா" "மா சுச:" என்கிற பதங்களாலும் ஸ்வஸ்வரூபம் சொல்லிற்று. "ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி" என்கையாலே அநிஷ்டநிவ்ருத்திபூர்வகமான புருஷார்த்தஸ்வரூபம் சொல்லிற்று. "ஸர்வபாபேப்ய:" என்று விரோதிஸ்வரூபம் சொல்லிற்று. ஏகபதத்தாலே உபாயஸ்வரூபம் சொல்லிற்று. த்வயத்தில் ஸவிசேஷமான நாராயணபதத்தாலே பரமாத்மஸ்வரூபம் சொல்லிற்று. "ப்ரபத்யே" என்கிற உத்தமனாலே ஆத்மஸ்வரூபம் சொல்லிற்று. சதுர்த்தி

நமஸ்ஸுக்களாலே புருஷார்த்தஸ்வரூபம் சொல்லிற்று. நமச்சப்தத்தில், மகாரத்தாலே விரோதிஸ்வரூபம் சொல்லிற்று. 'சரணௌ' 'சரண' பதங்களாலே உபாயஸ்வரூபம் சொல்லிற்று. ஸ்வரூபம் சொல்லுகிறது திருமந்த்ரம். ஸ்வரூபாநுரூபமான உபாயத்தை விவரிக்கிறது சரமச்லோகம். இவ்விரண்டர்த்தத்திலும் ருசியுடையாருடைய அநுஸந்தான ப்ரகாரம் த்வயம். சாஸ்த்ரருசிபரிக்ருஹீதம் திருமந்த்ரம். சரண்யருசிபரிக்ருஹீதம் சரமச்லோகம். ஆசார்யருசிபரிக்ருஹீதம் த்வயம். ப்ராப்யப்ரதாநம் திருமந்த்ரம். ப்ராபகப்ரதாநம் சரமச்லோகம். புருஷகாரப்ரதாநம் த்வயம். ஆசார்யாங்கீகாரம் உடையவனுக்கு ஆசார்யன் இரங்கி திருமந்த்ரத்தில் உபதேசித்த அவ்வர்த்தத்தை க்ரமச: அநுஸந்திக்கும்படி சொல்லுகிறது. ஈச்வரசேஷபூதன், அந்யசேஷத்வநிவர்த்தகன், விலக்ஷணநிரூபகன், ததீயபாரதந்த்ரன், தத்ஸம்பந்தயுக்தன், கிங்கரஸ்வபாவனென்று தன்னை அநுஸந்திப்பது.

ஸவிபக்திகமான அகாரத்தை அநந்தராக்ஷரத்வயம் விவரிக்கிறது. அவ்வக்ஷரத்வயத்தையும் மந்த்ரசேஷபதத்வயம் விவரிக்கிறது. அப்பதத்வயத்தையும் த்வயத்தில் வாக்யத்வயம் விவரிக்கிறது. அவ்வாக்யத்வயத்தையும் சரமச்லோகத்தில் அர்த்தத்வயம் விவரிக்கிறது. அதில் அகாரத்தை அக்ஷரத்வயத்தில் ப்ரதமாக்ஷரம் விவரிக்கிறது. விபக்தியை அநந்தராக்ஷரம் விவரிக்கிறது. அதில் ப்ரதமாக்ஷரத்தை ப்ரதமபதம் விவரிக்கிறது. அநந்தராக்ஷரத்தை அநந்தரபதம் விவரிக்கிறது. அதில் ப்ரதமபதத்தை ப்ரதமவாக்யம் விவரிக்கிறது. அநந்தரபதத்தை அநந்தரவாக்யம் விவரிக்கிறது. இதில் பூர்வவாக்யத்தைப் பூர்வார்த்தம் விவரிக்கிறது. உத்தரவாக்யத்தை உத்தரார்த்தம் விவரிக்கிறது. அதில் சேஷத்வப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிற அகாரத்துக்கு அநந்யார்ஹசேஷத்வவாசகமான உகாரம் விவரணமாகிறபடி எங்ஙனே? என்னில்: அகாரவாச்யனுடைய சேஷித்வம் ஆச்ரயாந்தரங்களிலும் கிடக்குமோ? அநந்யஸாதாரணமாயிருக்குமோ? என்று ஸந்திக்தமானால், அதனுடைய அநந்யஸாதாரணத்வப்ரகாசகமாகையாலே, உகாரம் அகாரவிவரணமாகிறது. எங்ஙனேயென்னில்: உகாரத்தில் சொல்லுகிற சேதனனுடைய அநந்யார்ஹசேஷத்வம் ஸித்திப்பது அதற்கு ப்ரதிஸம்பந்தியான சேஷித்வம் ஓரிடத்திலேயாமாகில்; அங்ஙனன்றியிலே, அநேக சேஷிகளாகில், அநந்யார்ஹசேஷத்வம் ஸித்தியாது. ஆகையாலே அகாரவாச்யனுடைய ஸமாப்யதிகதாரித்ர்யத்தைச் சொல்லிற்றாயிற்று. சதுர்த்தியில் சொல்லுகிற சேஷத்வத்துக்கு ஆச்ரயவிஷயப்ரகாசகமாய்க்கொண்டு விவரணமாகிறது மகாரம். நிராச்ரயமாக தர்மத்துக்கு ஸ்திதியில்லையே. பகவத்வ்யதிரிக்தரைத் தன்னோடு பிறரோடு வாசியற அந்யராகச்சொல்லி, அவர்களுக்கு அநர்ஹன் இச்சேதநன் என்கிறது உகாரம். இதில் கழிகிற தேவதாந்தராதிமாத்ரத்தாலே அந்யசப்தத்துக்குப் பூர்த்தியில்லாமையாலே அவ்வந்யசப்தத்தில் அந்விதனான தன்னையும் கழித்து, அநந்யார்ஹத்வத்தைப் பூரிக்கிற முகத்தாலே உகாரவிவரணமாகிறது நமச்சப்தம். "அஹமபி ந மம" என்கிறபடியே ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத அத்யந்தபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது நமச்சப்தத்திலேயிறே; ஆகையாலே உகாரவிவரணமாகிறது நமச்சப்தம். சேஷத்வத்துக்கு ஆச்ரயவிசேஷப்ரகாசகமான மகாரவாச்யனுடைய சேஷத்வபூர்த்தி ப்ரகாசிப்பது "அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி:" என்கிறபடியே கிஞ்சித்காரத்தாலேயாகையாலே, கிஞ்சித்காரப்ரகாசகமாய்க்கொண்டு மகாரவிவரணமாகிறது நாராயணபதம். அத்யந்தபாரதந்த்ர்யப்ரயுக்தமாய்

வருகிற உபாயவேஷத்தினுடைய ஸ்வரூபமென்ன, இதிலேழிகைக்கு ஏகாந்தமான துறை யென்ன, அவ்வுபாயமாகச் செய்யவேண்டும் அம்சமென்ன, இவற்றை ப்ரகாசிப்பிக்கையாலே நமச்சப்த விவரணமாகிறது, த்வயத்தில் பூர்வவாக்யம். கைங்கர்யப்ரதிஸம்பந்தி ஒரு மிதுநமென்னுமிடத்தையும், அதற்குக்களையான அம்சத்தையும் ஒழித்துத் தருகையாலே நாராயணசப்தத்துக்கு விவரணமாகிறது த்வயத்தில் உத்தரவாக்யம். அவ்வுபாயஸ்வீகாரம் ஸாதநாந்தரநிவ்ருத்திபூர்வகமாகையாலே, தத்ப்ரகாசகமாய்க்கொண்டு பூர்வவாக்யத்துக்கு விவரணமாகிறது பூர்வார்த்தம். உத்தரவாக்யத்தில் சொன்ன ப்ராப்யஸித்தி விரோதி நிவ்ருத்திபூர்வகமாகக்கடவதென்று விவரிக்கிறது உத்தரார்த்தம்.

ஸர்வாதிகாரமாயும், அதிக்ருதாதிகாரமாயும், ஆசார்யருசிபரிக்ருஹீதமாயுமிருக்குள்ள வாக்யத்வயத்தில் பூர்வவாக்யம் ப்ராபகமாயிருந்ததேயாகிலும், பதத்ரயாத்மகமாயும் அர்த்தத்ரயாத்மகமாயும் இருக்கும். இதில் "ஸ்ரீமந்" என்கிற பதம் புருஷகாரம். "சரணம் ப்ரபத்யே" என்கிறபதம் அதிகாரிக்ருத்யம். நடுவே "நாராயணசரணௌ" என்கிறபதம் உபாயம். உபாயம் புருஷகாரஸாபேக்ஷமாயும் அதிகாரிஸாபேக்ஷமாயும் இருக்கும். பலத்தில் வந்தால் அந்யநிரபேக்ஷமாயும் இருக்கும். உத்தரவாக்யமும் பதத்ரயாத்மகமாயிருக்கும். அதில் "ஆய" என்கிறவிடம் கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. இதுக்குக்கீழ் கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறது. மேலில் பதம் கைங்கர்யத்தில் களையறுக்கையைச் சொல்லுகிறது.

நம்மாசார்யர்கள் திருமந்த்ரத்தையும், சரமச்லோகத்தையும் த்வயத்திலே அநுஸந்திக்குப்படி:— இதுதான் உபாயோபேயம் இரண்டையும் சொல்லுகையாலே த்வயமென்கிறது. திருமந்த்ரத்தில் உபேயப்ராதாந்யேந சொல்லுகிற அர்த்தத்தையும், சரமச்லோகத்தில் உபாயப்ராதாந்யேந சொல்லுகிற அர்த்தத்தையும், இதில் பூர்வவாக்யத்தாலும், உத்தரவாக்யத்தாலும் சொல்லுகிறது. எங்ஙனேயென்னில்: அகாரத்தில் ஸ்வரூபாநுபந்தித்வத்தால் சொல்லுகிற லக்ஷ்மீஸம்பந்தத்தையும், நாராயணபதத்திலே பிராட்டிக்கும் அந்தர்ப்பாவமுண்டாகையாலே வருகிற லக்ஷ்மீஸம்பந்தத்தையும், த்வயத்தில் உத்தரவாக்யத்தில் "ஸ்ரீமதே" என்கிற பதத்தாலே சொல்லுகிறது. அகாரத்திலே சொல்லுகிற ஸர்வரக்ஷகத்வத்தையும், அதில் விவரணமான நமஸ்ஸில் சொல்லுகிற அத்யந்தபாரதந்த்ர்யத்தையும், தத்ப்ரவ்ருத்தியை ப்ரார்த்திக்கிற சதுர்த்யர்த்தத்தையும், உத்தரவாக்யத்தில் சதுர்த்தியாலே சொல்லுகிறது. திருமந்த்ரத்தில் நமச்சப்தார்த்தமான அஹங்காரமமகாரநிவ்ருத்தியைப் பூர்வவாக்யத்தில் நமஸ்ஸிலே சொல்லுகிறது. ஆக, திருமந்த்ரம் த்வயத்தில் உத்தரவாக்யத்திலே அந்வயித்தது. இனி சரமச்லோகம் பூர்வவாக்யத்திலே அந்வயிக்கும்படி சொல்லுகிறது. "மாம்" என்கிற பதத்தில் ஸ்வரூபாநுபந்தித்வத்தால் சொல்லுகிற லக்ஷ்மீஸம்பந்தத்தையும், த்வயத்தில் பூர்வவாக்யத்தில் "ஸ்ரீமத்" பதத்தாலே சொல்லுகிறது. "மாம்" என்கிற பதத்தில் சொல்லுகிற ஸௌலப்யத்தையும், "அஹம்" என்கிற பதத்தில் சொல்லுகிற ஸ்வாமித்வத்தையும், இதில் "நாராயண" பதத்தாலே சொல்லுகிறது. "மாம்" என்கிற பதத்தில் சொல்லுகிற ஸேநாதூளியும், சிறுசதங்கையும், தாங்கின உழவுகோலும், பிடித்த சிறுவாய்க்கயிறும், நாட்டின திருவடிகளுமாய் நிற்கிற விக்ரஹத்தை த்வயத்தில் "சரணௌ" என்கிற பதத்தாலே சொல்லுகிறது. 'ஏக'சப்தத்தால் சொல்லுகிற

அவதாரணார்த்தத்தையும், ‘ சரண ’ சப்தார்த்தத்தையும், “ ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ” என்கிற விரோதிநிவ்ருத்தியையும், த்வயத்தில் சரணசப்தத்தாலே சொல்லுகிறது. “ வ்ரஜ ” என்கிற இடத்தின் அர்த்தத்தையும், “ ஸர்வதர்மாந் பரித்யஜ்ய ” என்கிற அர்த்தத்தையும், “ த்வா ” என்கிறவிடத்தில் சொல்லுகிற அதிகாரியையும், “ ப்ரபத்யே ” என்கிற க்ரியாபதத்தாலே சொல்லுகிறது. தர்மத்யாகம் அங்கே உண்டோ ? என்னில்: உபாய ஸ்வீகாரம், உபாயாந்தரநிவ்ருத்திபூர்வகமாகவல்லது இல்லாமையாலே, ஸ்வீகாரம் சொன்னவிடத்திலே த்யாகம் சொல்லுகிறது. ஆக, சரமச்லோகம் த்வயத்தில் பூர்வவாக்யத்திலே அந்வயித்தது. திருமந்த்ரத்திலும், சரமச்லோகத்திலும் சொல்லுகிற அர்த்தம் த்வயத்திலே சேர அநுஸந்திக்கும்படி சொல்லிற்றாயிற்று. சரமச்லோகத்தாலே பூர்வகண்டத்தை விசதீகரிக்கிறது. திருமந்த்ரத்தாலே உத்தரகண்டத்தை விசதீகரிக்கிறது. “ மாம் ”, “ அஹம் ” என்கிற பதங்களில் லக்ஷ்மீஸம்பந்தத்தை, பூர்வகண்டத்தில் ‘ ஸ்ரீமத் ’ பதத்தாலே சொல்லுகிறது. “ மாம் ”, “ அஹம் ” என்கிற பதங்களில் ஸௌசீல்யஸர்வஜ்ஞத்வாதிகளை த்வயத்தில் பூர்வகண்டத்தில் ‘ நாராயண ’ பதத்தாலே சொல்லுகிறது. “ மாம் ” என்கிற பதத்தில் விக்ரஹத்தையும், “ ஏகம் ” என்கிற பதத்தில் அர்த்தத: வந்த அவதாரணார்த்தத்தையும் “ சரணௌ ” என்கிற பதத்தாலே சொல்லுகிறது. சரமச்லோகத்தில் ‘ சரண ’ சப்தத்தின் அர்த்தத்தையும், இங்குற்ற ‘ சரண ’ சப்தத்தாலே சொல்லுகிறது. “ ஸர்வதர்மாந் பரித்யஜ்ய ”, “ வ்ரஜ ”, “ த்வா ”, “ ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ” என்கிற பதங்களின் அர்த்தங்களை “ ப்ரபத்யே ” என்கிற பதத்தாலே சொல்லுகிறது. அகாரத்தில் ஸ்வரூபாநுபந்தியான லக்ஷ்மீஸம்பந்தத்தையும், ‘ நாராயண ’ பதத்தில் நாரசப்தத்தின் அர்த்தத்தையும், இங்குற்ற நாராயணலக்ஷ்மீஸம்பந்தத்தையும் உத்தரகண்டத்திலே “ ஸ்ரீமதே ” என்கிற பதத்தில் சொல்லுகிறது. அகாரத்தில் அர்த்தத்தையும், லுப்தசதுர்த்தியில் அர்த்தத்தையும், உத்தரகண்டத்தில் நாராயணபதத்தாலும், சதுர்த்தியாலும் சொல்லுகிறது. ப்ரணவத்தில் மத்யமாக்ஷரத்தையும், நமஸ்ஸின் அர்த்தத்தையும், உத்தரகண்டத்தில் நமஸ்ஸாலே சொல்லுகிறது. மத்ஸ்யத்தினுடைய ஆகாரமெல்லாம் ஜலமயமாயிருக்குமாப்போலே, ஸ்ரீமானுடைய வடிவத்தையும் ஸ்ரீமயமாய் இருக்குமென்று பெரியமுதலியார் அருளிச்செய்வர்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

ரஹஸ்யத்ரயதீபிகை முற்றிற்று.

*————*

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

## * ரஹஸ்யத்ரய விவரணம்.

————

ஓரொன்றில் அநந்தங்களாய், அவச்யம் ஜ்ஞாதவ்யங்களான அர்த்தவிசேஷங்களுக்கு விவரணமாகையாலே, அதிலே ரஹஸ்யத்ரயமும் ஒருவனுக்கு ஜ்ஞாதவ்யமாகக்கடவது. எத்தை எது விவரிக்கிறதென்னில்:—

* இந்த க்ரந்தம் ‘ ரஹஸ்யத்ரய தீபிகை ’ யில் சிறிது மாறுதல்களுடன் காணப்படுகிறது.

ஸவிபக்திகமான அகாரத்தை அநந்தராக்ஷரத்வயம் விவரிக்கிறது. அவ்வக்ஷரத்வயத்தையும் மந்த்ரசேஷபதத்வயம் விவரிக்கிறது. அப்பதத்வயத்தையும் த்வயத்தில் வாக்யத்வயம் விவரிக்கிறது. அவ்வாக்யத்வயத்தையும் சரமச்லோகத்தில் அர்த்தத்வயம் விவரிக்கிறது. அதில் அகாரத்தை அக்ஷரத்வயத்தில் ப்ரதமாக்ஷரம் விவரிக்கிறது. விபக்தியை அநந்தராக்ஷரம் விவரிக்கிறது. இதில் ப்ரதமாக்ஷரத்தை ப்ரதமபதம் விவரிக்கிறது. அநந்தராக்ஷரத்தை அநந்தரபதம் விவரிக்கிறது. இதில் ப்ரதமபதத்தை ப்ரதமவாக்யம் விவரிக்கிறது. அநந்தரபதத்தை அநந்தரவாக்யம் விவரிக்கிறது. இதில் ப்ரதமவாக்யத்தைப் பூர்வார்த்தம் விவரிக்கிறது. உத்தரவாக்யத்தை உத்தரார்த்தம் விவரிக்கிறது. இதில் சேஷத்வப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிற அகாரத்துக்கு அநந்யார்ஹசேஷத்வவாசகமான உகாரம் விவரணமானபடி எங்ஙனே? என்னில்: அகாரவாச்யனுடைய சேஷித்வம் ஆச்ரயாந்தரங்களிலும் கிடக்குமோ? அநந்யஸாதாரணமாயிருக்குமோ? என்று ஸந்திக்தமானால், அதனுடைய அநந்யஸாதாரணத்வப்ரகாசகமாகையாலே, உகாரம் அகாரவிவரணமாகிறது. எங்ஙனேயென்னில்: உகாரத்தில் சொல்லுகிற சேதனனுடைய அநந்யார்ஹசேஷத்வம் ஸித்திப்பது அதற்கு ப்ரதிஸம்பந்தியான சேஷித்வம் ஓரிடத்திலேயாகில்; அங்ஙனன்றியிலே, அநேகம் சேஷிகளாகில், அநந்யார்ஹசேஷத்வம் ஸித்தியாது. அந்யராயிருப்பார் சில சேஷிகள் உண்டாகில் அந்யசேஷத்வம் ஸித்திப்பதொழிய அநந்யார்ஹசேஷத்வம் ஸித்தியாது.

ஆகையாலே அகாரவாச்யனுடைய ஸமாப்யதிகதாரித்ர்யத்தைச் சொல்லிற்றாயிற்று. சதுர்த்தியில் சொல்லுகிற சேஷத்வத்துக்கு ஆச்ரயவிசேஷப்ரகாசகமாய்க்கொண்டு விவரணமாகிறது மகாரம். நிராச்ரயமாக தர்மத்தின் ஸ்திதியில்லையே. பகவத்வ்யதிரிக்தரைத் தன்னோடு பிறரோடு வாசியற அந்யராகச்சொல்லி, அவர்களில் அந்யதமன் சேதனன் என்கிறது உகாரம். இதில் கழியுண்கிற தேவதாந்தராதிமாத்ரத்தாலே அந்யசப்தத்துக்குப் பூர்த்தியில்லாமையாலே அவ்வந்யசப்தத்தில் அந்விதனான தன்னையும் கழித்து, அநந்யார்ஹதையைப் பூரிக்கிற முகத்தாலே உகாரவிவரணமாகிறது நமச்சப்தம். " அஹமபி ந மம பகவத ஏவாஹமஸ்மி " என்கிறபடியே ஸ்வரக்ஷணத்தில் ப்ராப்தியில்லாத அத்யந்தபாரதந்த்ர்யத்தைச் சொல்லுகிறது நமச்சப்தத்திலேயிறே; ஆகையாலே உகாரவிவரணமாகிறது நமச்சப்தம். சேஷத்வத்துக்கு ஆச்ரயவிசேஷப்ரகாசகமான மகாரவாச்யனுடைய சேஷத்வபூர்த்தி பிறப்பது " அகிஞ்சித்கரஸ்ய சேஷத்வாநுபபத்தி: " என்கிறபடியே கிஞ்சித்காரத்தாலேயாகையாலே, கிஞ்சித்காரப்ரகாசகமாய்க்கொண்டு மகாரவிவரணமாகிறது நாராயணபதம். அத்யந்தபாரதந்த்ர்யப்ரயுக்தமாய் வருகிற உபாயவிசேஷத்தினுடைய ஸ்வரூபமென்ன, இதில் நிஷ்டைக்கு ஏகாந்தமான துறையென்ன, இவ்வுபாயவிசேஷமாகச் செய்யவேண்டும் அம்சமென்ன, இவற்றை ப்ரகாசிப்பிக்கையாலே நமச்சப்த விவரணமாகிறது, த்வயத்தில் பூர்வவாக்யம். கைங்கர்யப்ரதிஸம்பந்தி ஒரு மிதுநமென்னுமிடத்தையும், அதற்குக்களையானவற்றையும் கழித்துத் தருகையாலே நாராயணசப்தத்துக்கு விவரணமாகிறது உத்தரவாக்யம். அவ்வுபாயஸ்வீகாரம் ஸாதநாந்தரநிவ்ருத்திபூர்வகமாகையாலே, தத்ப்ரகாசகமாய்க்கொண்டு பூர்வவாக்யத்துக்கு விவரணமாகிறது பூர்வார்த்தம். உத்தரவாக்யத்தில் சொன்ன ப்ராப்யஸித்தி விரோதிநிவ்ருத்திபூர்வகமாகக்கடவதென்று விவரணமாகிறது உத்தரார்த்தம்.

ஸர்வாதிகாரமாயும், அதிக்ருதாதிகாரமாயும், அர்த்தத்ரயாத்மகமாயும் இருக்கும். இதில் "ஸ்ரீமந்" என்கிற பதம் புருஷகாரம். "சரணம் ப்ரபத்யே" என்கிறபதம் அதிகாரிக்ருத்யம். நடுவில் "நாராயணசரணௌ" என்கிறபதம் உபாயம். உபாயம் புருஷகாரஸாபேக்ஷமாயும் அதிகாரிஸாபேக்ஷமாயும் இருக்கும். பலத்தில் வந்தால் அந்யநிரபேக்ஷமாய் இருக்கும். உத்தரவாக்யமும் பதத்ரயாத்மகமாயிருக்கும். இதில் "ஆய" என்கிறவிடம் கைங்கர்யத்தைச் சொல்லுகிறது. இதுக்குக்கீழ் கைங்கர்யப்ரதிஸம்பந்தியைச் சொல்லுகிறது. மேலில் பதம் கைங்கர்யத்தில் களையறுக்கிறது.

ரஹஸ்யத்ரய விவரணம் முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*——————*

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# நிகமநப்படி.

## திருமந்த்ரப்ரகரணம்.

———

ஸ்ரீமத்க்ருஷ்ண ஸமாஹ்வாய நமோ யாமுநஸூநவே
யத்கடாக்ஷைகலக்ஷ்யாணாம் ஸுலபஃ ஸ்ரீதரஸ்ஸதா.

———

திருமந்த்ரம் எட்டு திருவக்ஷரமாய், மூன்று பதமாயிருக்கும். எங்ஙனேயென்னில்: "ஓம்" என்றும், "நம:" என்றும், "நாராயணாய" என்றும் மூன்று பதமாயிருக்கும். அதில் முதல் பதம் ஏகாக்ஷரமான ப்ரணவம். இது அகாரமென்றும், உகாரமென்றும், மகாரமென்றும் மூன்று திருவக்ஷரமாய் மூன்றுபதமாயிருக்கும். இரண்டாம் பதமான நமஸ்ஸு, 'ந' என்றும், 'ம:' என்றும் இரண்டு திருவக்ஷரமாய் இரண்டு பதமாயிருக்கும். மூன்றாம் பதமான 'நாராயணாய' பதம் அஞ்சு திருவக்ஷரமாய், 'நார' என்றும், 'அயந' என்றும், இரண்டு பதமாய், மேல் 'ஆய'வென்று சதுர்த்தியாயிருக்கும். எம்பெருமானுடைய ஸர்வரக்ஷகத்வமும், ஸமஸ்தகல்யாணகுணாத்மகத்வமும், ஸர்வசேஷித்வமும், ச்ரிய:பதித்வமும் இவை அகாரார்த்தம். அந்யசேஷத்வநிவ்ருத்தியும், பகவதநந்யார்ஹசேஷத்வமும் இவை உகாரார்த்தம். ஆத்மாவினுடைய ஜ்ஞாநாநந்தத்வமும், ஜ்ஞாநகுணகத்வமும், நித்யத்வமும், அணுத்வமும், ஏகரூபத்வமும், ஸ்வஸ்மை ஸ்வயம்ப்ரகாசத்வமும், ப்ரக்ருதே:பரத்வமும் இவை மகாரார்த்தம். ஸ்வாஹங்காரமமகாரநிவ்ருத்தியும், நிவ்ருத்தமான ஸ்வரூபத்தினுடைய அத்யந்தபாரதந்த்ர்யமும், பாரதந்த்ர்யபராகாஷ்டையான ததீயசேஷத்வமும், பாரதந்த்ரனுக்கு அநுரூபமான உபாயத்வமும் இவை நமச்சப்தார்த்தம். சேதநாசேதநங்களினுடைய நித்யத்வமும், அவற்றினுடைய ஸமூஹத்வமும், ஸமூஹாஸங்க்யாதத்வமும் இவை நாரசப்தார்த்தம். ஈச்வரனுடைய தாரகத்வமும், வ்யாபகத்வமும், நியந்த்ருத்வமும், ஸர்வவிதபந்துத்வமும், ப்ராப்யத்வமும், ப்ராபகத்வமும், ஸகலஜகத்காரணத்வமும் இவை அயநசப்தார்த்தம். நித்யகைங்கர்யப்ரார்த்தனை ஆயசப்தார்த்தம். எம்பெருமானைப் பெரிய ரக்ஷகாந்தராப்ரதிபத்தி நடையாடிற்றாகில் அகாரார்த்தம் நெஞ்சில்

பட்டதில்லையாகக்கடவது. அந்யசேஷத்வம் நடையாடிற்றாகில் உகாரார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. அநாத்மாவான தேஹத்தில் ஆத்மபுத்தி நடையாடிற்றாகில் மகாரார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ஸ்வஸ்வாதந்த்ர்யமும், ஸ்வரக்ஷண ப்ரதிபத்தியும், ஸ்ரீவைஷ்ணவஸாபத்தியும், உபாயாந்தரமும் நடையாடிற்றாகில் நமச்சப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. ஈச்வரசரீரபூதரான சேதநாசேதநங்களோடே ராகத்வேஷம் நடையாடிற்றாகில் நாரசப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. அபந்துக்கள் பக்கலிலே பந்துத்வப்ரதிபத்தி நடையாடிற்றாகில் அயநசப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. அபோக்யமான சப்தாதிவிஷயங்களிலே போக்யதாபுத்தி நடையாடிற்றாகில் ஆயசப்தார்த்தம் நெஞ்சில் பட்டதில்லையாகக்கடவது. திருமந்த்ரத்துக்கு தாத்பர்யார்த்தமேது? வாக்யார்த்தமேது? ப்ரதாநார்த்தமேது? அநுஸந்தாநார்த்தமேது? என்னில்: தாத்பர்யார்த்தம்:— ஸகலவேதசாஸ்த்ரஸங்க்ருஹீதம்.: வாக்யார்த்தம்:— ப்ராப்யஸ்வரூபநிரூபணம். ப்ரதாநார்த்தம்:— ஆத்மஸ்வரூபநிரூபணம். அநுஸந்தாநார்த்தம்:— ஸம்பந்தாநுஸந்தாநம். ஸம்பந்தமேதென்னில்:— அகாரபதத்தாலே பிதாபுத்ர ஸம்பந்தம் சொல்லி, "அவ-ரக்ஷணே" என்கிற தாதுவினாலே ரக்ஷ்யரக்ஷகஸம்பந்தம் சொல்லி, லுப்தசதுர்த்தியாலே சேஷிசேஷஸம்பந்தம் சொல்லி, உகாரபதத்தாலே பர்த்ருபார்யா ஸம்பந்தம் சொல்லி, மகாரபதத்தாலே ஜ்ஞாத்ருஜ்ஞேயஸம்பந்தம் சொல்லி, நம: பதத்தாலே ஸ்வஸ்வாமிஸம்பந்தம் சொல்லி, நாரபதத்தாலே சரீரசரீரிஸம்பந்தம் சொல்லி, அயநபதத்தாலே ஆதாராதேயஸம்பந்தம் சொல்லி, ஆயபதத்தாலே போக்த்ருத்வபோக்யத்வ ஸம்பந்தம் சொல்லி, ஆக திருமந்த்ரத்தால் நவவிதஸம்பந்தம் சொல்லித் தலைக்கட்டுகிறது.

---

## த்வயப்ரகரணம்.

த்வயம் இரண்டு வாக்யமாய், ஆறு பதமாய், பத்தர்த்தமாய், இருபத்தஞ்சு திருவக்ஷரமாயிருக்கும். அதில் பூர்வவாக்யம் பதினஞ்சு திருவக்ஷரமாய், உத்தரவாக்யம் பத்துத் திருவக்ஷரமாய் இருக்கும். எங்ஙனேயென்னில்: "ஸ்ரீமந்நாராயணசரணௌ சரணம் ப்ரபத்யே" என்றும், "ஸ்ரீமதே நாராயணாய நம:" என்றும் இரண்டு வாக்யமாயிருக்கும். "ஸ்ரீமந்நாராயணசரணௌ" என்றும், "சரணம்" என்றும், "ப்ரபத்யே" என்றும், "ஸ்ரீமதே" என்றும், "நாராயணாய"வென்றும், "நம:" என்றும் ஆறு பதமாய், "ஸ்ரீ" என்றும், "மந்" என்றும், "நாராயண" என்றும், "சரணௌ" என்றும், "சரணம்" என்றும், "ப்ரபத்யே" என்றும், "ஸ்ரீமதே" என்றும், "நாராயண" வென்றும், "ஆய" வென்றும், "நம:" என்றும், பத்து அர்த்தமாயிருக்கும். 'ஸ்ரீ' என்கையாலே எம்பெருமானுக்கே மறக்கவொண்ணாத பெரிய பிராட்டியாருடைய புருஷகாரத்வம் சொல்லி, 'மந்' என்கையாலே அப்புருஷகாரத்தினுடைய நித்யயோகம் சொல்லி, 'நாராயண' என்கையாலே இப்படி புருஷகாரபூதையான பெரிய பிராட்டியார் தான் குறைசொல்லிலும், "என்னடியாரது செய்யார் செய்தாரேல் நன்று செய்தார்" என்னும்படியான வாத்ஸல்யாதிகுணயோகம் சொல்லி, 'சரணௌ' என்கையாலே அக்குணங்களுக்கும் பெரிய பிராட்டியாருக்கும் ஆச்ரயணீயமான விலக்ஷணவிக்ரஹயோகம் சொல்லி, 'சரணம்' என்கையாலே அவ்விக்ரஹமே உபாயமென்னுமிடம் சொல்லி, 'ப்ரபத்யே' என்கையாலே உபாயஸ்வீகாரம் பண்ணின

அதிகாரியினுடைய அத்யவஸாயம் சொல்லி, 'ஸ்ரீமதே' என்கையாலே மிதுனமே ப்ராப்யம் என்னுமிடம் சொல்லி, 'நாராயண' என்கையாலே எம்பெருமானுடைய ஸர்வஸ்வாமித்வம் சொல்லி, 'ஆய' என்கையாலே அவன் திருவடிகளிலே பண்ணும் வ்ருத்திவிசேஷம் சொல்லி, 'நம:' என்கையாலே அவ்ருத்திக்கு விரோதியான ஸ்வாஹங்காரமமகாரநிவ்ருத்தியைச் சொல்லித் தலைக்கட்டுகிறது. த்வயத்துக்குத் தாத்பர்யார்த்தமேது? வாக்யார்த்தமேது? ப்ரதாநார்த்தமேது? அநுஸந்தாநார்த்தம் ஏது? என்னில்: தாத்பர்யார்த்தம்:— ஆசார்யருசிபரிக்ருஹீதம். வாக்யார்த்தம்:— ப்ராபகஸ்வரூபநிரூபணம். ப்ரதாநார்த்தம்:— மிதுநகைங்கர்யம். அநுஸந்தாநார்த்தம்:— ஸ்வதோஷாநுஸந்தாநம் சொல்லித் தலைக்கட்டுகிறது.

---

## சரமச்லோக ப்ரகரணம்.

சரமச்லோகம் இரண்டு அர்த்தமாய், பதினொரு பதமாய், முப்பத்திரண்டு திருவக்ஷரமாயிருக்கும். எங்ஙனேயென்னில்: "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ, அஹம் த்வா ஸர்வபாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச:" என்று இரண்டர்த்தமாயிருக்கும். "ஸர்வதர்மாந்" என்றும், 'பரித்யஜ்ய' என்றும், 'மாம்' என்றும், 'ஏகம்' என்றும், 'சரணம்' என்றும், 'வ்ரஜ' என்றும், 'அஹம்' என்றும், 'த்வா' என்றும், 'ஸர்வபாபேப்ய:' என்றும், 'மோக்ஷயிஷ்யாமி' என்றும், 'மாசுச:' என்றும் பதினொரு பதமாயிருக்கும். "ஸர்வதர்மாந்" என்கையாலே இதரோபாயங்களைச் சொல்லி, "பரித்யஜ்ய" என்கையாலே இதரோபாயநிவ்ருத்தியைச் சொல்லி, "மாம்" என்கையாலே ஸம்யக்ஜ்ஞாநோபாயம் சொல்லி, "ஏகம்" என்கையாலே உபாயநைரபேக்ஷ்யம் சொல்லி, "சரணம்" என்கையாலே உபாயத்வம் சொல்லி, "வ்ரஜ" என்கையாலே உபாயஸ்வீகாரம் சொல்லி, "அஹம்" என்கையாலே தன்னுடைய ஸர்வசக்தித்வம் சொல்லி, "த்வா" என்கையாலே உபாயஸ்வீகாரம் பண்ணின அதிகாரிஸ்வரூபம் சொல்லி, "ஸர்வபாபேப்ய:" என்கையாலே ப்ராப்யப்ரதிபந்தகங்களைச் சொல்லி, "மோக்ஷயிஷ்யாமி" என்கையாலே ப்ராப்யப்ரதிபந்தகநிவ்ருத்தியைச் சொல்லி, "மாசுச:" என்கையாலே நிர்ப்பரத்வாநுஸந்தாநம் சொல்லித் தலைக்கட்டுகிறது. சரமச்லோகத்துக்குத் தாத்பர்யார்த்தமேது? வாக்யார்த்தமேது? ப்ரதாநார்த்தமேது? அநுஸந்தாநார்த்தமேது? என்னில்: தாத்பர்யார்த்தம்:— சரண்யருசிபரிக்ருஹீதம்; வாக்யார்த்தம்:— ப்ராபகஸ்வரூபநிரூபணம்; ப்ரதாநார்த்தம்:— ஈச்வரஸ்வரூபநிரூபணம்; அநுஸந்தாநார்த்தம்:— நிர்ப்பரத்வாநுஸந்தாநம் சொல்லித் தலைக்கட்டுகிறது.

நிகமநப்படி முற்றிற்று.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*———*

பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த

# வார்த்தாமாலை.

---

(வார்த்தாமாலையிலிருந்து தொகுக்கப்பட்டவை.)

---

1. ஒருவனுக்கு அறியவேண்டுவது:— ஸ்வரூபபுருஷார்த்தோபாயங்கள். இது தான் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும், ஸம்ஸாரிகளுக்கும் வேணும். ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸ்வஜ்ஞாந ப்ராபகஜ்ஞாநப்ராப்யஜ்ஞாநமடியாக வருவதொன்று. ஸம்ஸாரிகளுக்கு அஜ்ஞாநாந்யதாஜ்ஞாந விபரீதஜ்ஞாநமடியாக வருவதொன்று. ஸம்ஸாரிகள் ஸ்வதேஹாத்மாபிமாநமே ஸ்வரூபமென்றும், தேஹாந்தராநுபவமே புருஷார்த்தமென்றும், ஸ்வதேஹவ்யாபாரமே தத்ஸாதநமென்றும் இருப்பர்கள். இது இவர்கள் நிஷ்டை. ஸ்ரீவைஷ்ணவர்கள், பகவச்சேஷத்வமே ஸ்வரூபமென்றும், பகவத்கைங்கர்யமே புருஷார்த்தமென்றும், இப்புருஷார்த்தஸித்திக்கு தச்சரணாரவிந்தத்வயமே உபாயமென்றும் இருப்பர்கள். இது இவர்கள் நிஷ்டை. ஸ்வஸ்வரூபம்:— அநந்யார்ஹம்; பரஸ்வரூபம்:— மிதுநம்; விரோதிஸ்வரூபம்:— அஹங்காரம்; உபாயஸ்வரூபம்:— அவன்க்ருபை; பலஸ்வரூபம்:— அவன் உகந்த அந்தரங்க வ்ருத்தி; மிதுனைத்பன்னஜ்ஞாநாநந்தம்:— வடிவு; ப்ரீதி:— ஸத்தை; போகத்திலே அந்வயம். இது ஆச்சான்பிள்ளை வார்த்தை.

2. ஆச்சான்பிள்ளை கோஷ்டியில், ஸ்ரீவைஷ்ணவர்கள் திரளவிருந்து, “ தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளிச்செய்யவேணும் ” என்ன அருளிச்செய்தபடி:— “ நாம் லீலைக்கு விஷயமோ? இரக்கத்துக்கு விஷயமோ? ” என்று விண்ணப்பம் செய்ய, “ உடன்பட்டு இருந்தோமாகில், லீலைக்கு விஷயமாகிறோம்; அகப்பட்டோமென்று இருந்தோமாகில், இரக்கத்துக்கு விஷயமாகிறோம் ” என்று அருளிச்செய்தார்.

3. “ பௌருஷத்தை எறிட்டுக்கொள்ளுகை, பாரதந்த்ர்யத்தை அழிக்கை; வ்யாபாரத்தை எறிட்டுக்கொள்ளுகை, வ்யவஸாயத்தை அழிக்கை; விஷயாந்தரங்களிலே அந்வயிக்கை, வ்ருத்தியை அழிக்கை. ” என்று ஆச்சான்பிள்ளை.

4. ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் “ பாரதந்த்ர்யம் இருக்கும்படி என் ? ” என்று கேட்க, “ ஸ்வசக்திநிவ்ருத்திபூர்வகமாக ஸர்வசக்தியை அண்டைகொண்டு, உபாயத்தில் கந்தல் அற்று உபேயத்தில் த்வரை விஞ்சியிருக்கை, பாரதந்த்ர்யம் ” என்று அருளிச்செய்தார்.

5. ஆச்சான்பிள்ளை வார்த்தை:— ஒரு ஸ்ரீவைஷ்ணவர், “ விடுகை உபாயமோ ? பற்றுகை உபாயமோ? ” என்று கேட்க, “ விடுகையும் உபாயமன்று; பற்றுகையும் உபாயமன்று; விடுவித்துப் பற்றுவிக்கிறவனே உபாயம் ” என்று அருளிச்செய்தார்.

6. “ ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் ‘ ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யமோ ? ப்ராப்யாநுரூபமான ஸ்வரூபமோ ? ’ என்று கேட்க, ‘ முமுக்ஷுதசையில் ஸ்வரூபாநுரூபமான ப்ராப்யம்; முக்ததசையில் ப்ராப்யாநுரூபமான ஸ்வரூபம் ’ என்று அருளிச்செய்தார் ” என்று திருநகரிப்பிள்ளை அருளிச்செய்தார்.

7. “எம்பெருமான் உபாயமாமிடத்தில் விஷயஸாபேக்ஷனுமாய் வ்யாபாரநிரபேக்ஷனுமாயிருக்கும்” என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்வர்.

8. “நான் ஒரு நூலில் வைத்துச்சொல்லென்றால் சொல்லும் நூலில் மாலைகள் ஒரு முமுக்ஷுவுக்குப் பாவனமுமாய், போக்யமுமாய் இருக்கும்” என்று ஆச்சான்பிள்ளை வார்த்தை.

9. ஆச்சான்பிள்ளை சிறிய தாயார் பெரியபிள்ளையையும், ஆச்சான்பிள்ளையையும் ஸேவித்துப்போருகிற காலத்திலே இவள் சோகார்த்தையாக, ஆச்சான்பிள்ளை “நீ சோகிக்கிறதென்?” என்ன, “அநாதிகாலம் பாபவாஸனைகளாலே ஜந்மாதிகளிலே ஈச்வரன் இன்னம் என்னைத்தள்ளப்புகுகிறானோவென்று பயப்பட்டு நின்றேன்” என்ன, “கெடுவாய்! இது ஆர் கேடென்று இருந்தாய்? உனக்கு ஸ்ருஷ்டிக்கவேண்டுமோ? அவதரிக்கவேண்டுமோ? ‘பிறப்பில் பல் பிறவிப்பெருமான்’ என்றும், ‘பொருளென்றிவ்வுலகம் படைத்தவன்’ என்றும், ‘ஸம்பவாமி யுகே யுகே’ என்றும், ஒருவனைப்பிடிக்க ஊரை வளையுமாப்போலே ‘அகில ஜகத்ஸ்வாமி’ யாயிற்று, ‘அஸ்மத்ஸ்வாமி’ யாகைக்கன்றோ?” என்று அருளிச்செய்தார்.

10. ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாதத்திலே, ஒரு ஸ்ரீவைஷ்ணவர், “அஹங்காராதிகள் நடையாடிக்கொண்டுபோருகிற அடியேனுக்கு அக்கரைப்பட வழியுண்டோ?” என்று கேட்க அருளிச்செய்த வார்த்தை:— “போக்தாவானவன் போக்யபதார்த்தத்தைக் குலங்கொண்டே ஸ்வீகரித்துவைத்து, போககாலம் வந்தவாறே குலங்கறுத்து மணியை புஜிக்குமாப்போலே, ஆசார்யவரணம் பண்ணி சரணாகதனாயிருப்பானொரு அதிகாரிக்கு அஹங்காராதிகள் நடையாடிற்றாகிலும் கைவிடாதே ஸ்வீகரித்து, ‘தீர்ந்த அடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல’ என்கிறபடியே இவனுடைய அஹங்காராதிகளாகிற சேற்றைக் கழுவிப்பொகட்டு போக்யமான வஸ்துவை போக்தாவான எம்பெருமான்தானே புஜிக்குமென்று நினைத்திரீர்” என்று அருளிச்செய்தார்.

11. ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாதத்திலே ஸேவிப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள், ராகத்வேஷம் கொண்டாடி அவர்களிலே ஒருவர் பரிபவப்பட்டோம் என்று பட்டினிவிட “பரிபவப்படுவாரும் தாமேயாம்; பட்டினிவிடுவாரும் தாமேயாம்” என்று அருளிச்செய்தார்.

12. இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் ராகத்வேஷம் கொண்டாடிவர, “இவர்களைச் சேரவிட்டருளவேணும்” என்று ஆச்சான்பிள்ளைக்கு ஒரு ஸ்ரீவைஷ்ணவர் விண்ணப்பம் செய்ய, “ஜகத்தில் ஈச்வரர்கள் இருவர் உண்டோ?” என்று அருளிச்செய்ய, “ஆகிலும் சேரவிட்டருளவேணும்” என்ன, “ஸ்வசரீரத்தை நியமிக்கமாட்டாத நான் அந்யசரீரத்தை நியமிக்கப்புகுகிறேனோ?” என்ன, “ஆகிலும் இப்படி அருளிச்செய்யலாமோ?” என்ன, “அத்ருஷ்டத்துக்கு அஞ்சி நெஞ்சை மீட்கக் கண்டிலோம்; த்ருஷ்டத்துக்கு அஞ்சி வாயை மூடக்கண்டிலோம்; நாம் இவர்களைச் சேரவிடும்படி என்?” என்று அருளிச்செய்ய, இருவரும் அந்யோந்யம் ப்ரீதர்களாய்த் தங்களில் ஏகமநாக்களாய்விட்டார்கள்.

13. நாட்டிலே இருந்து பெருமாளை ஸேவிப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் விச்லேஷப்ரீதர்களாய்ப் போருகிறவர்கள் ஒருகால் ராகத்வேஷம் கொண்டாடி,

ஒருவர் ஆச்சான்பிள்ளை ஸ்ரீபாதத்தேறவந்து மற்றையவருடைய குற்றம் விண்ணப்பம் செய்ய, ஸேவித்திருந்தவர்களிலே சிலர் "அப்படிச் சொல்லலாமோ?" என்ன, ஆச்சான் பிள்ளை "அவர் சொல்லுகிறீர்! தண்டல் படையினனான யமன் 'பரிஹர' என்றான்; பிராட்டி 'ந கச்சிந் நாபராத்யதி' என்றாள்; ஈச்வரன் 'செய்தாரேல் நன்று செய்தார்' என்றான்; ஆழ்வார்கள் 'அவன் தமர் எவ்வினையராகிலும்' என்றார்கள். இப்படியிருக்க அவர் குற்றம் இவரையொழியச் சொல்லுவாரார்?" என்று அருளிச்செய்தார்.

14. "ஒரு ஸ்ரீவைஷ்ணவரை ஒரு ஸ்ரீவைஷ்ணவர் அமுதுசெய்யப் பண்ணும்போது இழவும், இரப்பும், இறுமாப்பும், துணுக்கமும், சோகமும், வாழ்வும் உண்டாகவேணும்" என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தருளினார்.

15. "ஸ்ரீவைஷ்ணவனுக்கு விஷயப்ராவண்யம் பத்துமுகமாக விரோதிக்கும். அவையாவன:—ஸ்வாநர்த்தம், பராநர்த்தம், சாஸ்த்ரவிரோதம், பகவந்நிக்ரஹம், பாகவதநிக்ரஹம், ஆசார்யநிக்ரஹம், விரோதிவர்த்தகத்வம், ஸ்வரூபவிரோதம், உபாயவிரோதம், உபேயவிரோதம், தேசாந்தராபாவம். தேவதாந்தரபரனுக்குக் காலாந்தரேணவாகிலும், பாகவதனாகைக்கு யோக்யதையுண்டு; விஷயப்ரவணனுக்கு நரகமொழியப் பலமில்லை. ஆகையாலே, ஸ்ரீவைஷ்ணவன் விஷயப்ரவணனாகையாவது: முதலை முடியோடே விழுங்குமாப்போலே" என்று ஆச்சான்பிள்ளை.

16. "விரோதிக்கு நல்லாரோடே செறியாதே பந்துக்களோடே செறி; பகவத்ப்ரபாவம் சொல்லுவாரோடே செறியாதே ஸ்வரூபப்ரபாவம் சொல்லுவாரோடே செறி" என்று ஆச்சான்பிள்ளை. "'வாரீர்' என்கைக்கும், 'வம்மின்' என்கைக்கும், 'பேசுமின்' என்கைக்கும், யோக்யரன்று; 'ஓட்டோம்' என்கைக்கே போக்யர் கூழாட்கள்."

17. "ஒரு வைஷ்ணவனோடே ஸஹவாஸம் பண்ணும்போது அவனுடைய குணதோஷங்களிரண்டும் நிரூபிக்கவேண்டும்; நிரூபிக்கிறது, குணங்கண்டு ஸ்துதிக்கவும், தோஷங்கண்டு தூஷிக்கவுமன்று; நாமே செறிகைக்கும், பற்றுகைக்கும்" என்று ஆச்சான்பிள்ளை.

18. "ஸ்வரூபநாசகரோடு செறிகையும் அநர்த்தம்; ஸ்வரூபவர்த்தகரோடு செறியாதிருக்கையும் அநர்த்தம்." என்றும், "அஸத்ஸங்கதி அநர்த்தத்திலே தலைக்கட்டும்; ஸத்ஸங்கதி 'ஸதா பச்யந்தி'யிலே தலைக்கட்டும்." என்றும் ஆச்சான்பிள்ளை வார்த்தை.

19. பாகவதவைபவம் சொல்லாநிற்கச்செய்தே ஒருவர் பகவத்விஷயம் சொல்ல, "இப்போது விசேஷம் சொல்லுகிறவிடத்தில் ஸாமான்யமென்?" என்று ஆச்சான்பிள்ளை.

20. ஆச்சான்பிள்ளையை ஒரு ஸ்ரீவைஷ்ணவர், "ஸ்ரீவைஷ்ணவத்வமாவது, ஸர்வோபாயசூந்யதையோ? இதரவிஷயவிரக்தியோ? ஸித்தோபாயஸ்வீகாரமோ? பகவத்ப்ரேமமோ?" என்று கேட்க, "ஸர்வோபாயசூந்யதை ஸம்ஸாரிக்கும் உண்டு. இதரவிஷயவிரக்தி க்ஷபணனுக்கும் உண்டு. ஸித்தோபாயஸ்வீகாரம் கேவலனுக்கும் உண்டு. பகவத்ப்ரேமம் ஏகாயனனுக்கும் உண்டு. ஆகையாலே, இவை இத்தனையும் அன்று; இவற்றோடே கூட பகவதநந்யார்ஹசேஷத்வஜ்ஞானத்தாலே பிறப்பதொரு தாந்திவிசேஷம். அதாவது:— பரபரிபவத்தில் நிர்தோஷத்வாநுஸந்தாநம், நிர்ப்பரத்வாநுஸந்தாநம், உபகாரஸ்ம்ருதி, இரக்கம்." என்று அருளிச்செய்தார்.

21. "மூலைகளிலையான யுவதியைப்போலே காணும், ஊமையல்லாத வைஷ்ணவன் அருளிச்செயலிலே அந்வயியாதொழிகை" என்று ஆச்சான்பிள்ளை.

22. நம்பிள்ளை ஸ்ரீபாதத்திலே ஸேவித்திருப்பார் இரண்டு ஸ்ரீவைஷ்ணவர்கள் அந்யோந்யம் பிணங்கி ஒருவரையொருவர் மடிபிடித்துக்கொண்டு செல்ல, "அதுக்கடி என்?" என்று பிள்ளை கேட்டருள, ஆச்சான்பிள்ளை "இத்தனை நாளாக ஸேவித்து நின்றதில் தேங்கின அர்த்தம் இது என்று காட்டவந்தார்கள்" என்ன, மேல் பிள்ளை அருளிச்செய்தபடி:— "பொல்லாங்கு! கோமூத்தவன் பாடே போகாமே நம் பாடே வந்தார்கள்" என்று அருளினார்.

23. "ஸ்வாபாவிகமான சேஷத்வத்தை விட்டு, ஔபாதிகமான பௌருஷத்தை ஏறிட்டுக்கொள்ளுகிற இத்தனையிறே" என்று ஆச்சான்பிள்ளை.

24. ஆச்சான்பிள்ளை:— "ஸித்தோபாயனான ப்ரபன்னனுக்கு அஞ்சு ஸ்பர்சம் பரிஹார்யம். அவையாவன:— சைவஸ்பர்சம்; மாயாவாதஸ்பர்சம்; ஏகாயநஸ்பர்சம்; உபாயாந்தரஸ்பர்சம்; விஷயாந்தரஸ்பர்சம். இவை ஐந்தும் ஐந்து அநுஸந்தானத்தாலே போம். எம்பெருமானுடைய ஸர்வஸ்மாத்பரத்வத்தை அநுஸந்திக்க சைவஸ்பர்சம் போம்; ஸமஸ்தகல்யாணகுணங்களை அநுஸந்திக்க மாயாவாதஸ்பர்சம் அறும்; ச்ரிய:பதித்வத்தை அனுஸந்திக்க ஏகாயநஸ்பர்சம் அறும்; உபாயபூர்த்தியை அனுஸந்திக்க உபாயாந்தரஸ்பர்சம் அறும்; திவ்யமங்களவிக்ரஹத்தை அநுஸந்திக்க விஷயாந்தரஸ்பர்சம் அறும்."

25. ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வம், ஸ்வரூபாநுகூலமான சேஷத்வம், ஸ்வரூபாநுகூலமான ஸேவை, ஸ்வரூபாநுகூலமான ஸஹவாஸம், ஸ்வரூபாநுகூலமான காலக்ஷேபம், ஸ்வரூபாநுகூலமான இருப்பு, ஸ்வரூபாநுகூலமான பரிக்ரஹம், ஸ்வரூபாநுகூலமான போஜனம், ஸ்வரூபாநுகூலமான அத்யவஸாயம், ஸ்வரூபாநுகூலமான அபேக்ஷை என்கிற இவை பத்தும் ஒருவனுக்கு அவச்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவது. ஸ்வரூபாநுகூலமான ரக்ஷகத்வமாவது:— தேசரக்ஷகனென்றும், தேஹரக்ஷகனென்றும், பதார்த்தரக்ஷகனென்றும், பௌருஷரக்ஷகனென்றும் சொல்லுகிற ரக்ஷகத்வங்களைத் தவிர்ந்து, தேசநிவர்த்தகனென்றும், தேஹநிவர்த்தகனென்றும், விஷயநிவர்த்தகனென்றும், பாபநிவர்த்தகனென்றும் பற்றுகை. அதாவது:— "கொடு உலகம்" என்று அஞ்சினவாறே 'கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள் செய்யும்'; "பொல்லாவாக்கை" என்று அஞ்சினவாறே 'செடியாராக்கை அடியாரைச் சேர்தல் தீர்க்கும்'; "ஐவரறுத்துத்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்" என்றவாறே 'அடியரைத்துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கொடான்'; "நமன்தமர் செய்யும் வேதனைக்கொடுங்கி நடுங்கினேன்" என்றவாறே 'நமன்தமர் என் தமரை வினவப்பெறுவாரலர்' என்னும். "அடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரம் செய்யும்" என்னக்கடவதிறே. ஸ்வரூபாநுகூலமான சேஷத்வமாவது:— இதரசேஷமென்றும், க்ருஹசேஷமென்றும், பித்ருசேஷமென்றும், தேவதாந்தரசேஷமென்றும் சொல்லுகிற ஆபாஸசேஷத்வங்களைத்தவிர்ந்து, ஸர்வேச்வரனே தாரகனென்றும், வ்யாபகனென்றும், சரீரியென்றும், சேஷியென்றும் பற்றுகை. அதாவது:— "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்" என்றும், "உன்னைவிட்டு எங்ஙனே தரிக்கேன்?" என்றும்

"என்னுடை வாழ்நாள்" என்றும், "அடியரோர்க்ககலலாமே" என்றும் இருக்கை. ஸ்வரூபாநுகூலமான ஸேவையாவது:— சேதநாந்தரஸேவையையும், தேவதாந்தரஸேவையையும், பகவத்ஸேவையையும், த்ருஷ்டப்ரயோஜனத்துக்காக ஸேவிக்கையையும், அத்ருஷ்டத்துக்கு ஹேது என்று ஸேவிக்கிற ஸேவையையும் தவிர்ந்து ஸ்வரூபப்ரயுக்தமென்று ஸேவிக்கை. அதாவது:— "சேவியேனுன்னையல்லால்" என்றும், "உன்னைச் சேவித்து" என்றும், "சீதனையே தொழுவார்" என்றும், "விழிக்கும் கண்ணிலேன் நின்கண் மற்றல்லால்" என்றுமிருக்கை. ஸ்வரூபாநுகூலமான ஸஹவாஸமாவது:— விஷயாந்தரத்துக்காகச் சேருமதும், த்ரவ்யார்ஜனத்துக்காகச் சேருமதும், பரஹிம்ஸைக்குச் சேருமதும், காலக்ஷேபத்துக்காகச் சேருமதும் தவிர்ந்து, ஸம்ஸாரத்தில் அருசி பிறக்கைக்கும், பகவத்விஷயத்திலே ருசி பிறக்கைக்கும், ஸ்வரூபத்தில் தெளிவு பிறக்கைக்கும், ஆசாரப்ரவர்த்தகனுகைக்கும் ஆவாரோடே சேருகை. அதாவது:— "பெரியோரை ஒருகாலும் பிரிகிலேன்" என்றும், "உயவேன் உயர்ந்தவரோடல்லால்" என்றும் சேருகை. ஸ்வரூபாநுகூலமான காலக்ஷேபமாவது:— பகவத்குணாநுபவத்தைப் பிறரில் வ்யாவ்ருத்தமாக ஒன்று சொல்லுகிற போதுபோக்கைத் தவிர்ந்து "பூசித்தும் போக்கினேன் போது" என்கிறபடியே போதுபோக்குகை. அதாவது:— ஸ்வரூபமென்றும், தாரகமென்றும், போக்யமென்றும் மறக்கமாட்டாமே சொல்லுகை. அதாவது:— "தாள்கள் தலையில் வணங்கி நாள்கடலைக்கழிமினே" என்றும், "கோவிந்தன் குணம் பாடி - ஆவிகாத்திருப்பேனே" என்றும், "தொல்சீரை ஓவாத ஊணாக உண்" என்றும், "ஏது செய்தால் மறக்கேன்" என்றும் போருகை. ஸ்வரூபாநுகூலமான இருப்பாவது:— த்ரவ்யார்ஜனத்துக்கு ஏகாந்தமென்றும், இவ்வருகு உண்டான பயநிவ்ருத்திக்கு உறுப்பென்றும், ஸ்வஜாதிவிச்லேஷம் பொறுமையும், புண்யக்ஷேத்ரவாஸமும் போக்யதைக்கு உறுப்பென்றும் இருக்கிற இருப்பைத்தவிர்ந்து, தேசத்திலே ப்ரமம் பிறக்கைக்கென்றும், தேசிகனை நித்யஸேவை பண்ணவாமென்றும், தேசவர்த்தகரான ஸாத்விகரோடே கலந்து பரிமாறுகைக்கென்றும், விபரீதங்கள் புகுராதவிடமென்றும் இருக்கை. அதாவது:— "தஞ்சைமாமணிக்கோயிலே வணங்கி" என்றும், "அதனுட்கண்ணு" என்றும், "கற்றார் சேர்கண்ணபுரம்" என்றும், "விளைந்த தானியமும் இராக்கதர் மீது கொள்ளகிலார்கள்" என்றும் இருக்கை. ஸ்வரூபாநுகூலமான பரிக்ரஹமாவது:— அநுகூலரை நெருக்கி ஸ்வீகரிக்கையும், ப்ரதிகூலர் பக்கல் ஸாபேக்ஷனாய் ஸ்வீகரிக்கையும், ஸ்வரூபப்ரயுக்தமானவற்றைப் பதார்த்தங்களுக்கு உறுப்பாக்கி ஸ்வீகரிக்கையும், அமுதுபடி சாத்துப்படிக்கு அர்ஹமானவற்றைப் பரிக்ரஹிக்கையும் தவிர்ந்து, க்ருஷி பண்ணுதல், முஷ்டி புகுதல், சிஷ்யன் ப்ரீதியாலே தரும் அத்தையாதல், ஸாத்விகர் திருவுள்ளப்ரஸந்நத்தாலே தருமத்தையாதல் பரிக்ரஹிக்கை. அதாவது:— "மெய் வருத்திக்கைசெய்துய்மினோ" என்றும், "பிச்சைபுக்காகிலும் எம்பிரான் திருநாமமே நச்சுமின்" என்றும், "சரீரமர்த்தம் ப்ராணஞ்ச" என்றும், "வருவிருந்தை அளித்திருப்பார்" என்கிறவர்களுடைய பதார்த்தங்களை ஸ்வீகரிக்கை. ஸ்வரூபாநுகூலமான போஜனமாவது:— க்யாதியைப் பற்றவாதல், பூஜையைப் பற்றவாதல், 'என்னது' 'நான் இடுகிறேன்' என்றுதல் இடுகிற போஜனத்தைத் தவிர்ந்து, "நெய்யமரின்னடிசில்" என்றும், "நல்லதோர் சோறு" என்றும், "மாற்றில் சோறு" என்றும், "உண்ணுஞ்சோறு" என்றும் சொல்லுகிறவற்றை புஜிக்கை. ஸ்வரூபாநுகூலமான

அத்யவஸாயமாவது:— இவ்வருக்கு உண்டான ரக்ஷகஸ்வீகாரங்களன்றியே, ஸ்வரூபவிரோதி நிவ்ருத்திபூர்வகமான புருஷார்த்தத்தைத் தருமென்கிற விச்வாஸம். அதாவது:— "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றும், "நீதாராய் பறை" என்றும், "உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்" என்றும், "நின்னருளே புரிந்திருந்தேன்" என்றும் இருக்கை. ஸ்வரூபாநுகூலமான அபேக்ஷையாவது:— புத்ரபச்வந்நாதிபதார்த்தத்தையும், ஸ்வர்க்கைச்வர்யபுருஷார்த்தத்தையும், கைவல்யபுருஷார்த்தத்தையும், பகவதநுபவத்தைத் தனக்கினிதென்று புஜிக்கிற பதார்த்தங்களையும் தவிர்ந்து "மாகவைகுந்தம் காண்பதற்கென் மனம் ஏகமெண்ணும்" என்றும், "அடியார்கள் குழாங்களை உடன்கூடுவதென்று கொலோ" என்றும், "காண்பதெஞ்ஞான்று கொலோ" என்றும், "வழுவிலா அடிமை செய்யவேண்டும்" என்றும் அபேக்ஷிக்கை என்று ஆச்சான்பிள்ளை.

26. ஈச்வரனளவில் உத்தாரகத்வப்ரதிபத்தியும், ஆசார்யனளவில் உபகாரகத்வப்ரதிபத்தியும், ஸ்ரீவைஷ்ணவர்களளவில் உத்தேச்யப்ரதிபத்தியும், உபாயத்தளவில் அத்யவஸாயப்ரதிபத்தியும், உபேயத்தளவில் த்வராப்ரதிபத்தியும், சரீரத்தளவில் விரோதிப்ரதிபத்தியும், சரீரஸம்பந்திகளளவில் பிரிவுகாரர் ப்ரதிபத்தியும், இதரரான ஸம்ஸாரிகளளவில் வழிபறிகாரர் ப்ரதிபத்தியும், ஐச்வர்யத்தளவில் அக்நிப்ரதிபத்தியும், விஷயத்தளவில் இடிப்ரதிபத்தியுமாகிற இப்பத்து ப்ரதிபத்தியும் ஒரு அதிகாரிக்கு அவச்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவதென்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்ததாகத் திருநகரிப்பிள்ளை அருளிச்செய்வர்.

இவற்றில் ஈச்வரனளவில் உத்தாரகத்வப்ரதிபத்தியாவது:— "ஆவிக்கோர் பற்றுக்கொம்பு" என்றும், "என்னுடை வாணாள்" என்றும், "ஆவியை அரங்கமாலை" என்றும், "உன்னைவிட்டு—எங்ஙனே தரிக்கேன்" என்றும் இருக்கை. ஆசார்யனளவில் உபகாரகத்வப்ரதிபத்தியாவது:— "என்னைத் தீமனம் கெடுத்தாய் உனக்கென் செய்கேன்?" என்றும், "மருவித் தொழும் மனமே தந்தாய்" என்றும், "தேவு மற்றறியேன்" என்றும், "மிக்க வேதியர் வேதத்தினுட்பொருள் நிற்கப்பாடி என் நெஞ்சுள் நிறுத்தினான்" என்றும், "ஒண்டமிழ்ச் சடகோபனருளையே - எண்டிசையுமறிய இயம்புகேன்" என்றும் இருக்கை. ஸ்ரீவைஷ்ணவர்களளவில் உத்தேச்யப்ரதிபத்தியாவது:— "சீதனையே தொழுவார் விண்ணுளாரிலும் சீரியர்" என்றும், "போதோடு புனல் தூவும் புண்ணியரே விண்ணவரில் பொலிகின்றார்" என்றும், "எத்தனையும் கண்குளிரக் காணப்பெற்ற இருநிலத்தார்க்கிமையவர் நேரொவ்வார்தாமே" என்றும், "பயிலும் திருவுடையார் யவரேனுமவர் கண்டீர் பயிலும் பிறப்பிடைதோறெம்மையாளும் பரமர்" என்றும் இருக்கை. உபாயத்தளவில் அத்யவஸாயப்ரதிபத்தியாவது:— "களைவாய் துன்பம் களையாதொழிவாய் களைகண் மற்றிலேன்" என்றும், "என் நான் செய்கேன் யாரே களைகண் என்னையென் செய்கின்றாய், உன்னாலல்லால் யாவராலும் ஒன்றும் குறை வேண்டேன்" என்றும், "நல்லானருளால்" என்றும், "நின்னருளே புரிந்திருந்தேன் இனியென் திருக்குறிப்பே" என்றும் இருக்கை. உபேயத்தளவில் த்வராப்ரதிபத்தியாவது:— "மாகவைகுந்தம் காண்பதற்கென் மனம் ஏகமெண்ணும் இராப்பகலின்றியே" என்றும், "அடியேற்கு வானுலகம் தெளித்தே என்றெய்துவது" என்றும், "அடியார்கள் குழாங்களை - உடன்கூடுவதென்றுகோலோ" என்றும், "வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்" என்றும் இருக்கை. சரீரத்தளவில் விரோதிப்ரதிபத்தி

யாவது:— "பாம்போடொரு கூறையிலே பயின்றாற்போல்" என்றும், "பொல்லாவாக்கை" என்றும், "ஆக்கை விடும்பொழுதெண்ணே" என்றும், "மங்கவொட்டு" என்றும், "மேம்பொருள்" என்றும் இருக்கை. சரீரஸம்பந்திகளளவில் பிரிவுகாரர் ப்ரதிபத்தியாவது:— "தாயே - நோயே, தந்தையே - நோயே" என்றும், "பெற்றாரும் சுற்றமும் என்றிவை பேணேன் நான்" என்றும், "பிரிந்தேன் பெற்ற மக்கள் பெண்டிரென்றிவை பின்னுதவாதறிந்தேன்" என்றும் இருக்கை. இதரரான ஸம்ஸாரிகளளவில் வழிபறிகாரர் ப்ரதிபத்தியாவது:— "நீசர்" என்றும், "தொழும்பர்" என்றும், "பூமி பாரங்கள்" என்றும் இருக்கை. ஐச்வர்யத்தளவில் அக்நி ப்ரதிபத்தியாவது:— "வீழ்பொருட்கிரங்கி" என்றும், "பெருஞ்செல்வம் நெருப்பு" என்றும், "ஆண்டார் வையமெல்லாம் அரசாகி முன் ஆண்டவரே மாண்டாரென்று வந்தார்" என்றும் இருக்கை. விஷயத்தளவில் இடிப்ரதிபத்தியாவது:— "புலனைந்து மேயும் பொறி" என்றும், "சாந்தேந்துமென்முலையார் தடந்தோள் புணரின்பவெள்ளத்து ஆழ்ந்தேன் அருநரகத்தழுந்தும் பயன் படைத்தேன்" என்றும், "பொறுத்துக்கொண்டிருந்தாற் பொறுக்கொணாப் போகமே நுகர்வான் புகுந்து, ஐவர் அறுத்துத்தின்றிட அஞ்சி நின்னடைந்தேன்" என்றும், "கடியார் காளையரைவர் புகுந்து காவல் செய்த அக்காவலைப்பிழைத்துக் குடிபோந்துன்னடிக்கீழ்வந்து புகுந்தேன்" என்றும், "கோவாயைவரென் மெய்குடியேறிக் கூறைசோறிவை தாவென்று குமைத்துப்போகார் நானவரைப் பொறுக்கிலேன் புனிதா! புட்கொடியாய்! நெடுமாலே! தீவாய்நாகணையில் துயில்வானே! திருமாலே! இனிச்செய்வதொன்றறியேன்" என்றும் இருக்கை.

உத்தாரகப்ரதிபத்தியை 'உயர்வற உயர்நலம்' தொடக்கமானவற்றிலும், உபகாரகத்வப்ரதிபத்தியை ஆறுகள் நாலிலும், உத்தேச்யப்ரதிபத்தியை 'பயிலும் சுடரொளி' 'நெடுமாற்கடிமை' தொடக்கமானவற்றிலும், அத்யவஸாயப்ரதிபத்தியை 'நோற்ற நோன்பு' 'ஆராவமுது' தொடக்கமானவற்றிலும், த்வராப்ரதிபத்தியை 'முனியே நான்முகன்' தொடக்கமானவற்றிலும், விரோதிப்ரதிபத்தியை 'முந்நீர் ஞாலம்' தொடக்கமானவற்றிலும், பிரிவுகாரர் ப்ரதிபத்தியை 'கொண்டபெண்டி'ரிலும், வழிபறிகாரர் ப்ரதிபத்தியை 'நண்ணாதார் முறுவ'லிலும், அக்நிப்ரதிபத்தியை 'ஒரு நாயக'த்திலும், இடிப்ரதிபத்தியை 'உண்ணிலாவிய'விலும், ப்ரதமாசார்யரான நம்மாழ்வார் விசேஷித்து அருளிச்செய்தாராகையாலே, இப்பத்து ப்ரதிபத்தியும் ஒரதிகாரிக்கு அவச்யம் ஜ்ஞாதவ்யமாகக்கடவதென்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்ததாகத் திருநகரிப்பிள்ளை அருளிச்செய்வர்.

27. "ஸங்கத்தைக் கழித்து, ஈஷணையைக் கழித்து, பால்யத்தைக் கழித்து, யௌவனத்தைக் கழித்து, ஜரையைக் கழித்து, மரணத்தைக் கழித்து, நரகத்தைக் கழித்து, அவித்யையைக் கழித்து, கர்மத்தைக் கழித்து, வாஸனையைக் கழித்து, தாபத்ரயத்தைக் கழித்து, ஸூக்ஷ்மத்ரயத்தைக் கழித்து, விரஜைக்கு அக்கரைப்படுத்தி, லோகப்ராப்தியை உண்டாக்கி, ரூபப்ராப்தியை உண்டாக்கி, ஸமீபப்ராப்தியை உண்டாக்கி, ஸாயுஜ்யத்தை உண்டாக்கி, ஜ்ஞானத்தை உண்டாக்கி, பலத்தை உண்டாக்கி, ஐச்வர்யத்தை உண்டாக்கி, வீர்யத்தை உண்டாக்கி, சக்தியை உண்டாக்கி, தேஜஸ்ஸையுண்டாக்கி, விக்ரஹாநுபவத்தை உண்டாக்கி, கைங்கர்யத்தை உண்டாக்கி, இவன் கைங்கர்யத்தைக்கண்டு அவன் உகந்தால் அவன் உகந்தபடி கண்டு உகக்கை சேஷத்வத்துக்கு ப்ரயோஜனம்" என்று ஆச்சான்பிள்ளை அருளிச்செய்தார்.

28. நம்பிள்ளையின் ஸ்ரீபாதத்து முதலிகளனைவரையும் கூட்டிக்கொண்டு பெரியவாச்சான்பிள்ளை தர்சனம் நிர்வஹித்தருளாநிற்க, நடுவில் திருவீதிப்பிள்ளை பட்டர் பெரியவாச்சான்பிள்ளையைப் பார்த்தருளி, “ குருபரம்பரையையும், த்வயத்தையும் உபதேசித்தவர்களோடு வாசியற உத்தேச்யரென்று ப்ரஸாதித்தீர்; பரமஸாத்விகரான ஸ்ரீவைஷ்ணவர்கள் உம்மை அனுவர்த்திக்கிறதுக்கு என்னினைத்திருப்பீர் ? ” என்று கேட்டருள், ஆச்சான்பிள்ளையும் “ அநுவர்த்திக்கிற ஸ்ரீவைஷ்ணவர்கள் அபிப்ராயத்தாலும், அநுவர்த்திப்பிக்கிற ஸர்வேச்வரனபிப்ராயத்தாலும், ஸ்ரீவைஷ்ணவத்வமடியைக் கண்டென்றிருந்தவோபாதி அடியேன் அஹங்காரியாகையாலே, அடியேனுடைய அபிப்ராயத்தாலும் ஸ்ரீவைஷ்ணவத்வம் உண்டென்றிருந்தது. ஆக, த்ரிவிதாபிப்ராயத்தாலும் அடியேனுக்கு முப்புரியூட்டின ஸ்ரீவைஷ்ணவத்வம் உண்டென்று நினைத்திருப்பன் ” என்று அருளினர்-

29. ஆச்சான்பிள்ளை கோஷ்டியிலே சில ஸ்ரீவைஷ்ணவர்கள் வந்து “ எங்களுக்குத் தஞ்சமாயிருப்பதொரு வார்த்தை அருளிச்செய்யவேணும் ” என்ன, அவரும் “ கலங்குகிறவனும், கலக்குகிறதும், கலங்கிக்கிடக்கிறவர்களுக்குத் தெளிவிக்கிறவனும், தெளிகிறவனும், தெளிந்திருக்கிறவனுமாயிறே இருப்பது. இதில் கலங்குகிறது ஜீவாத்மா; கலக்குகிறது அசித்து. கலங்கிக்கிடக்கிறார்கள் ஸம்ஸாரிகள்; தெளிவிக்கிறவன் ஆசார்யன். தெளிகிறான் சேதநன்; தெளிந்திருக்கிறான் ஈச்வரன். ஆகையால் ஆசார்யோபதேசேந தெளிந்தவன் கலங்குகிற தன்னையும், கலக்குகிற ப்ரக்ருதியையும், கலங்கிக் கிடக்கிற ஸம்ஸாரிகளையும் தஞ்சமன்றென்று கைவிட்டுத் தெளிவிக்கிற ஆசார்யனையும் தெளிந்திருக்கும் ஈச்வரனையும் பற்றுகைகாண் இவ்வாத்மாவுக்கு ஸ்வரூபம் ” என்று அருளிச்செய்தாராயிற்று.

வார்த்தாமாலை ஸம்பூர்ணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*——————*

## பெரியவாச்சான்பிள்ளை அருளிச்செய்த உபகாரஸ்ம்ருதி.

1. “ அந்தர்யாமியாய் நின்று ஸத்தையை நோக்கினீர். அழுந்திக்கிடந்த காலங்களிலே கரணங்களைத் தந்தருளினீர். அக்கரணங்களைக்கொண்டு வ்யபிசரியாதபடி ஆசார்யனை இடுவித்து அங்கீகரிப்பித்தீர். ரூபநாமங்களை உகந்தருளினீர். பரநிந்தையும், பரஸ்தோத்ரமுமே யாத்ரையாய்ப் போந்த நாளிலே த்வயத்தை உச்சரிப்பித்தீர். தேவரீர் செய்தருளின ஏற்றமெல்லாம் கீழ்ப்பட்டு ப்ரக்ருதி மேலிட்டுப் போராநின்றது. சரீராரம்பகங்களான கர்மங்களையும் பொறுத்து, அதிகாரிஸம்பத்தியையும் பிறப்பித்து அக்கரைப்படுத்தியருளீர் தேவரீர் திருவுள்ளமாகில். ” என்று ஆச்சான்பிள்ளை அநுஸந்தானம்.

2. “ அநந்யப்ரயோஜனன் அல்லாமையாலே உகப்புக்குப் பாத்ரனல்லேன். ஆர்த்தப்ரபன்னனல்லாமையாலே இரக்கத்துக்குப் பாத்ரனல்லேன். ப்ராமாதிகமல்லாமையாலே க்ஷமைக்குப் பாத்ரனல்லேன். உபகாரகனென்று உகந்தீர். அநந்யனென்று இரங்கினீர். அவர்ஜனீயனென்று பொறுத்தீர் ” என்று ஆச்சான்பிள்ளை.

பெரியவாச்சான்பிள்ளை உபகாரஸ்ம்ருதி ஸம்பூர்ணம்.

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

*——————*

Edited, Printed & Published by K. Srinivasa Iyengar, advocate, at Srinivasam Press, No. 8, Puthur Agraharam, Trichinopoly.

## பரந்த ரஹஸ்யத்தில் சில பிழை திருத்தங்கள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 6 | 34 | அஷ்டாக்ஷரமாக | அஞ்சு அக்ஷரமாக |
| 7 | 14 | ஓரக்ஷரங்களே | ஓரோரக்ஷரங்களே |
| 13 | 10 | ஆத்மவஸ்து | இந்த ஆத்மவஸ்து |
| 15 | 5 | கழிக்கிறது; இங்கு, | கழித்தது; பகவதேகரக்ஷ்யதைக்கு விரோதியான ஸ்வஸ்வாதந்த்ர்யத்தைக் கழிக்கிறது இங்கு. |
| 17 | 15 | மஹிஷீவரங்களும் | மஹிஷீவர்க்கங்களும் |
| 18 | 28 | கதை | கடிதை |
| 21 | 24 | ஸாக்ஷிகமுமாய் | பாக்ஷிகமுமாய் |
| 27 | 33 | அப்ருதக்ஸித்தி | அப்ருதக்புத்தி |
| 27 | 35 | ப்ருதக்ஸித்தி | ப்ருதக்புத்தி |
| 28 | 36 | ஸ்வீகார | ஸ்வீகார்ய |
| 34 | 6 | அன்றியிலே ஒழியவேணும். | அன்றியிலே ஒழியில் கர்மஜ்ஞாநாதிகளும் அதிக்ருதாதிகாரமன்றியிலே ஒழியவேணும். |
| 35 | 22 | ஸ்வீக்ருதோபயம் | ஸ்வீக்ருதோபாயம் |
| 41 | 9 | பெருமுலையாலே | வெறும் முலையாலே |
| 42 | 27 | மமகாரங்களும் | மமகாரங்களும் உள; இப்படி மூன்று வகைப்பட்ட அஹங்காரமமகாரங்களும் |

காஞ்சீபுரத்திலிருந்து, தெலுங்கு லிபியிலிருந்து தமிழ் லிபியில் பரந்த ரஹஸ்யத்தை எழுதி அனுப்பிய ஒரு ஸ்வாமி மூலத்துடன் ஒப்பிட்டுப்பார்க்காமல் அனுப்பியதால் இப்பிழைகள் ஏற்பட்டு விட்டன. தங்கள் புத்தகங்களில் இதைச் சேர்த்துக்கொண்டு திருத்திக்கொள்ளவும்.

இங்ஙனம்,
கி. ஸ்ரீநிவாஸய்யங்கார்,
பதிப்பாசிரியர்.

## பிழை திருத்தம்.

### பரந்த ரஹஸ்யம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 1 | 24 | க்ஷராந்தஸ்தம் | க்ஷராந்தஸ்ஸ்தம் |
| 3 | 11 | ஸகலாாத்த | ஸகலார்த்த |
| 4 | 6 | என்றும் | என்று |
| 4 | 10 | நாாயணு | நாராயணு |
| 4 | 21 | நாராயண | நாராயணஸ் |
| 4 | 35 | ப்ரஸங்க: | ப்ரஸங்காத் |
| 5 | 3 | கபிலஸ்மிருதியை | கபிலஸ்ம்ருதியை |
| 6 | 16 | எண்பெருக்கன்னலத் | எண்பெருக்கந்நலத் |
| 6 | 20 | கீழிச்சிரை | கிழிச்சீரை |
| 7 | 19 | க்ஷராந்தஸ்தம் | க்ஷராந்தஸ்ஸ்தம் |
| 8 | 35 | இவளுக்கு | இவளுக்குமுண்டான |
| 9 | 13 | என்றும் | என்று |
| 9 | 16 | என்றும் | என்று |
| 9 | 30 | தத்வமஸி | தத் த்வமஸி |
| 9 | 35 | ஜ்ஞாஜ்ஞள த்வாவஜாவீசநீசள | ஜ்ஞாஜ்ஞௌ த்வாவஜாவீசநீசௌ |
| 10 | 32 | தது. | தது: |
| 12 | 24 | இடுக்கிறது. | இடுகிறது. |
| 12 | 36 | ஸ்வபா | ஸ்வபாவ |
| 13 | 3 | கீழிச்சிரை | கிழிச்சீரை |
| 13 | 9 | யொபி | யோபி |
| 14 | 34 | த்வயக்ஷரஸ் | த்வ்யக்ஷரஸ் |
| 17 | 18 | பஞ்சோபநிஷ்ண் | பஞ்சோபநிஷண் |
| 17 | 33 | உயையனுயிருக்கை | உடையனுயிருக்கை |
| 19 | 16 | செஞ்சில் | நெஞ்சில் |
| 20 | 20 | பவநால் | புவநால் |
| 24 | 22 | அஞ்சலி | அஞ்ஜலி |
| 25 | 32 | கொன்ளுகைக்காக | கொள்ளுகைக்காக |
| 26 | 18 | காளாகியும் | களாகியும் |
| 27 | 30 | குமிரிருந்து | குமரிருந்து |
| 29 | 5 | கடையிநின்றும் | கடையினின்றும் |
| 30 | 10 | பட்டிருக்சிற | பட்டிருக்கிற |
| 31 | 15 | ஸமாச்ரயணக்துக்காக | ஸமாச்ரயணத்துக்காக |
| 32 | 14 | உபலக்ஷிகைக்கு | உபலக்ஷிக்கைக்கு |
| 34 | 26 | வர்த்மா | வர்த்தமா |
| 37 | 7 | மயக்குக்கு " ஆளாய் | மயக்குக் "களாய் |

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 46 | 24 | ஜிதேந்திரிய | ஜிதேந்த்ரிய |
| 51 | 34 | கர்மத்நுக்கும் | கர்மத்துக்கும் |
| 53 | 13 | தநஞ்சய | தநஞ்ஜய |
| 54 | 13 | லஜ்ஞா | லஜ்ஜா |
| 55 | 27 | உளவுகோலும் | உழவுகோலும் |
| 56 | 5 | கட்டங்க | கட்டடங்க |
| 56 | 12 | தநஞ்சய | தநஞ்ஜய |

## மாணிக்கமாலை முதலிய கிரந்தங்கள்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 5 | 4 | உண்ணுனள் | உண்ணு நாள் |
| 5 | 7 | ஆச்ரயம். | ஆச்ரயம் |
| 5 | 26 | அநாதரிகையும் | அநாதரிக்கையும் |
| 6 | 24 | ஸ்வருபவிசித்தி. | ஸ்வரூபவிசித்தி. |
| 10 | 4 | இருந்தே | இருந்ததே |
| 18 | 33 | பாரதந்தர்யத்தை | பாரதந்த்ர்யத்தை |
| 18 | 36 | பாகையாலே | யாகையாலே |
| 19 | 29 | பூர்வவாக்யத்தில் | உத்தரவாக்யத்தில் |
| 22 | 19 | பதமாயிருந்கும். | பதமாயிருக்கும். |
| 23 | 17 | ஸவஸ்வாமி | ஸ்வஸ்வாமி |
| 30 | 36 | கோலோ | கொலோ |

———